கழக வெளியீடு : ௧௨௬௯

# தொகை யகராதி



*

தொகுத்தவர் :
கருப்பக்கிளர் சு அ இராமசாமிப் புலவர் அவர்கள்




*

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
சென்னை-1 மதுரை-1 திருநெல்வேலி-6
1969

# பதிப்புரை

தமிழ் மொழியிலே முதன் முதலாக அகராதி தொகுக்கத் தொடங்கியவர் வீரமாமுனிவர் என்னும் வெளிநாட்டுக்காரர். இவருடைய தாய்மொழி தமிழ்மொழியன்று. சமயத் தொண்டு செய்வதற்காகத் தமிழ் நாட்டுக்கு வந்து தமிழ் மொழியைக் கற்றுணர்ந்தவர். வீரமாமுனிவர் அகராதி தொகுப்பதற்குமுன் நமது நாட்டில் அகராதியின் இடத்தில் நிகண்டு திவாகரம் முதலியன நின்று பொருள் விளக்கம் அளித்து வந்தன. இந்த நிகண்டு வகைகளும் பிங்கலநிகண்டு, சூடாமணி நிகண்டு, சேந்தன் திவாகரம், உரிச்சொல் நிகண்டு முதலிய பலவாம். இவை ஒரு சொல்லின் பல பொருள், ஒரு பொருளின் பல பெயர் என்பனவாதியாகப் பலவகையாக அமைந்திருந்தன.

வீரமாமுனிவர் நிகண்டு வகைகளைப் பின்பற்றித் தம்முடைய அகராதியை மொழியகராதி, பொருளகராதி, தொகையகராதி என்று பிரித்ததோடு தொடையகராதியுஞ் சேர்த்து நால்வகைப் படுத்திச் சதுரகராதி என்று பெயர் கொடுத்து வெளியிட்டார். இவருடைய அகராதி வெளிவந்த பிறகு அதனைப் பின்பற்றிப் பலபேர் அகராதி தொகுத்து வெளியிடலாயினர். மொழியகராதி என்பது ஒவ்வொரு சொல்லுக்கும் உள்ள பலவகைப் பொருளையுங் கூறுவது. பொருளகராதி என்பது ஒரு பொருளுக்குரிய பலபெயர்ச் சொற்களையுங் கூறுவது. தொகையகராதி என்பது ஒவ்வொரு பொருளிலும் எத்தனை வகையுண்டு என்று தொகைப்படுத்திச் சொல்வது. தொடையகராதி என்பது செய்யுளுக்கு எதுகையெடுக்குமாறு அகர வரிசையில் அமைந்தது. இதனை எதுகை யகராதி என்றுங் கூறலாம்.

இக்காலத்தில் புத்தகம் வெளியிடும் ஒவ்வொருவரும் அகராதி வெளியிடுவதையும் மேற்கொண்டுள்ளனர். காலப் போக்கிற்கேற்ப அகராதிகளும் பலவாக வளர்ந்து இக்காலத்

தில் பலர் புதுப்புதுமுறையில் அகராதிகள் வெளியிடுகின்றனர் ஒவ்வொரு பொருளும் காலப்போக்கில் வளர்ந்து வருவதை போலவே இவ்வகராதிகளும் வளர்ந்து வருகின்றன. தொகையகராதியைத் தனியாக எவரும் வெளியிட்டிருப்பதாகத் தெரியவில்லை. வீரமாமுனிவர் செய்த தொகையகராதிப் பகுதி இந்நாளில் மிக வளர்ந்து பெருகியுள்ளது. இப்பொழுது அவ்வகராதிக்கண் இல்லாத சொற்களில் ஆயிரத்திற்கு மேற்பட்டவைகளைத் தொகுத்து அத்தொகையகராதியில் இணைத்து இப்பொழுது இதனைத் தனியே வெளியிடுகின்றோம்.

இப்புதிய தொகையகராதியில் நூல் பிரிவுகள் முதலியன சேர்க்கப்பட் டிருக்கின்றன. ஒரு நூல் பிரிக்கப்பட்டுள்ள வகையையும் இதனைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். இத்தொகையகராதியைக் கழகஆட்சியாளர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் விரும்பியாங்கு விரிவுபடுத்தித் தொகுத்தளித்த கருப்பக்கிளர் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கட்குக் கழகத்தின் நன்றி உரித்தாகும். இவ்வகராதியை அனைவரும் பெற்றுப் பயன் படுத்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

திருச்சிற்றம்பலம்

# தொகை யகராதி



## அ

அகக்கண்—(௨) மனக்கண், ஞானக்கண்.

அகக்காழிற்குரியன—(௨௧) இலை, குருத்து, தளிர், மலர்தோடு, கப்பு, கம்பு, கொத்து, கொம்பு, நனை, இதழ், தாது, அல்லி, புல்லி, முளை, கிழங்கு, காய், பழம், தோல், செதில், வீழ்.

அகக்கூத்து—(௨) சாந்திக் கூத்து, விநோதக்கூத்து, என்னை? "அவைதாம் சாந்திக் கூத்தும் விநோதக்கூத்துமென் றுய்ந்துறவகுத்தன னகத்தியன் றனே" என்றுராகலின் அவற் றுள்—சாந்திக் கூத்தாவது நாய கன் சாந்தமாக ஆடியகூத்து. விநோதக்கூத்தாவது குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவையென் பனவாம்.

அகக்கூத்துக்கை—(௨) எழிற்கை, தொழிற்கை.

அகங்காரவகை—(௩) தைசதாங்காரம், பௌதிகாங்காரம், வைதிகாங்காரம்.

அகச்சமயம்—(௬) சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம்.

அகச்சுவை—(௩) இராசதம், சாத்துவிகம், தாமதம்.

அகதத்துவம்—(௫) சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம்.

அகத்திணை—(௭) கைக்கிளை, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், பெருந்திணை.

அகத்திணைமெய்ப்பாடு—(௨௪) புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல், நகுநய மறைத்தல், சிதைவு, பிறர்க்கின்மை, கூழை விரித்தல், காதொன்று களைதல், ஊழனிதைவரல், உடை பெயர்த்து உடுத்தல், அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல், இல்வலியுறுத்தல், இருகையுமெடுத்தல், பாராட்டெடுத்தல், மடந்தபவுரைத்தல், ஈரமில் கூற்றம், ஏற்றலர்நாணல், கொடுப்பவை கோடல், தெரிந்துடம்படுதல், திளைப்பு வினை மறுத்தல், கரந்திடத்தொழிதல், கண்டவழியுவத்தல், புறஞ் செயச்சிதைதல், புலம்பித்தோன்றல், கலங்கி மொழிதல், கையறவுரைத்தல்.

அகத்திணையின் உறுப்புக்கள்—(கஉ) இயல்பகத்திணை, வகையகத்திணை, பொதுவகத்திணை, சிறப்பகத்திணை, உவமை அகத்திணை, புறநிலையகத்திணை, எதிர்நிலையகத்திணை, கருவியகத்திணை, காரிய அகத்திணை, காரக அகத்திணை, முன்னவையகத்திணை, பின்னவை யகத்திணை.

அகத்தியர் மாணாக்கர்—(கஉ) செம்பூட்சேஎய், வையாபிகர். அதங்கோட்டாசான், அவிநயர், காக்கை பாடினியர், தொல்காப்பியர், துராலிங்கர், வாய்ப்பியர், பனம்பாரனார், கழாரம்பர், நற்றத்தர், வாமனர்.

அகத்திவகை—(௪) அகத்தி, செவ்வகத்தி, பேயகத்தி, சீமையகத்தி.

அகத்திலக்கணம்—(க௦) எண், பெயர், முறை, பிறப்பு, உருவம், மாத்திரை, முதனிலை, இறுதிநிலை, இடைநிலை, போலி.

அகநாடகவுரு—(உஅ) கந்தமுதலாகப் பிரபந்தவுருவீருக என்பனவாம். அவற்றுள் கந்தமாவது அடிவரை யறையுடைத்தாய் ஒரு தாளத்தாற் புணர்ப்பது. பிரபந்தமாவது அடிவரை யறையின்றிப் பல தாளத்தாற் புணர்ப்பது. மற்றைய பெயர்களை வந்துழிக் காண்க.

அகப்பகை—(௬) காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மார்ச்சரியம்.

அகப்பாட்டுச்சமயம்-(௬) பாடாணவாத சைவம், சங்கிராந்த வாத சைவம், பேதவாதசைவம்,பேத சைவம், சுத்தசைவம், அவிகார வாத சைவம்.

அகப்பாட்டுத்தலைவன்—(உ) பாட்டுடைத் தலைவன், கிளவித்தலைவன், இவருள் உயர்ந்தோன் பாட்டுடைத் தலைவனும்.

அகப்புறத்தத்துவம்—(எ) காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை.

அகப்புறம்—(க௦) காந்தன், வள்ளி, சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, இல்லாண்முல்லை, பாசறை முல்லை.

அகப்பொருட்டிணை—(௩) ஐந்திணை, பெருந்திணை, கைக்கிளை.

அகராதி நூல்கள்—(௪) பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி, தொடையகராதி. இவ்வகராதிகள் தொடக்கத்தில் தோன்றின. இப்பொழுது பல வகையான அகராதிகள் தோன்றிப் பெருகி வருகின்றன.

அகலக்கவி—(அக) பிள்ளைக்கவி, கலம்பகம், பன்மணிமாலை, மும்மணிக்கோவை, அகப்பொருட்கோவை, தொகைநிலைச் செய்யுள், இணைமணிமாலை, இரட்டைமணிமாலை, மும்மணிமாலை, நான்மணிமாலை, இருபாவிருபஃது, ஒலியந்தாதி, ஊரின்னிசை, வருக்கமாலை, கைக்கிளைச் செய்யுள், மங்கலவள்ளை, இரட்டைமாலை, ஊர்நேரிசை, பெயர் நேரிசை, மெய்க்கீர்த்தி, கரப்புமாலை, வேனின் மாலை, பல்சந்தமாலை, அங்கமாலை, வசந்தமாலை, நவமணிமாலை, பரணி, தசாங்கப்பத்து, பதிற்றந்தாதி, நூற்றந்தாதி, அட்டமங்கலம், அலங்காரபஞ்சகம், ஊசல், சின்னப்பூ, சதகம், எண்செய்யுள் ஐந்திணைச்செய்யுள், நாழிகை வெண்பா, நானூற்பது, பயோதரப்பத்து, நயனப்பத்து, வில் விருத்தம், வேல்விருத்தம், வாள்

விருத்தம், செங்கோல் விருத்தம், யானைவிருத்தம், குதிரை விருத்தம், நாட்டுவிருத்தம், ஊர் விருத்தம், கொடைவிருத்தம், பெருங்காப்பியம், சிறுகாப்பியம், வளமடல், உலாமடல், உலா, அநுராகமாலை, மெய்க்கீர்த்தி மாலை, புகழ்ச்சிமாலை, நாமமாலை, தாரகைமாலை, உற்பவமாலை, தாணைமாலை, வரலாற்றுவஞ்சி, செருக்களவஞ்சி, பொருள்வஞ்சி, குழமகன், பாதாதிகேசம், கேசாதிபாதம், யானைத்தொழில், சிறுபாணுற்றுப்படை, பெரும் பாணுற்றுப்படை, பொருநராற்றுப்படை, திருமுருகாற்றுப் படை, மலைபடுகடாம், குறிஞ்சிப் பாட்டு, அகப்பாட்டு, புறப் பாட்டு என்பனவாம்.

அகலக்கவிவகை—(௨) தொடர் நிலை, தனிநிலை.

அகவலிறுவன—(௬) ஏ ஓ ஈ ஆய் என ஐ.

அகவலோசை—(௩) ஏந்திசை, யகவலோசை, ஒழுகிசை யகவலோசை, தூங்கிசை யகவலோசை.

அகவல்—(௬) அகப்பாவகவல், புறப்பாவகவல், நூற்பாவகவல், உறுப்பினகவல், சித்திரவகவல் ஏந்திசையகவல்.

அகவற்சீர்—(௪) நேர்நேர், நிரை நேர், நிரைநிரை, நேர்நிரை, இவற்றிற்கு வாய்பாடு, தேமா, புளிமா, கருவிளம், கூவிளம், என்பனவாம்.

அகவற்பாவகை—(௪) நேரிசை யாசிரியப்பா, இணைக்குறளாசிரி யப்பா, நிலைமண்டில வாசிரி யப்பா, அடிமறிமண்டில வாசிரி யப்பா.

அவற்பாவினம்—(௩) ஆசிரியத் தாழிசை, ஆசிரியத்துறை, ஆசி ரிய விருத்தம்.

அகவற்றளை—(௨) நேரொன்று சிரியத்தளை, நிரையொன்றுசிரி யத்தளை.

அகவாயுக்கள்—(௫) வைரம்பன், முக்கியன், பிரபஞ்சனன், அந் தரியாமி, மகாப் பிராணன்.

அகில்—(௨) அகில், செவ்வகில்.

அகிற்கூட்டு—(௫) சந்தனம், கர்ப் பூரம், எரி.

அகிற்கூட்டு—(௩) சந்தனம், கர்ப் பூரம், எரிகாசு, ஏலம், தேன், நேர்கட்டி.

அக்கினி—(௩) ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி யம்.

அக்கினி—(௫) ஆகவனீயம், தக்கி ணாக்கினி, காருகபத்தியம், சப் பியம், ஆவசத்தியம்.

அக்கினி—(௫) கிழக்கு மேற்கு, வடக்கு தெற்கு என்னும் நான்கு பக்கத்தும் அக்கினி மூட்டப் பட்டு மேலிற் சூரியாக்கினியுங் கொண்டுள்ளனவாம்.

அக்கினி—(௫) இராகம், கோபம், காமம், சடம், தீபனம்.

அக்கினிகீடம்—(௨௪) கௌடிந் யம், கண்டபம், லாதரி, பத்திர விருட்சிகம், சீநாதுகம், பிர்மணி கம், விடபப்பிரமணம், பாகியகி, பிச்சிலம், கும்பி, வர்ச்சகீடம், அருமேதகம், டுண்டுபம், பதும கீடம், மகரம், சதபாதி, பஞ்சா வம், பாந்தமச்சம், சூட்சுமதுண் டம், அதிகர்த்தபி, கீடக்கிரமம், சாரஷி, சீதபி, சிலேஷ்மகம் என்பன. இவற்றின் விஷயத்தி ணல் கடிவாயில் இரத்தங்கம்மி யிருப்பைப்பூப் பேரீச்சங்காய் இவற்றைப்போலக் கொப்புளம் எழும்புதலும் எரிச்சலும் பேதி யும் உண்டாகுமென்பர்.

அக்கினி தேவர்வகை—(௩) சுசி, பவமானன், பாவகன்.

அக்கினியிடத்துப் பொருள்—(ங) வெம்மை, புகை, ஒளி.

அங்கக்கிரியை—(கஉ) சரிகை, திரிகை, புரிகை, சமகலிகை, ஊர்த்துவகலிகை, பிருட்டகம், அர்த்தபிருட்டகம், சுவத்திகம், உல்லோலம், குர்த்தனம், வேட்டனம், உபவேட்டனம், தானப்பதப்பிராயவிருத்தம், உட்சேபணம், அவட்சேபணம், நிகுஞ்சனம்.

அங்கதருமம்—(அ) ஐயப்படாமை, அவாவின்மை, உவர்ப்பின்மை, மயக்கமின்மை, பழிநீக்கல், உறுதிநிறுத்தல், பேரன்புடைமை, அறம் விளக்கல்.

அங்கம்—(ங) தலை, முகம், இருதயம்.

அங்கம்—(ஞ) நெற்றி, இருதோள், மார்பு, இருகை, இருகால்.

அங்கம்—(ச) தேர், கரி, பரி, காலாள், இவை சதுரங்க மெனவும் படும்.

அங்கம்—(ரு) திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் இவை பஞ்சாங்கமெனப்படும்.

அங்கம்—(சு) மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம்.

அங்கம்—(சு) படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண்.

அங்கம்—(கO) மலை, யாறு, நாடு, ஊர், மாலை, பரி, கரி, முரசு, கொடி, செங்கோல், இவையரசர்க்குரிய தசாங்கம்.

அங்கயோகம்—(அ) இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி; இவற்றுள் இயமம்-கொல்லாமை, மெய்ம்மைகூறல், கள்ளாமை, பிறர் பொருளிச்சியாமை, இந்திரியமடக்கல்; நியமம்—தவம், தூய்மை, தத்துவநூலோர்தல், மனமுவந்திருத்தல், தெய்வம் வழிபடல்; ஆதனம்-சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம்; அவையாவன சுவத்திகம்-தொடைக்கு முழங்காற்கு நடுவே யிரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தியிருமாநிருத்தல், கோமுகம்-சகன பக்கத்தி லிருகாற்பரட்டையுமாறவைத் தவ்விருகாற் பெருவிரலைக் கைப்பிடித்திருத்தல், பதுமம்-இருதொடை மேலுமிரண்டுள்ளங்காலையுமாறித் தோன்றவைத்தல், வீரம்-வலத்தொடையிலிடக்காற்பரட்டைச் சேர்த்தியிருமாப்புற்றிருத்தல். கேசரி-பீசத்தின்கீழ்ச் சீவனியிடத்துப் பரட்டைவைத்து இடமுழங்கையை முழந்தாளில் வைத்தங்குலிவிரித்து நாசியைப் பார்த்திருத்தல், பத்திரம்-பீசத்தின் கீழ்ச்சீவனிடத் திருகாற்பரட்டையும் வைத்தவ் விருபதத்தையுமிருகையா லிறுகப்பிடித்தசையா திருத்தல், முத்தம்-இடக்காற் பரட்டாற் சீவனியை யழுத்தி வலக்காற் பரட்டின் கீழுந்தவிருத்தல், மயூரம்-முழங்கையிரண்டு முந்திப்புறத்திலழுந்தப் புவியிற் கையூன்றிக் காலிட்டித் தலை நிமிர்த்திருத்தல், சுகம்-சுகமுந் திடமு மெவ்வாறிருக்கி னெய்துமோ அவ்வாறிருத்தல், பிராணயாமம்-பிராணவாயுவை இரேசக பூரக கும்பகஞ் செய்தல், பிரத்தியாகாரம்-உபாதியை நீக்கியுண்ணோக்கல் தாரணை-கண்டம் இதயம் நெற்றிக்கபாலம் நாபி இவற்றிலொன்றிற் சந்ததம் சிந்தைவைத்தல், தியானம்-ஐம்புல னடக்கியோகஞ் சேர்த்தல், சமாதி-இந்திரியமுதலிய தத்துவ சேட்டைகட் கேதுவா யாக்கையுனின்றவற்றேடு கூடினு மவற்றிற் பற்றின்றி யிருக்கு மான்மாவாயகி-

தன்னைத்தான் காண்டல், இவற்றுள் இயமம் நியமம் ஆதனம் பிராணயாமம் என்பன யோகத்திற்சரியை. பிரத்தியாகாரம் தாரணை என்னு மிரண்டும் யோகத்திற்கிரியை, தியானம் யோகத்தில் யோகம், சமாதி யோகத்தில் ஞானம்.

அங்கவியலின் அதிகாரங்கள்—(கஉ) அமைச்சு, சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை, தூது, மன்னரைச் சேர்ந்தொழுகல், குறிப்பறிதல், அவையறிதல், அவையஞ்சாமை, நாடு, அரண், பொருள் செயல்வகை, படைமாட்சி, படைச் செருக்கு, நட்பு, நட்பாராய்தல், பழமை, தீநட்பு, கூடாநட்பு, பேதைமை, புல்லறிவாண்மை, இகல், பகைமாட்சி, பகைத்திறந் தெரிதல், உட்பகை, பெரியாரைப் பிழையாமை, பெண் வழிச்சேறல், வரைவின்மகளிர், கள்ளுண்ணமை, சூது, மருந்து.

அங்காகமத்தின் பகுப்பு—(கஉ) ஆசாராங்கம், சூத்திர கிருதாங்கம், தானங்கம், சமவாயாங்கம், வியாக்கியாப் பிரஞ்ஞப்பத்யாங்கம், ஞாத்ருகதாங்கம், உபாசகாத்தியானங்கம், அந்தக்கிருத்தசாங்கம், அநுத்தரோபபிரதிகதசாகம், பிரச்சின வியாகரணங்கம், விபாகசூத்திராங்கம், திருட்டி வாதாங்கம்.

அசங்கதவிரி—(சு) அர்த்தசந்திரம், உத்தானம், சிருங்காடம், கர்க்கடகசிருங்காரி, காகபாரி, கோதிகா.

அசுவினிதேவர்—(உ) தத்திரன், நாதத்தியன்.

அசை—(உ) நேரசை, நிரையசை.

அச்சம்—(ச) அணங்கு, விலங்கு, கள்வர், அரசன்.

அஞ்சனங்கள்—(ரு) புட்பாஞ்சனம், நீலாஞ்சனம், இரசாஞ்சனம், சுரோதோஞ்சனம், சௌவீராஞ்சனம்.

அஞ்சுமானுபதேசம்—(கஉ) வித்தியாபுராணம், பாஸ்வராகமம், நீலலோகிததந்திரம், பிரகரணகமம், பூததந்திரம், ஆத்மாலங்காரம், காசிபாகமம், கௌதாகமம், மகேந்திராகமம், பிரமாகமம், வசிட்டாகமம், ஈசானியோத்தரம்.

அஞ்ஞானத்தின் சத்தி—(உ) ஆவரணசத்தி, விட்சேபசத்தி.

அஞ்ஞானம்—(உ) சமட்டியஞ்ஞானம், வியட்டியஞ்ஞானம்.

அஞ்ஞானம் (வேறு)—(உ) மூலாஞ்ஞானம், தூலாஞ்ஞானம்.

அஞ்ஞானம் (வேறு)—(உ) காரியாஞ்ஞானம், காரணஞ்ஞானம்.

அஞ்ஞான விரோதம்—(௩) சிரவணம், மநநம், நிதித்தியாசனம்.

அடி—(ரு) குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி.

அடிகள்—(கரு) இயலடி, உரியடி, பொதுவடி, இயற்குறளடி, உரிக்குறளடி, பொதுக்குறளடி, இயற்சிந்தடி, உரிச்சிந்தடி, பொதுச்சிந்தடி, இயலளவடி, உரியளவடி, பொதுவளவடி, இயனெடிலடி, உரிநெடிலடி, பொதுநெடிலடி, இயற்கழிநெடிலடி, உரிக்கழிநெடிலடி, பொதுக்கழிநெடிலடி.

அடித்தொடை—(ரு) அடிமோனைத்தொடை, அடியெதுகைத்

தொடை, அடிமுரண்டொடை, அடியியைபுத்தொடை, அடியளபெடைத்தொடை.

அடிமைகள்—(சஎ) வீட்டடிமை, விலையடிமை, அடையடிமை, தாயவடிமை, அனுகாலபிருதன், ஈட்டடிமை, கடன்மீளடிமை, போரிற் கிடைத்தவன், பணசிதன், தானுமடிமை, துறவுகெட்டவடிமை, செயல்பட்டவடிமை, சோற்றடிமை, வடவாபிருதன், கொள்ளக்கூடாதடிமை.

அடியவரிலக்கணம்—(௩) உள்ளிலக்கணம், புறத்திலக்கணம், பொதுவிலக்கணம்.

அடியவருள் தொகையார்—(௯) தில்லை வாழந்தணர், பத்தராய்ப் பணிவார்கள், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், பொய்யடிமையில்லாப் புலவர், திருவாரூர்ப் பிறந்தார், முப்பொழுதுந்திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலுமடிச்சார்ந்தார்.

அடியவர்—(௩) சாமுசித்தர், வைநயிகர், பிராகிருதர்.

அடியவர்—(சஉ) சுந்தரமூர்த்தி நாயனர், திருநிலகண்டர், இயற்பகை நாயனர், இளையான்குடி மாற நாயனர், மெய்ப்பொருணயனர், விறன்மிண்ட நாயனர், அமர்நீதி நாயனர், எறிபத்த நாயனர், ஏனதிநாத நாயனர், கண்ணப்ப நாயனர், குங்கிலியக் கலயநாயனர், மானக்கஞ்சாற நாயனர், அரிவாட்டாயநாயனர், ஆனயநாயனர், மூர்த்தி நாயனர், முருக நாயனர், உருத்திரபசுபதி நாயனர், திருநாளைப் போவார் நாயனர், திருக்குறிப்புத்தொண்டநாயனர், சண்டேசுர நாயனர், தண்டியடிகணயனர், திருநாவுக்கரசு நாயனர், குலச்சிறை நாயனர், பெருமிழலைக்குறும்ப நாயனர், காரைக்காலம்மையார், அப்பூதியடிகணயனர், நமிநந்தியடிகணயனர், திருஞானசம்பந்த நாயனர், ஏயர்கோன் கலிக்காம நாயனர், திருமூலநாயனர், மூர்க்கநாயனர், சோமாசி மாற நாயனர், சாக்கியநாயனர், சிறப்புலி நாயனர், சிறுத்தொண்ட நாயனர், கழறிற்றறிவார் நாயனர், கணநாத நாயனர். கூற்றுவ நாயனர், புகழ்ச்சோழ நாயனர், நரசிங்க முனையரைய நாயனர், அதிபத்தநாயனர், கலிக்கம்பநாயனர், கலிய நாயனர், சத்தி நாயனர், ஐயடிகள் காடவர்கோனயனர், கணம்புல்ல நாயனர், காரிநாயனர், நின்றசீர் நெடுமாற நாயனர், வாயிலா நாயனர், முனையடுவார் நாயனர், கழற்சிங்க நாயனர், இடங்கழி நாயனர், செருத்துணை நாயனர், புகழ்த்துணை நாயனர், கோட்புலி நாயனர், பூசலார் நாயனர், மங்கையர்க்கரசியார், நேசநாயனர், கோச்செங்கட்சோழ நாயனர், திருநீலகண்டயாழ்ப்பாண நாயனர், சடைய நாயனர், இசைஞானியார்.

அடியவர்சாதனம்—(௩) குரு, இலிங்கம், சங்கமம்.

அடுக்கிசை வண்ணம்—(உ0) குறிலகவலடுக்கிசைவண்ணம், நெடிலகவலடுக்கிசைவண்ணம், வலிய கவலடுக்கிசைவண்ணம், மெலியகவலடுக்கிசைவண்ணம், இடையகவலடுக்கிசைவண்ணம்: குறிலொழுகலடுக்கிசை வண்ணம், நெடிலொழுகலடுக்கிசைவண்ணம், வலியொழுகலடுக்கிசைவண்ணம், மெலியொழுகலடுக்கிசைவண்ணம், இடையொழுக லடுக்கிசை வண்

ணம், குறில்வல்லிசையடுக்கிசை வண்ணம், நெடில்வல்லிசை யடுக்கிசைவண்ணம், வலிவல் லிசையடுக்கிசைவண்ணம்,மெலி வல்லிசை யடுக்கிசை வண்ணம், இடைவல்லிசையடுக்கிசைவண் ணம், குறின் மெல்லிசையடுக் கிசைவண்ணம், நெடின்மெல் லிசையடுக்கிசைவண்ணம், வலி மெல்லிசையடுக்கிசைவண்ணம், மெலிமெல்லிசையடுக்கிசைவண் ணம், இடைமெல்லிசையடுக் கிசைவண்ணம்.

அடுக்குச்சொல்—(௪) பெயர்ச் சொல்லடுக்கு, வினைச்சொல் லடுக்கு, இடைச்சொல்லடுக்கு, உரிச்சொல்லடுக்கு.

அடுக்குச்சொல் —(௯) பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில், வினை, இடை, உரி.

அணி—(௨) சொல்லணி, பொரு ளணி.

அணிவகுப்பின் விரி—(௩௦) பிற தரம், திருடகம், சியாவத்தம், குட்சி, பிரதிட்டம், சுப்பிரதிட் டம், சிநேகம், விசயம், சஞ்ச யம், விசாலம், நிசயம், சூசி, தூணு, கன்னம், சமுமுகம், இரதாசியம், சருவதோபத்திரம், துர்சயம், அர்த்தசத்திரம், உத் தானம், சிருங்காடம், கர்க்கட கம், சிருங்காரி, காகபாரி, கோதிகா, கோமூத்திரிகை, கிஞ்சகம், சஞ்சாரி, சகடம், பந்தம்.

அடுக்குநிலைப் பொருள்—(௧௦) அசை நிலை, விரைவு, துணிவு, உடம்பாடு, ஒரு தொழின் பல கானிகழ்தல், வெகுளி, உவகை, அச்சம், அவலம், இசை நிறை.

அணிவகுப்பு வகை—(௪) தண் டம், மண்டலம், அசங்கதம், போகம். அவற்றுள் தண்டமா வது சேனையைக் குறுக்காக நிறுத்துவது. மண்டலமாவது பாம்பு மண்டலமிடுவது போலச் சேனையை நிறுத்துவது. அசங் கதமாவது சேனையை வேறு வேருக நிறுத்துவது, போகமா வது நால்வகைச் சேனைகளையும் ஒன்றுக்குப்பின் ஒன்ருக நிறுத் துவது.

அணிவதப்புறுப்பு—(௭) உரம், இறக்கை, இரண்டு, மத்தியம், பிரதிக்கிரகம், பிரிட்டம், கோடி.

அணிவியூகவிரி—(௩௦) பிறதரம், திருடகம், திருயாவத்தம், குட்சி, பிரதிட்டம், சுப்பிரதிட்டம், சியே நம், விசயம், சங்கயம், விலாசம், நிசயம், சூசீ, தூணுகர்ணம், சமுமுகம், இரதாசியம், வல யகம், சர்வதோபத்திரம், துர்ச யம், அர்த்தசந்திரம், உத்தா னம், சிருங்காடகம், கர்க்கடக சிருங்காரி, காகபாரி, கோதிகா, கோமூத்திரிகை, கிஞ்சகம், சஞ் சாரி, சகடம், பந்தம் என்பன வாம். இவற்றைக் காமாந்தகம் என்னும் நூலிற் காண்க.

அணுக்கள்—(௫) உயிரணு, நில வணு, நீரணு, தீயணு, காற் றணு. (ஆசீவகநூல் வழக்கு).

அணுவகை—(௩) அணு, பர மாணு, இலேசம்.

அண்டம்—(௫) பிருதிவியண் டம், அப்பு அண்டம், தேயுவண் டம், வாயுவண்டம், ஆகாய அண்டம்.

அண்டவகை—(௩) சிற்றண்டம், பேரண்டம், ஏரண்டம்.

அதமதானவகை—(௭) ஆர்வம், புகழ், அச்சம், கைம்மாறு, கார ணம், கண்ணோட்டம், கடப் பாடு.

அதர்வணமறை உபநிடதங்கள்— (௩௧) காருடம், தத்தாத்திரே

யம், அயக்கிரீவம், கிருட்டிணம், கோபாலதபனம், பிரச்சினம், திரிபாத்விய மகாநாராயணம், இராமரகசியம், முண்டகம், மாண்டுக்கியம், அதர்வசிரசு, கணபதி, மகாவாக்கியம், பசு மசாபாலம், பாவனே, தேவி, திரிபுராதபினி, பரப்பிரமம், பாசு பதம், ஆத்மம், சூரியன், அன்ன பூரணே, பிருகச்சாபாலம், நர சிம்மதாபனி, நாரதபரிவிராச கம், சீதை, இராமதாபனி, சர பம், சாண்டில்லியம், பரமஹம்ச விராசகம்.

அதிகதுக்கங்கள்—(௧அ) கோள், துணிவு, துரோகம், பொருமை, பிறன் குணத்திற்குச் சகியாமை, பிறர்பொருள்அபகரித்தல், காரணமின்றிக் கடிதல்,வைதல், வேட்டையாடுதல், சூதாடு தல், பகனித்திரை, பய னில் கூறல், பிறனில் விழை தல், மதுப்பருகல், கூத்தாடல், இசைபாடல், வாத்தியமுழக்க விரும்பல், வீணேதிரிதல் என் பனவாம்.

அதிக துன்பங் கொடுப்பன—(௪) மதுபானம், சூது, பரதாரக மனம், வேட்டை.

அதிகாரர்—(௩) கர்மகாண்டி, பத்திகாண்டி, ஞானகாண்டி.

அதிகாரிகள்—(௫) கருமி,முமூட்சு, அப்பியாசி, அநுபவி, ஆருடன்.

அதிகாரிகள்—(௩) கருமகாண்டி, புத்திகாண்டி, ஞானகாண்டி.

அதிகுய்யாட்டகர்—(௮) அரிச்சந் திரன், சீசைலன், கலபமானன், மாதகேச்சுவரன், மகாகாளன், மத்திமன், கேதாரன், வயி ரவன்.

அதிசயமொழி—(௰) ஆஅ, ஓஒ, அத்தோ, அந்தோ, அன்னே, ஐயோ, அக்கோ, அச்சோ, என்னே, எற்றே.

அதிசயம்—(௩) கர்மக்கயாதிசயம், சகசாதிசயம், தெய்வீகாதிசயம்.

அதிசயவணியின் வகை—(௬) பொருளதிசயம், குணஅதிசயம், தொழில் அதிசயம், ஐயஅதி சயம், துணிவு அதிசயம், திரிபு அதிசயம்.

அதிசயாலங்காரவகை—(௬) பொருளதிசயாலங்காரம், குணு திசயாலங்காரம், தொழிலதிச யாலங்காரம், துணிவதிசயாலங் காரம், திருவதிசயாலங்காரம், ஐயவதிசயாலங்காரம்.

அதிதாகமோபபேதம்—(௪) பிரபூ தாகமம், பரோற்பூதாகமம், பார் வதீதந்திரம், பதும சாங்கிதை.

அதிசாரத் திரவியங்கள் — (உஅ) அதிவிடயம், ஆவிரை, இரு பூலா, இலவம்பிசின், ஓமம், கஞ்சா, கருங்காலிப்பிசின், கரு வேல், காட்டாத்திப்பூ, கிராம்பு, கீழ்க்காய்நெல்லி, குங்கிலியம், சாதிக்காய், சிறுகாஞ்சொறி, நீர்முள்ளிவிதை, சுக்கு, திப்பிலி, தென்னம்பாளே, தேன், புளியங் கொட்டைத் தோல், புளியம் வேர், மாதுளம்பிஞ்சு, மாவிரை, முத்தக்காசு, வட்டத்திருப்பி, வறட்சுண்டி, வாழை, வெட் பாலையரிசி, வெள்ளிலோத்தி ரம்.

அதிபாதவகை—(௩) மானசிக பாதகம், வாயிக பாதகம், காயிக பாதகம்.

அதிமந்தம்—(௫) வாதாதிமந்தம், பித்தாதிமந்தம், சிலேட்டுமாதி மந்தம், இரத்தாதிமந்தம், அதாதிமந்தம், (கண்ணோய் வகை)

அதிருட்டிபூதனு கிரக தோடம்— (௧௪) அற்பப்பார்வை, வாந்தி, சுரம், இருமல், மலபேதம், தேக நிறம் மாறுதல், உடலில் தீ நாற் றம் வீசுதல், அசங்கிய நாற்

மடித்தல், இளைத்தல், உறக்க மின்மை, உதடுநோவு, தினவு, விக்கல், அச்சம், முலைப்பாலில் அசிங்கம், ஈனத்தொனி, நடுக் கம், (இவை குருட்டுப்பேயினால் உண்டாவன.)

அத்திகாயங்கள்—(ரு) சீவாத்தி காயம், அசீவாத்திகாயம், தர் மாத்திகாயம், அதர்மாத்தி காயம், ஆகாசாத்திகாயம்.

அத்தியாசங்கள்—(உ) ஞானத் தியாசம், அர்த்தாத்தியாசம்.

அத்தியாசங்கள்—(சு) கேவலசம் பந்தாத்தியாசம், சம்பந்தசகித சம்பந்தியத்தியாசம், கேவல தர்மாத்தியாசம், அந்நியோந்நி யாத்தியாசம், அந்நியதராத்தி யாசம்.

அத்தியாசம்—(ச) மித்தி யாத்தி யாசம், இதராத்தியாசம், இத ரேதராத்தியாசம், சத்தியாத்தி யாசம்.

அத்தியாச்சிரமிநாமம்—(சு) சீவன் முத்தன், அவதூதன், திநபிரக் ஞன், குணாதீதன், பகவத்பக் தன், பிராமணன்.

அத்தியாய சதுட்டயம்—(ச) நித்தியாத்தியாசம், இதரேத ராத்தியாசம், சத்தியாத்தியா சம்.

அத்யாத்மம் முதலியன—(௩) அத்தியாத்மம், அதிதெய்வம், அதிபூதம்.

அத்திராதிமுத்திரை—(உசு) அத் திர முத்திரை, சக்கரமுத்திரை, மகா முத்திரை, சோதனை முத் திரை, சங்கார முத்திரை, பஞ்ச முக முத்திரை, சுரபி முத்திரை, தீவிவிர முத்திரை: முளிளிகா முத்திரை, பதும முத்திரை, சச கன்ன முத்திரை, சத்தி முத் திரை, பீச முத்திரை, சாந்தி முத்திரை, ஆவாகன முத் திரை, மனோரம்மிய முத்திரை; துவச முத்திரை, இலிங்க முத் திரை; காயத்திரி முத்திரை, யோனி முத்திரை, காலகண்ட முத்திரை, சூல முத்திரை, நமக் கார முத்திரை, விசேடண முத்திரை, ஆச்சியாகுண முத் திரை, மகாசங்கார முத்திரை.

அத்திவகை—(எ) அத்தி, பேயத்தி, கல்லத்தி, காட்டத்தி, சீமை யத்தி, கொடியத்தி, குருக் கத்தி.

அத்துவா—(சு) மந்திரத் துவா, வன்னத்துவா, பதாத் துவா, தத்துவாத் துவா, புவனத்துவா, கலாத் துவா.

அநாதி பதார்த்தங்கள்—(சு) உயிர், ஈசன், சுத்தசேதனம், அவித்தை, சேதனாவித்தை களின் சம்பந்தம், அவற்றின் பேதம்.

அநாத்மாவின் தர்மம்—(கo) அநித்தியம், விநாசி, அசுத்தம், நாநா, சேத்திரம், ஆசிரிதம், விகாரி, பரப்பிரகாசியம், சங் கம், மறைப்புள்ளது.

அநுபந்தம்—(ச) அதிகாரி, விடயம், பிரயோசனம், சம்பந் தம்.

அநுபந்தலக்கணம்—(ச) விடயம், சம்பந்தம், பிரயோசனம், அதி காரம்.

அந்தக்கரண காரியங்கள்—(ச) சங்கற்பவிகற்பம், உறுதி, எண் ணுதல், அகந்தை.

அந்தக்கரணகுற்றம்—(௩) மலம், விட்சேபம், ஆவரணம்.

அந்தக்கரண தேவதைகள்—(ச) சந்திரன், பிரம்மா, வாசுதேவன், உருத்திரன்.

அந்தணகுல அடியார்கள்—(கஉ) குங்குலியக்கலயநாயனர், முருகநாயனர், உருத்திரபசுபதி நாயனர், சண்டேசுரநாயனர், அப்பூதியடிகணயனர், திருநீல நக்கநாயனர், நமிநந்தியடிக ளுயனர், திருஞானசம்பந்த மூர்த்திநாயனர், சோமாசிமாற நாயனர், சிறப்புலிநாயனர், கணநாதநாயனர், பூசலார்நாய ஞர்.

அந்தணன் விரதம்—(கஉ) சத்தியம், ஞானம், சமம், தமம், நூற்பயிற்சி, மாற்சரியமின்மை, நாணம், திதீட்சை, அசூயையின்மை, யஞ்ஞம், தானம், தைரியம்.

அந்தணர்க்குரியபொருள்—(௩) சமித்து, தருப்பை, முஞ்சிப்புல்

அந்தணர்தொழில்—(௬) ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

அந்தணர்மார்க்கம்—(௨) வைதிக மார்க்கம், தாந்திரீக மார்க்கம்.

அந்தணவருணமாகு மெழுத்துக்கள்—(கஅ) அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ க ங ச ஞ ட ண.

அந்தராயம்—(௫) தானந்தராயம், லாபாந்தராயம், போகாந்தராயம். உபபோகாந்தராயம், விர்யாந்தராயம்.

அந்திமல்லிகை—(௪) அந்திமல்லிகை, மஞ்சளந்தி மல்லிகை, நீலவர்ண அந்திமல்லிகை, வெள்ளையந்தி மல்லிகை.

அந்வயநுலக்கணம்—(௫) விசேடணம், விசேடியம். கருத்தா, கருமம், கிரியை.

அபரக்கிரியைகள்—(௫௫) சூர்ணோற்சவம், சிவப்பிரசாதம், சாவியாலங்காரம், தேகாந்தியேஷ்டி, கணபதிபூசை, புண்யாஹாவாசனம், பூதசுத்தி, அந்தர்யாகம், ஆசார்யாலங்காரம், பஞ்சகவ்வியம், விக்ராமம், புத்தளியந்தி யேட்டி, புத்தளியந்தியேட்டி சஞ்சயனம், நக்னசிரார்த்தம்,பாடாணத்தாபனம், திலோதகம், வாசோதகம், பிண்டம், நவச்சிரார்த்தம், ஏகோத்ர விருத்தி, பிரபூதபலி, சிலோத்வாசனம், விருடோற்சர்ச்சனம், ஏகோதிட்டம், சோடசம், சபிண்டீகரணம், பிண்டபிரதானம், பிண்டசம் யோசனம், சுவர்க்கபாதேயம், புனர்பிண்டம், சோதகும்பம், அநுமாசியம், ஆனந்த ஹோமம், கிரகயக்யம் அக்கினி சந்தானம், பிராயச்சித்தாதிகள்,சமக்காரம், பாடாணத்தாபனம், சஞ்சயனம். வாசோதகாதி, நக்னசிரார்த்தம், ஏகோத்ரவிருத்தி, நமசிரார்த்தம், தசாகம், விருடோற்சர்ச்சனம், ஏகாகம், சோடசம், சுபிண்டீகரணம், வைதரணி கோதானம், தசதானம், பரலோகபாதேயம், பிண்டசம் யோசனம், புண்யாவாசனம், சோதகும்பம், சேவாகாலம்.

அபரோட்ச ஞானம்—(௨) திட அபரோட்ச ஞானம்,அதிடஅபரோட்ச ஞானம்.

அபாவஅலங்காரம்—(௫) என்றும் பாவம், இன்மையதபாவம், ஒன்றினென்றபாவம், உள்ளதன பாவம், அழிவுபாட்ட பாவம் என்பன வாம். அவையாவன: எக்காலத்து மில்லாமையும், இல்லாமைய தில்லாமையும், ஒன்றின தின்மையும், அதன்கணஃதின்மையும், ஓரிடத்து மொருகாலத்துமுள்ளபொருள் பிறிதோரிடத்துப்பிறிதோர் காலத்து மில்லாமையும், முன்னுள்ள தழிவுபட் டில்லாமையுமாம்.

அபாவம்—(௪) பிராக பாவம், பிரத்துவம்சா பாவம், அந்நியோந்நியா பாவம், அத்தியந்தா பாவம்.

அபாவவேறுபாடு—(௫) ஒரு வழிக் காரணம் நிகழப் பிறிதொரு வழிக்காரிய நிகழ்தல், காரண காரியங்கள் ஒருங்கு நிகழ்தல், காரணத்தின் முன்னர்க் காரியம் நிகழ்தல், காரணத்திற் கேற்ற காரியம் நிகழ்தல், காரணத்திற்கேலாக் காரியம் நிகழ்தல்.

அபானவாயு—(௨) மலத்தைக் கழிக்கல், மூத்திரம் விடுத்தல்.

அபிடேக திரவியங்கள் — (௨௦) எண்ணெய்க் காப்பு, மாக் காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சட் காப்பு, பஞ்சகவ்வியம், இரச பஞ்சாமிர்தம், பலபஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், சர்க்கரை, கருப்பஞ்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம் பழச்சாறு, தமரத்தம் பழச்சாறு, குளஞ்சிப் பழச்சாறு, மாதுலம் பழச்சாறு, இளநீர், சந்தனக் குழம்பு என்பவைகளாம்.

அப்சரசுக்கள்—(௧௨) ஊர்வசி, மேனகை, அரம்பை, மிசிர கேசி, அலம்புடை, விசுவாசி, இருதாசி, பஞ்சகுசை, திலோத் தமை, பானுவதி, அபலை, இரம் மியை, (இவர்கள் தேவருலக கணிகையர்)

அப்பவருக்கம்—(௧௦) அபூபம், இலையடை, கஞ்சம், சஃகுல்லி, நொலையல், பூரிகை, பொள்ளல், போனகம், மண்டிகை, மெல்லடை.

அமிர்தம்—(௨) தேவாமிர்தம், பஞ்சாமிர்தம்.

அமுதம்—(௩) சுத்தாமுதம், அசுத் தாமுதம், நித்தியாமுதம்.

அமுதம்—(௫) பால், சர்க்கரை, தேன், நெய், வாழைப்பழம்.

அமுதவெழுத்துக்கள் — (௧௧) அ-இ-உ-எ-க-ச-த-ந-ப-ம-வ என்பனவாம்.

அம்பரசித்திகள்—(௮) சாயர வீசினதை, இத்திரியதிரிசியதை, குகச்சதி, தேட்ட விடயசங்கதி, சயிலலங்கம், சயிலகர்ப்பீ கரணம், ஆகாசபிண்டீகரணம், அசரீரத்துவம்.

அம்மான்பச்சரிசி வகை—(௪) அம்மான்பச்சரிசி, சின்னம்மான் பச்சரிசி, பெரிய சிவப்பம்மான் பச்சரிசி, சின்னசிவப்பம்மான் பச்சரிசி.

அயனங்கள்—(௩) உத்தராயனம், தெட்சணாயனம், மத்தியாயனம்.

அரக்குவகை—(௨) அரக்கு, கொம்பரக்கு.

அரங்கிற்காகாநிலம்—(௯) என்புள்ள நிலம், உமியுள்ளது, கன்னிலம், பரனிலம், களித் தரை, உவர்த்தரை, ஈரத்தரை, பொல்லாச் சாம்பற்றரை, பொடித் தரை.

அரங்கினெழினி—(௩) ஒரு முக வெழினி, பெருமுகவெழினி, கரந்துவரலெழினி.

அரங்கின்பூதர்—(௪) அந்தணர், அசுரர், வணிகர், வேளாளர் என்று சொல்லப்பட்ட நால் வகை வருணப்பூதராகிய வச்சிரதேகன், வச்சிரதந்தன், வருணன், இரத்தகேசுவரன் என்னுமிவராம்.

அரங்கின்வாயில்—(௨) உட்புகு வாயில், வெளிவருவாயில்.

அரங்கின்வாயில்—(௪) வருவாயில், புறப்படு வாயில், கரந்துபோக் கிடன், கண்ணுளர் குடிஞை பள்ளி.

அரங்குறுப்பு—(௫) வாயில், கரந்துபோக்கிடன், கண்ணுளர் குடிஞைப்பள்ளி, அவையரங்கம், புவிநிறை மாந்தர் பொருந்து கோட்டி.

அரசசின்னம்—(உ௪) முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக் கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசனம்.

அரசப்பிரகிருதிகள்—(௧0) புரோகிதன், பிரதிநிதி, பிரதானன், சசிவன், மந்திரி, நீதி யதிபன், பண்டிதன், சுமந்திரன், அமாத்தியன், தூதன்.

அரசரின் ஆற்றலைக் கெடுக்கக் கூடியன—(உ) கடுஞ்சொல், கடுந்தண்டம்.

அரசர்கடமை—(௪) பொருளைத் தேடல், தொகுத்தல், காத்தல், வகையறிந்து செலவு செய்தல்.

அரசர்—(௩) சேரன், சோழன், பாண்டியன்.

அரசர்குலம்—(௩) சூரியகுலம், சந்திரகுலம், அக்கினிகுலம்.

அரசர்கொடி—(௩) சேரனுக்கு விற்கொடி, சோழனுக்குப் புலிக் கொடி, பாண்டியனுக்கு மீனக் கொடி.

அரசர்க்குத்தானை—(௬) களிறு, தேர், பரி, வாள், வில், வேல்.

அரசர்க்குத்துணைவர்—(அ) மந்திரியர், கருமாதிகாரர், சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், இவுளி மறவர், யானைவீரர்.

அரசர்க்குரியபண்புகள்—(௪) அஞ்சாமை, ஈகை, அறிவுடைமை, ஊக்கமுடைமை.

அரசர்க்குரிய பொருள்கள்—(௩) இறையாக வரும்பொருள், சுங்கமாகக் கொள்ளும்பொருள், பகைவரை வென்று கொள்ளும் பொருள்.

அரசர்க்குரிய பண்புகள்—(௩) காலந் தாழ்த்தாமை, கல்வியுடைமை, துணிவுடைமை.

அரசர்க்குரியன — (௧0) படை, குடை, கொடு, முரசு, புரவி, களிறு, தேர், தார், மாலை, செங்கோல்.

அரசர்க்குழு — (௫) மந்திரியர், புரோகிதர், சேனுபதியர், தூதர், சாரணர்.

அரசர்க்குறுதிச்சுற்றம்—(௫) நட்பாளர், அந்தணுளர், மடைத்தொழிலர், மருத்துவக் கலைஞர், நிமித்திகப் புலவர்.

அரசர்தெரிந்து வினையாடலுக்குரியன—(௪) அன்பு, அறிவு, ஐயமில்லாமல் தெளியும் ஆற்றல், அவாவின்மை.

அரசர்தொழில்—(௬) ஈதல், உலகு புரத்தல், ஓதல், படைபயிறல், பொருள், வேட்டல்.

அரசர்நிலை—(எ) அறம், இம்மை, இன்பம், புகழ், பொருள், மதிப்பு, மறுமை.

அரசர்மாலை—(௩) சேரனுக்குப் பனந்தார், சோழனுக்கு ஆத்தி மாலை, பாண்டியனுக்கு வேப்ப மாலை.

அரசவருணவெழுத்துக்கள் — (௬) த-ந-ப-ம-ய-ர.

அரசனமைப்பு—(௬) சாசனம், வெற்றியடித்திறம், ஆக்கினைப் பத்திரம், அறிக்கைப்பத்திரம், நிபந்தப்பத்திரம், அருள்புரிபத்திரம்.

அரசன்சிறப்புச்செயல்—(௪) கொடை, அருளுடைமை, செங்கோல்முறை, குடிகளைப் பாதுகாத்தல்.

அரசாட்சி—(௩) ஆணரசாட்சி, பெண்ணரசாட்சி, இளவரசாட்சி.

அரசியலின் அதிகாரங்கள்—(உ௫) இறைமாட்சி, கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங்கடிதல், பெரியாரைத்துணைக்கோடல், சிற்றினஞ்சேராமை, தெரிந்துசெயல்வகை, வலியறிதல், காலமறிதல், இடனறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றந்தழால், பொச்சாவாமை, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, கண்ணோட்டம், ஒற்றுடல், ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கணழியாமை.

அரசியல்—(௬) படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண்.

அரசியல்வகை—(௬) அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம்; அவையாவன தத்தம் வருணத்திற் பிறழாது நிலைபெறப் பாதுகாத்த லறநிலையறம். நிரைமீட்டுப் பகை வென்று செஞ்சோற்றுக் கடன் கழியாதாரைத் தண்டித்துக் குறைவறச் செய்தன்மறநிலையறம். நெறிவழி நின்று தத்தநிலையினுன் முயன்று பெறு பொருளறநிலைப் பொருள். பகைஞர் பொருளுந் திறைப்பொருளுஞ் சூதில் வெல் பொருளு மறநிலைப்பொருள். பருவமுங் குலமு மொழுக்கமுங் குணமொத்த கன்னிகையைத் தீவேட் டில்லத்திருத்த லறநிலையின்பம், ஏறுதழுவியும் வில்லிற்றெடுத்த வம்பினுக்க மெய்துமிவ்வாறு மாறுடை நெறியின் மணத்தன் மறநிலையின்பம்.

அரசு—(௩) அரசு, கொடியரசு, புண்ணிய வரசு

அரணின் அழகு—(௪) உயரம், அகலம், உறுதி, பகைவரால் அழிக்க முடியாத அருமை.

அரண்—(௪) மலை, காடு, மதில், கடல்.

அரண் — (௯) களர்நிலவரண், அகழியரண், மதிலரண், காட்டரண், நிலவரண், நீரரண், மலையரண், படையரண், துணையரண்.

அரத்தை—(உ) சிற்றரத்தை, பேரரத்தை.

அரளி—(௧௧) வெள்ளையரளி, வெள்ளை அடுக்கரளி, செவ்வரளி, செவ்வடுக்கரளி, கஸ்தூரியரளி, ஆத்தரளி, வெள்ளைக்காசரளி, சிவப்புக்காசரளி, தங்கரளி, சிறுதங்கரளி, மலையரளி.

அரிசிவகை — (௫) புழுங்கலரிசி, பச்சையரிசி, கறுப்புநெல்லரிசி, மட்டைநெல்லரிசி, மலைநெல்லரிசி.

அரிசிவகைகள்—(௬) அருணவரிசி, உலூவாவரிசி, ஏலவரிசி, கார்போக அரிசி, விளவரிசி, வெட்பாலையரிசி.

அரிதாரம்—(அ) கட்டியரிதாரம், கரட்டரிதாரம், கனத்தீயரிதாரம், தகட்டரிதாரம், தாளகம், பொன்னரிதாரம், மடலரிதாரம், வைப்பரிதாரம்.

அரிட்ட தேவதைகள் — (௩௫) தந்தை, பீணி, காளிகை, வீமரூபி, அங்குசினி, பூதினி, முத்தகேசி, ஆகாசினி, அரிகோரா

தினி, சகுனி, பூமாயி, உத்தமி, பிங்கலை, கோகர்ணி, பங்கயை, சிமுகி, சேனி, கும்பகர்ணி, தாபதை, காலார்க்கி, நந்தினி, குரோதினி, தானுனி, சாகினி, பஞ்சாலீ, காமினி, மேதினி, நளினி, மகாகும்பினி, அரனி, ஆகாசகர்ணி, வாயு விசாக்கினி, சுகந்தினி, வனதேவி, குண்டனி.

அரிபிறப்பு—(கரு) சனகன், சனந்தனன், சனாதனன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, வேள்வியின்பதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன்.

அருகன்குடை—(௩) சகலபாசனம், சந்திராதித்தியம், நித்திய விநோதம். இவை முறையே பொற்குடை, முத்துக்குடை, இரத்தினக்குடையென்று சொல்லப்படும்.

அருகன்குணம் — (அ) அநந்தசுகம், அநந்தஞானம், அனந்த தரிசனம், அநந்தவீரியம், நிர்க்கோத்திரம், நிர்நாமம், நிராயுஷ்யம், அழிவின்மை.

அருகன்சிறப்பு — (அ) தூபதீபக்காட்சி, தேவதுந்துபி, தெய்வத்துவனி, சிங்காதனம், பிண்டி, வெண்சாமரை, புட்பமாரி, மும்மைக்குடை.

அருகன்பெயர்கள்—(ககக) அசோகன், அண்ணல், அதிசயன், அந்தணன், அமைவன், அரியணைச்செல்வன், அருட்கொடிவேந்தன், அறவாழி வேந்தன், அறவோன், அறிவன், ஆசான், ஆதன், ஆத்தன், உரவன், உறுவன், எண்குணன், கந்தன், கமலவூர்தி, ஆருத்தா, கலைநாதன், காதி வென்றோன், காமற்காய்ந்தோன், குற்றங்களில்லோன், கொல்லாவேதன், சதுர்முகன், சமி, சம்பு, சாதரூபி, தூதுசாந்தன், சாந்தன், சித்தன், சிவகதியிறைவன், சினவரன், சினன், சினேந்திரன், சீமான், செய்யோன், செல்வன், சைனன், தத்துவன், தருமராசன், திகம்பரன், திருமறுமார்பன், தீர்த்தன், தேவன், நக்கன், நான்முகன், நிச்சிந்தன், நிராயுதன், நீதிநூலி, நீத்தவன், பண்ணவன், பரமேட்டி, பிதா, புண்ணியன், புத்தன், புலவன், புனிதன், பூமிசை நடந்தோன், பொன்னெயிற்கோன், மாசேனன், மாமுனி, மால், முக்குடைச்செல்வன், முநந்தன், முனிந்தோன், முனிவன், யோகி, வரதன், வாமன், விதாதா, விநாயகன், விராகன், விறலோன், வீரன், அறகன், மூவுலகுணர்ந்த மூர்த்தி, விண்ணவன், பொன்னெயினாதன், பட்டாரகன், அசோகமர்கடவுள், பகவன்,முக்குடையோன், பூரணன், விண்ணவன், விமலன், வீதசோகன், மதனை வென்றோன், கருத்தன், முன்னோன், நித்தன், நின்மலன், நின்னுமன், நேமிநாதன், ஆனந்தன், ஆதி, சாத்தன், வேதாந்தன், நாதன், சுயம்பு, நிரம்பரன், அநந்த ஞானி, சாயி, சீபதி, நிருமலன், நிரஞ்சனன், யுகாதி, சிவகதிக்கிறை,வரன், தேவன், எண்சிறப்புமுள்ளோன், அத்தன், சோதி, பகவான், அநாமயன், சுயம்புமா சேநன், வென்றோன்.

அருகன்மதில்—(௩) உதயதரம், கல்யாணதரம், பிரீதிதரம்.

அருகன்வென்ற உபாதி—(௮) அசக்கு தரிசனாவரணீயம்,

கேவலதரிசனு வரணீயம், சக்கு தரிசனுவரணீயம்.

அருகன்வென்றவினை—(ச) ஆயுஷ்யம், கோத்திரம், சேதனியம், நாமம்.

அருக்கியங்கள் — (உ) சாமானியார்க்கியம், விசேடார்க்கியம்.

அருக்கிய திரவியம்—(அ) சலம், பால், தருப்பை நுனி, அக்கதம், எள், யவம், சம்பாநெல், வெண்கடுகு.

அருவவடிவம்—(ச) சிவம், சத்தி, நாதம், விந்து.

அருவுருவடிவம்—(க) சதாசிவம்.

அருள்—(உ) மறக்கருணை, அறக்கருணை.

அருபப்பொருள்—(உ) கடவுள், ஆத்மா.

அரைக்கீரை—(உ) அரைக்கீரை, சிவப்பு அரைக்கீரை.

அர்த்தவாதம்—(௩) அநுவாதம், குணவாதம், பூதார்த்தவாதம்.

அலங்காரப்பா—(ரு) வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்தவிருத்தம் முதலியன.

அலங்காரம்—(௩௫) தன்மை, உவமை, உருவகம், தீவகம், பின்வருநிலை, முன்னவிலக்கு, வேற்றுப்பொருள்வைப்பு, வேற்றுமை, விபாவனை, ஒட்டு, அதிசயம், தற்குறிப்பேற்றம், ஏது, நுட்பம், இலேசம், நிரனிறை, ஆர்வமொழி, சுவை, தன்மேம்பாட்டுரை, பரியாயம், சமாயுதம், உதாத்தம், அவநுதி, சிலேடை, விசேடம், ஒப்புமைக் கூட்டம், விநோதம், புகழ்நிலை, புகழாப் புகழ்ச்சி, நிதரிசனம், புணர்நிலை, பரிவருத்தனை, வாழ்த்து, சங்கீரணம், பாவிகம்.

அலங்காரம்—(௧௦௦) உவமை, இயைபின்மை, புகழ்பொருளுவமை, எதிர்நிலை, உருவகம், திரிபு, பலபடப்புனைவு, நினைப்பு, மயக்கம், ஐயம், ஒழிப்பு, தற்குறிப்பு, உயர்வுநவிற்சி, ஒப்புமைக் கூட்டம், விளக்கு, பின்வருவிளக்கு, தொடர்முழுதுவமை, எடுத்துக்காட்டுவமை, காட்சிவேற்றுமை, உடனிகழ்ச்சி, இன்மைநவிற்சி, சுருங்கச்சொல்லல், கருத்துடையடை, கருத்துடையடைகொளி, பலபொருட்சொற்றொடர், புனைவிலிபுகழ்ச்சி, புனைவுளி விளைவு, பிறிதினவிற்சி, வஞ்சப்புகழ்ச்சி, வஞ்சப்பழிப்பு, எதிர்மறை, முரண்விளைந்தழிவு, பிறிதாராய்ச்சி, காரணவாராய்ச்சி, கூடாமை, தொடர்பின்மை, தகுதியின்மை, தகுதி, வியப்பு, பெருமை, சிறுமை, ஒன்றற்கொன்றுதவி, சிறப்புநிலை, மற்றதற்காக்கல், காரணமாலை, மாலைவிளக்கு, மேன்மேலுயர்ச்சி, நிரனிரை, முறையிற்படர்ச்சி, மாற்றுநிலை, ஒழித்துக்காட்டு, உறழ்ச்சி, கூட்டம், வினைமுதல் விளக்கு, எளிதின்முடிபு, விறல்கோள், தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறு தொடர்புநிலைச் செய்யுட்குறி, வேற்றுப்பொருள் வைப்பு, மலர்ச்சி கற்றோர், நவிற்சி, உய்த்துணர்வு, பொய்த்தற்குறிப்பு, வனப்புநிலை, இன்பம், துன்பம், அகமலர்ச்சி, இகழ்ச்சி, வேண்டல், இலேசம், குறிநிலை, அரதமாலை, பிறதின் குணம் பெறல், தொல்லுருப்பெறல், பிறிதின் குணம்பெருமை, தன்குணமிகை, மறைவு, பொதுமை, மறையாமை, சிறப்புஇறை, நுட்பம், கரவு, வெளிப்படுப்பு, வஞ்ச நவிற்சி, குறிப்பு நவிற்சி, வெளிப்படை நவிற்சி, யுத்தி, உலகவழக்கு நவிற்சி, வல்லோர் நவிற்சி.

மடங்குதனவிற்சி, தன்மை நவிற்சி, நிகழ்வினவிற்சி, வீறுகோள், மிகுதிநவிற்சி, பிறிநிலை நவிற்சி, விலக்கு, விதி, ஏது.

அலிக்கிரகம்—(௩) சனி, கேது, புதன், அஃதுஉள்ளமுடையான் ௪௨௩-ஆங்கவியாற் பெறப்படும்.

அலிக்கை—(௫) சர்ப்பசிரம், வண்டு, முகுளம், கத்தரிகை, கோசம், சபித்தம், என்பனவாம். இவற்றுள் வண்டாவது பெருவிரலும், அணிவிரலும் வளைந்து நுனியொன்றிச் சிறுவிரனிமிர்ந்தும் சுட்டுவிரலும் நடுவிரலும், நெகிழ வளைந்து நிற்பது என்னை? "வண்டென்பதுவே வகுக்குங்காலை, யநாமிகை பெருவிரனனி மிகவளைந்து, தாநுனி யொன்றித் தகைசால் சிறுவிரல், வாலிதினிமிர மற்றைய வளைந்த, பாலினதென்ப பயனறிந்தோரே" என்றுராகலின்.

முகுளமாவது :-ஐந்து விரலுந் தம்மிற் றலைகுவிந்து உயர்ந்து நிற்பது, என்னை? "முகுளமென்பது மொழியுங்காலை, யைந்து விரலுந் தலைகுவிந்தேற்ப வந்து நிகழுமாட்சித் தாகும்" என்றுராகலின்.

கத்தரிகையாவது :—திரிபதாகையின் முடங்கிய அணிவிரற் புறத்ததாகிய நடுவிரலைச் சுட்டு விரலோடு பொருந்தநிமிர்ப்பது. என்னை? "கத்தரிகையே காண்டகவிரிப்பி, னத்திரி பதாகையினணியின் புறத்தைச் சுட்டகமொட்டகவிட்டு நிமிர்ப்பதுவே" என்றுராகலின்.

கபித்தமாவது :—சுட்டுவிரனுனியும் பெருவிரனுனியும் உகிர்நுனை கௌவிப் பிடிப்பது. ஒழிந்த மூன்று விரலும் மெல்லெனப் பிடிப்பது. என்னை? "கபித்தமென்பது காணுங்காலைச் சுட்டுபெருவிர லொட்டிநுனி கௌவி, வொல்லமூன்று மெல்லப் பிடிப்பதுவே" என்றுராகலின் ஏனைய வந்துழிக் காண்க.

அல்லி—(௩) வெள்ளையல்லி, சிவப்பு அல்லி, ஊதாஅல்லி.

அல்வழிப்புணர்ச்சி—(௧௪) வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை, எழுவாய்த்தொடர், விளித்தொடர், தெரிநிலைவினைமுற்றுத்தொடர், குறிப்புவினைமுற்றுத்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத்தொடர், இடைச்சொற்றொடர், உரிச்சொற்றொடர், அடுக்குத்தொடர்.

அவசியகருமஞ்செயலாகா விடங்கள்—(௧௬) வழி, குழிநீர்நிலை, நீர்க்கரை, கோமயமுள்ள இடம், சாம்பர் உள்ளவிடம், சுடுகாடு, பூந்தோட்டம், மரநிழல், உழுதநிலம். அறுகம்பூமி, பசுமந்தைநிற்குமிடம், இடிவீழிடம், காற்றுச்சுழலிடம், புற்று, அருவிபாயுமிடம், மலை, திருக்கோயில்தானம், திருமடம்.

அவச்சேதகம்—(௪) விசேடணம், உபாதி, உபலட்சணம், உபரஞ்சகம்.

அவதானங்கள்—(அ) வாய் வேலுமயிலுமெனச் சொல்லல், கையால், இலாடசங்கிலி கழற்றல், கவிஎண்மர்கருத்தின்படி சொல்லல், முதுகிலெறியுங்கல்லளவு நெல்லளவு சொல்லல், திரைமறைவில் ஆடுஞ்சொக்கட்டான் சதுரங்கம்இவற்றிற்கெழுத்துச்சொல்லல், அயலொருவர் சொல்லுங்கவியை அவதானித்துச்சொல்லல், உடலிலே பன்னிரண்டிடத்தெழுத்தாணி வைத்தெழுதல்.

அவதி—(௩) காரணம், சுவரூபம், காரியம், இவையன்றி, ஞானவதி, வைராக்கியாவதி, உபரதி யவதி எனவுமாம்.

அவத்ததானம்—(௪) கண், கழுத்து, இருதயம், உச்சி.

அவத்தை—(௨) கேவலாவத்தை, சகளாவத்தை.

அவத்தை—(௫) சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

அவத்தைதக்காரணவகை—(௩) கேவல அவத்தை, சகல அவத்தை, சுத்த அவத்தை.

அவத்தைக் காரியவகை—(௩) கீழாலவத்தை, மேலாலவத்தை, மத்தியாலவத்தை.

அவத்தைக்காரியவிரி—(௰) கீழாலவத்தையிற் சாக்கிரம், கீழாலவத்தையிற் சொப்பனம், கீழாலவத்தையிற் சுழுத்தி, கீழாலவத்தையிற்றுரியம், கீழாலவத்தையிற்றுரியாதீதம், மேலாலவத்தையிற்சுழுத்தி, மேலாலவத்தையிற் சொப்பனம், மேலாலவத்தையிற்றுரியம், மேலாலவத்தையிற்றுரியாதீதம்.

அவநுதி—(௪) சிறப்பவநுதி, பொருளவநுதி, குணவவநுதி, வினைபற்றியசிலேடையவநுதி.

அவநுதியணியின் வகை—(௩) சிறப்பு அவநுதி, பொருள் அவநுதி, குண அவநுதி.

அவஸ்தை—(௭) கர்ப்பாவஸ்தை, ஜன்மாவஸ்தை, பாலியாவஸ்தை, யௌவனவஸ்தை, ஜராவஸ்தை, மரணாவஸ்தை, நரகாவஸ்தை.

அவரை வகை—(௫) வெள்ளையவரை, சிவப்பவரை, வட்ட அவரை, பேயவரை, கோழியவரை.



அவலம்—(௪) இளிவு, இழவு, அசைதல், வறுமை.

அவாந்தரதிசை—(௪) தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு.

அவிநயநிலம்—(௪) இயங்கல், இருத்தல், கிடத்தல், நிற்றல். இதனை, "நிற்றலியங்க லிருத்தல் கிடத்தலென் றத்தகு நான்கே யவிநயக் களனே" என்னுஞ் சூத்திரத்தானறிக.

அவிநயம்—(௨௪) வெகுண்டோனவிநயம், ஐயமுற்றோனவிநயம், சோம்பினோனவிநயம், களித்தோனவிநயம், உவந்தோனவிநயம், அழுக்காறுடையோனவிநயம், இன்பமுற்றோனவிநயம், தெய்வமுற்றோனவிநயம், ஞஞ்ஞையுற்றோனவிநயம், உடன்பட்டோனவிநயம், உறங்கினோனவிநயம், துயிலுணர்ந்தோனவிநயம், செத்தோனவிநயம், மழைபெய்யப்பட்டோனவிநயம், பனித்தலைப்பட்டோனவிநயம், வெயிற்றலைப்பட்டோனவிநயம், நாணமுற்றோனவிநயம், கண்ணோவுற்றோனவிநயம், தலைநோவுற்றோனவிநயம், அழற்றிறம்பட்டோனவிநயம், சீதமுற்றோனவிநயம், வெப்பமுற்றோனவிநயம், நஞ்சுண்டோனவிநயம் இவற்றின், வரலாற்று முறையைப் பொருளகராதிக்கண் தத்தம் வரியிற் கண்டு தெளிக.

அவுரி வகை—(௨) அவுரி, பெரிய அவுரி.

அழகு—(௮) அம்மை, வனப்பு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழை.

அழகு—(௰) சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின்றோர்க்கினிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாக

தல், முறையின் வைப்பு, உலக மலையாமை, விழுமியது பயத்தல், விளங்குதாரணத்ததாகுதல் என்பனவாம்.

அழிஞ்சில் வகை—(ச) ஏறழிஞ்சில், இறங்கழிஞ்சில், கடலழிஞ்சில், கூவழிஞ்சில்.

அழியாப் பொருள் — (உ) பரப்பிரமம், ஆத்மா.

அழுங்கு—(ச) இளிவு, இழவு, அசைவு, வறுமை.

அளபெடை—(உ) உயிரளபெடை, ஒற்றளபெடை. செய்யுளில் ஓசைகுறையின் உயிரும் ஒற்றும் தமக்குச் சொன்ன அளவைக் கடந்து நீண்டொலிப்பது.

அளபெடை—(அ) இயற்கையளபெடை, செயற்கை யளபெடை, எழுத்துப்பேறளபெடை, இசைநூலளபெடை, ஒற்றுப்பேறளபெடை, குற்றெழுத்தளபெடை, நெட்டெழுத்தளபெடை, ஒற்றெழுத்தளபெடை.

அளபெடைவகை—(ங) செய்யுளிசை நிறைக்குமளபெடை, இன்னிசைநிறைக்குமளபெடை, சொல்லிசை நிறைக்கும் அளபெடை.

அளவு—(ச) எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல்.

அளபெடைத்தொடை—(அ) அடியளபெடை, இணையளபெடை, பொழிப்பளபெடை, ஒரூஉவளபெடை, கூழையளபெடை, மேற்கதுவாயளபெடை, கீழ்க்கதுவாயளபெடை, முற்றளபெடை.

அளவை—(ரு) எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல், தெறித்தல்.

அளவை—(எ) நிறுத்தளத்தல், பெய்தளத்தல், சார்த்தியளத்தல், நீட்டியளத்தல், தெறித்தளத்தல், தேங்கமுகந்தளத்தல், எண்ணியளத்தல்.

அளவை—(அ) காட்சி, அனுமானம், உவமானம், ஆகமம், அருத்தாபத்தி, அபாவம், ஐதிகம், சம்பவம்; அவையாவன காணல் காட்சி, புகையைக் கண்டு, நெருப்புண்டென லனுமானம்; மரைபசுப்போலெனலுவமானம்; பெரியோர் வாய்ச்சொலாகமம்; பகலுண்ணான் பருத்திருப்பானென்புழி யிரவிலொளித் துண்பானெனவுணர்தலருத்தாபத்தி, முன்னுமில்லை பின்னுமில்லை ஒன்றிலொன்றில்லை யொருகாலத்துமில்லையெனலபாவம்; இம் மரத்திற் பேயுளதென்ப தைதிகம்; ஆயிரத்தில்நூறுண்டெனல் சம்பவம்.

அறத்துறை—(ங) ஒழுக்கம், தண்டம், வழக்கு.

அறத்துப்பால்—(ங்ச) அறன்வலியுறுத்தல், இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை நலம், புதல்வரைப் பெறுதல், அன்புடைமை, விருந்தோம்பல், இனியவைகூறல், செய்ந்நன்றி யறிதல், நடுவு நிலைமை, அடக்க முடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை, புகழ், அருளுடைமை, புலான் மறுத்தல், தவம், கூடாவொழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னாசெய்யாமை, கொல்லாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்பனவாம்.

அறத்துறுப்பு—(அ) ஐயப்படாமை, விருப்பின்மை, வெறுப்பின்மை, மயக்கமின்மை, பழியைநீக்கல், அழிந்தோரை நிறுத்தல், அறம் விளக்கல், பேரன்புடைமை.

அறத்தொடுநிலையின்வகை — (உ) முன்னிலைமொழி, முன்னிலைப் புறமொழி.

அறத்தொடு நிற்குங்காலம் — (கூ) இயற்கைப் புணர்ச்சிக் காலம், பாங்கற் கூட்டக்காலம், இடந் தலைப்பாட்டுக் காலம், ஒருவழித் தணத்தற் காலம், வரை விடை வைத்துப் பொருள் வயிற்பிரிதற் காலம், தலைவனைச் செவிலி குறி யிடத்துக் காணுங்காலம், மனை யிடத்துச் செறிக்குங்காலம், தலை மகளைப் பாங்கி வினவிய காலம், வினவாத காலம்,

அறத்தொடுநிற்பார்க்குவினு நிகழு மிடர்—(ச) பாங்கி தலைவியை வினவல், செவிலி பாங்கியை வினவல், பாங்கியை நற்றாய் வினவல், நற்றாய் செவிலியை வினவல்.

அறத்தொடு நிற்றல் விரி — (கக) கையறுதோழி கண்ணீர் துடைத் தல், தலைமகள் கலுழ்தற் கார ணங்கூறல், தலைமகன் தெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந் தமை யெய்தக்கூறல், தலைவனி கந்தமை யியம்பல், அதுகேட்ட தோழி இயற்பழித்துரைத்தல், தலைமகளியற்பட மொழிதல், இல்வயிற் செறித்தமை சொல் லல், செவிலி கனையிருளவன் வரக்கண்டமைகூறல்,தலைமகள் வேற்றுமை கண்டு பாங்கியை வினுதல், வெறிவிலக்கல், வெறி விலக்கிய வழிச் செவிலி தோழியை வினுதல், தோழி பூத் தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல், புனறரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல், களிறுதரு புணர்ச்சியால் அறத்தொடு நிற் றல், தலைமகள் வேற்றுமை கண்டு நற்றாய் செவிலியை வினு தல், செவிலி நற்றாய்க்கு முன் னிலை மொழியான் அறத்தொடு நிற்றல்.

அறத்தொடு நிற்றற் குரியார்—(ச) தலைவி, பாங்கி, செவிலி,நற்றாய்.

அறப்பகுதி—(உ) இல்லறம், துற வறம்,

அறம்—(கஉ) ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத் தார்க்குண்டி,பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின் பண்ட நல்கல், அறவைச் சோறு, மகப்பெறுவித்தல்,மகவு வளர்த்தல், மகப்பால் வார்த் தல், அறவைப் பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம். சுண்ணம், நோய்க்கு மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணுடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண் ணெய், பெண் போகம், பிறர் துயர் காத்தல், தண்ணீர்ப்பந் தல், மடம், தடம், சோலை, ஆவு ரிஞ்சுதறி, விலங்கிற் குணவு, ஏறுவிடுத்தல், விலை கொடுத் துயிர் காத்தல், கன்னிகா தானம்.

அறவகை—(கூ) ஒழுக்கம், வழக்கு தண்டம். இவற்றை முறையே ஆசாரம், விவகாரம், பிராயச் சித்தம் என்பர் வடநூலார்.

அறிவின்வேறுபாடு—(ஙி) புத்தி, மதி, ஸ்மிருதி, பிரக்ஞை, பிர திமை.

அறிவு—(உ) நல்லறிவு, புல்லறிவு.

அறிவு—(அ) கிரகணம், தாரணம், ஸ்மரணம், ப்ரதியாதனம், ஊகம், அபோகம், அர்த்த விஞ் ஞானம், தத்துவஞானம்.

அறிவுடைமை — (கூ) தம்மிலும் இழிந்த நிலையுள்ளாரிடத்தில் இரக்கமுடைமை, கல்லாரிடத்தி லும் புல்லறிவாளரிடத்திலும் இரக்கமுடைமை, எளியார்கட் குத் தானஞ்செய்ய விரும்புதல். நல்வினையற்றவர்களுக்கு உதவி செய்தல், எத்தகைய இடை யூறுகள்வரினும் விடாமுயற்சி செய்தல், பொய்யர்களைக் காணிற்பொறுத்தல், உறுப்புக்

குறையுடையார்பால் இரக்கமுடைமை; அறிவற்றவர்களிடத்துப் பொறையுடையராதல், காரண காரியத் தொடர்ச்சியறிந்து தமக்குண்டாகும் தீமைகளைப் பொறுத்துக்கொள்ளுதல்.

அறுகுச்செடி—(௩) கறுப்பறுகுச் செடி, சிவப்பறுகுச் செடி, வெள்ளையறுகுச் செடி.

அறுகுவகை—(௪) அறுகு, உப்பறுகு, கொடியறுகு, யானையறுகு.

அன்பு—(௨) உள்ளன்பு, வெளியன்பு.

அனுபந்தம்—(௪) விடயம், சம்பந்தம், பிரயோசனம், அதிகாரி.

அனுமானவுறுப்பு--(௫)பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம்.

அன்மொழித்தொகைக் கூறுபாடு-(௯) இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, மூன்றாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, நான்காம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, ஐந்தாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, ஆறும்வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, ஏழாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

அன்னுவயவிலக்கணம்—(௫) விசேடணம், விசேடியம், கருத்தா, கருமம், கிரியை.

அஃறிணைப்பால்—(௨) ஒன்றன்பால், பலவின்பால்.

அஃறிணைப்பெயர்—(௧௧)அஃறிணையொருமைப் பெயர், அஃறிணைப் பன்மைப்பெயர், அஃறிணையொன்றன் படர்க்கை இறந்த காலத் தெரிநிலைவினையாலணையும்பெயர், அஃறிணையொன்றன் பாற் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர், அஃறிணை யொன்றன் பாற் படர்க்கை யெதிர்காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர், அஃறிணை யொன்றன் பாற் படர்க்கைக் குறிப்பு வினையாலணையும் பெயர், அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை யிறந்த காலத் தெரிநிலை வினையாலணையும்பெயர், அஃறிணைப் பலவின் பாற் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர், அஃறிணைப் பலவின் பாற் படர்க்கை யெதிர்காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர் அஃறிணைப் பலவின் பாற் படர்க்கைக் குறிப்பு வினையாலணையும் பெயர், பால்பகாவஃறிணைப் பெயர்.

அஃறிணை வினைமுற்று — (௮) அஃறிணை யொன்றன்பாற்படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று, அஃறிணையொன்றன் பாற் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலைவினைமுற்று, அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை எதிர்காலத் தெரிநிலை வினைமுற்று, அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று, அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலை வினைமுற்று, அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை யெதிர்காலத் தெரிநிலை வினைமுற்று, ஷை பலவின்பாற் குறிப்பு வினைமுற்று, ஷை யொன்றன் பாற் குறிப்பு வினைமுற்று.



ஆகமங்களிற்ரேன்றினவர்—(சஉ) பிரணவன், திரிகலன், அரன், சுத்தாக்கியன், வெகு, விபு, காரணுக்கியன், சருவன், ஆதிபிரசாபதி, சிவன், சிசுவன், அச்சுதன், ஈசன், திருமூர்த்திகள், சிவோதாசனன், சூக்குமன், வைப்பிரணவன், சுப்பிரபஞ்சன், காலருத்திரன், தருமன், மபு, உக்கிரன், தௌரசன், தசகன், விக்கினேச்சுரன், சசி, உருத்திரன், அநாதி, பரமேசுவரன், உதயன், கிரியை, நிதநேசன், சுயம்புவன், வியோமன், உருத்திரோசாதனன், தேசசன், பிரசாபதி, பிரமணேசன், நந்தி, சேடாக்கியன், மகாதேவன், கருவாத்து, மகன், வீரபத்திரன், அநந்தன் பிரகற்பதி, பிரசாந்தன், ததிசி, சூலிகசவாக்கிகன், மலயன், இவலிதன், இந்திரன், தண்டேச்சுரன், வசிட்டன், சைசபாயன், சோமன், நரசிங்கன், தேவபிதன், சர்வவார்த்தகன், பவோற்பவன், சிவாத்துமன், மகாகாளன்.

ஆகமங்களின் சார்புநூல்—(அ) தத்துவப்பிரகாசிகை, தத்துவசங்கிரகம், தத்துவத்திரய நிர்ணயம், போககாரிகை, மோக்ககாரிகை, நாதகாரிகை, பரமோக்க காரிகை, இரத்தினத்திரயம்.

ஆகமசிவபேதம்—(கO) காமிகம், யோகசம், சிந்தியம், அசிதம், தீத்தம், காரணம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதம்.

ஆகமஞானம்—(உ) அபரஞானம், பரஞானம்.

ஆகமபாதம்—(ச) சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதம்,

ஆகமபேதம் — (உ) சிவபேதம், உருத்திரபேதம்.

ஆகமப்பிரிவு—(உ) கிரியாகாண்டம், ஞானகாண்டம்.

ஆகமப்பொருளிலக்கணம் — (ங) பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம்.

ஆகமமார்க்கம்—(ச) நன்மார்க்கம், சகமார்க்கம், புத்திரமார்க்கம், தாதமார்க்கம்.

ஆகமவகை—(உ) ஆகமம், உபாகமம்.

ஆகமவுபபேதம்—(உசஎ) சாமிசத்திற்கு உத்தரம் நாரசிங்கம் வயிரோத்தரம் என-ங, யோசசத்திற்கு - வீணுசிகோத்தரம் தாரதந்திரம் சௌக்கியாகமம் சாந்தாத்தியாகமம் ஆத்மயோகம் என-ரு, சித்தியத்திற்கு-சுசிந்தியாகமம் சுபகாகமம் வாமதந்திரம் பாபநாசகம் சர்வோற்பவம் அமிர்தாகமம், என-சு, சாரணத்திற்கு - காரணதந்திரம் பாவனதந்திரம் தௌர்க்கீயதந்திரம் மகேந்திரதந்திரம் என-எ, அசிதம் - பிரபூதாகமம் பரோற்பூதாகமம் பார்வதிதந்திரம் பதுமசங்கிதை என-ச, தீப்தம் - அமேயாகமம் அப்பிரமாகமம் அசுவாகமம் அசங்கியாகமம் அமிதௌசேசாகமம் ஆனந்தாகமம் மாதோற்பூதாகமம் அற்புதாகமம் அமிர்தாகமம் என-க, சூக்குமம்-சூக்குமசங்கிதை என-க, சகத்திரம் - அதிதாகமம் அமலதந்திரம் சுத்தம் அப்பிரமேயாகமம் சாதிபஞகமம் பிரபுத்தாகமம் விபுதாகமம் அத்ததந்திரம் அலங்காரதந்திரம் சுபோதாகமம் என-கO, அஞ்சுமான் - வித்தியாபுராணம் பாஸ்வராகமம் நீலலோகித தந்திரம் புரகரணுகமம் பூததந்திரம் ஆன்மாலங்கா

ரம் காசிபதந்திரம் கௌதமதந்திரம் மகேந்திரம் பிரமதந்திரம் வசிட்டாகமம் ஈசானியோத்தரம் என-கூ, சுப்பிரபேதம் - சுப்பிரபேததந்திரம் என-க, விசயம் - விசயதந்திரம் உபவதந்திரம் சௌமியதந்திரம் அகோரதந்திரம் மிருத்தியுநாசதந்திரம் குபேரேசாகம விமலதந்திரம், மகாகோர தந்திரம் என-அ, நிசுவாசம் - நிசுவாசம் உத்தரநிசுவாசம் நிசுவாசமுகோதயம் நிசுவா நயனம் நிசுவாசகாரிகை கோரசங்கிதை சுசவுக்கியம் குய்யம் என-அ, சுவாயம்புவம்-சுயவம்பூதம், பிரசாபதிபதம், பதுமதந்திரம் என-ங, அனலம்-ஆக்கினேயம் என-க, வீரம்-பிரஸ்தாரதந்திரம், பிரஸ்புர தந்திரம் பிரபோத தந்திரம், போததந்திரம், போதக தந்திரம், அமோசதந்திரம், மோகசமய தந்திரம், சகட தந்திரம், சகடீக தந்திரம், அலதந்திரம், விலேகன தந்திரம், புத்திர தந்திரம், வீரதந்திரம் என கங, இரௌரவம்-காலதகனம் இரௌரவோத்தரம் கௌமாரம் காளம் மகாகாளம் இந்திராகமம் என-சு, மகுடம்-மகுடம் மகுடோத்தரம் என-உ, விமலம் - அநந்த போகாகமம் ஆக்கிராந்தாகமம் இருத்தகாசதந்திரம் அலிக்கிருதாகமம் அற்புதாகமம் மாரணதந்திரம் என-சு, சந்திரஞானம் - திரசங்கிதை தாணுசங்கிதை மகாந்தசங்கிதை நாதிசங்கிதை நந்திகேச்சுர சங்கிதை ஏகபாதபுராணம் சங்காரகம், நீலபத்திரதந்திரம், சிவபத்திராகமம் கலரபேதாகமம், ஸ்ரீமுகாகமம் சிவசாதனுகமம் சிவசேகராகமம் தேவிமதம் என-கச, விம்மம் - சதுமுக தந்திரம் மலயதந்திரம் மகாயோகம் கோந்தோபாகமம் பிரிதிவிம்பாகமம் அருத்தாலங்காரம் வாயவியதந்திரம் கௌடாக தந்திரம்-குதுமடீனிகாகமம் துலாவிருத்தம் துலாயோகம் குட்டிமதந்திரம் வருக்கசேகரம் மகாவித்தயம் மகாசஹூரம் என-கசு, புரோற்கீதம் - கவுசாகமம் வராகதந்திரம் பிங்களமதம் பாசபந்தசங்கிதை தண்டதரதந்திரம் குசதந்திரம் தாரணம் சிவஞானம் விஞ்ஞானம் திரிகாலஞானம் ஆயுர்வேதம் தனுவேதம் சருதமட்டிரிவிபேதம் சங்கீதம் பரதம் ஆதோத்தியம் என-கசு, இலளிதம்-இலளிதம் இலளிதோத்திரம் குமார தந்திரம் விக்கினேசராகமம் என-ச, சித்தம் - சாரோத்தரம் தேவேசொத்தம் காலபேதம் சசிமண்டலம் என-ச, சந்தான சருவோத்தம் - இலிங்காதிக்கம் சுரத்தியக்கம் சங்கரதந்திரம் மகேச்சுராகமம் அசங்கியாதந்திரம் அனிலாகமம் துவந்துவாகமம் சிவதருமோத்தரம் வாயுப்புரோக்தம் திவ்யவிபுரோக்தம் ஈசானியம் என-கச, பாரமேசுரம் - மதங்கதந்திரம் யக்ஷனி சாத்திரம் பதுமாகமம் பௌட்கரம் சுப்பிரயோகம் அம்சாகமம் சாமானியாகமம்என-எ, கிரகணம் - கருடாகமம் நைருதாகமம் நீலதந்திரம் விருக்காகம் பரஞுகமம் வைக்கிரமாகமம் புத்தாகமம் பிரபுத்தாகமம் காலதந்திரம் என-கூ, பேதம்-பேதாகமம் என-க, வாதுளம் - வாதுளம் உத்தரவாதுளம் காலஞ்ஞானம் பிரலோகிதம் சர்வாகமம் சர்வீட்டாகமம் சிரேட்டாகமம் நித்தியாகமம் சுரதாகமம் மகான்னம் விசுவாகமம் விசுவாத்மாகமம் என - கஉ, ஆகநூற்றுத் தொண்ணூற்றெட்டு; ஏனைய வந்துழிக் காண்க.

ஆகமவுருத்திரபேதம்—(கஎ) விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், அனலம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம் சந்திரஞானம், விம்பம், புரோர்க்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், பாரமேசம், கிரணம், வாதுளம்.

ஆகமவுற்பத்தித் தானம்—(ரு) ஈசானம், தற்புருடம், அகோரம்,வாமதேவம், சத்தியோ சாதம்.

ஆகாயத்தின் தத்துவங்கள் — (ரு) காமம், குரோதம், சோகம், மோகம், அச்சம்.

ஆக்ருடன மூலிகை—(அ) துடரிவேர்,உள்ளொட்டி,புறவொட்டி, சிறுமுன்னை, குப்பைமேனி, தலைச்சுருளி, சிறியாணங்கை, அழுகண்ணி.

ஆசமனியதிரவியங்கள்—(ரு)ஏலம், கிராம்பு, சாதிக்காய், சண்பகப் பூமொட்டு, பச்சைக் கர்ப்பூரம், பூலாங்கிழங்கு.

ஆசனபேதம்—(உஅ)சித்தாசனம், சிங்காசனம், சுவத்திகாசனம், சௌவியாசனம், சூலாசனம், சுகாசனம், சருவதோபத்திராசனம், கோமுகாசனம், கருடாசனம், மயூராசனம்,மச்சேந்திராசனம், மற்சாசனம், முற்கராசனம், மண்டுகாசனம், மிருகாசனம், நாகாசனம், குக்குடாசனம், குஞ்சராசனம், கூர்மாசனம், காஷ்டாசனம், கிரவுஞ்சாசனம், கடகாசனம், காம தகனாசனம், யோனியாசனம், வியாக்கிராசனம், வைநிகாசனம், வத்திராசனம், வாசவாசனம், வீராசனம், வராகாசனம், பரியங்காசனம், பதுமாசனம், பதாசனம், பச்சிமத்தானாசனம், திரிபதாசனம், அத்தனாசனம், அயிம்மாசனம் அர்த்தாசனம், என்பனவாம்.

ஆசாரவகை—(௩)சதாசாரம், கணாசாரம், நிதாசாரம். இவற்றுள் தனது சன்மார்க்கத்தால் சகலசரணருக்குஞ் சந்தோஷங் கொடுப்பதே சதாசாரமாம். சிவனையும் அடியார்களையும் நிந்தை செய்கின்றவரைத் தண்டிப்பனென்று தண்டிப்பதே கணாசாரமாம். அன்பினால்தான் கொண்ட ஆசாரம் பிராணாந்தம் விடாமல் கைக்கொள்வதே நிதாசாரமாம்.

ஆசாரக்கோவைகூறும் அறங்கள்—(கூஅ) ஒழுக்கம் பிழையாதவரடையும் உறுதி, தக்கணை முதலிய தவறாது நடத்தல், வைகறையிற் செய்யவேண்டியவை, எச்சிலுடன் தீண்டலாகாதவை, எச்சிலுடனேகாணலாகாதவை, நால்வகை எச்சில், எச்சிலுடன் செய்யத்தகாதவை,காலையாலைக் கடவுள் வணக்கம், கட்டாயம் நீராடவேண்டிய சமயங்கள், ஆடையணிதல், தவிர்க்க வேண்டுவன,செய்யத்தகாதன, நீராடியல்பு, தன்னுடல்போல் போற்றத்தக்கவை, ஐம்பெருங் குரவர் வழிபாடு, நல்லறிவாளர் செயல், உணவுகொள்ளுமுறைமை, உணவுகொடுத்துண்டல், உண்ணுந்திக்கு, நின்று கிடந்துண்ணாமை, பெரியோர்பால் இருந்தருந்துவது, சுவைப் பொருள் நுகர்முறை,உண்கலம், வாய்துப்புரவு செய்வகை, நீர் பருகுமுறை, அந்திப்பொழுது செய்வன தவிர்வன, உறங்குமுறை, இடையே செல்லாமை, இருபுலனுஞ் சேராஇடம், இருபுலன்கழிக்குந்திக்கு, வாய்பூசலாகா இடங்கள், காட்சியவர் நற்செயல், நிரயஞ்செலுத்துவன, சிந்திக்கலாகாதவை, மனைப்பலியூட்டல், இளங்கிளைஞர்உணவு, நுண்ணிய நூலறிவினர்செயல், மனைவியை நீங்கியிருக்குங்காலமும் நீங்காதிருக்குங்காலமும், உடனுறைவுக்காகாக் காலம், மணை முதலியவை,பந்தலிற்பரப்பத்தகாதவை, இல்லம் பேணுமுறை, ஓதற்குதவாதகாலம், பெருஞ் சோறளிக்குங்காலம், குடிமை முதலியவற்றிற்குத்தக்க செயல்,கேள்வியுடையார் செயல், தம்மொளி வேண்டுவார் செய்யத்தக்கன, அசை

யாத உள்ளத்த வரொழுக்கம், நெறிப்பட்டார் பயிலாதன, விருந்தினர்க்கு வேனோடு செய்யுஞ் சிறப்பு, அறிவினர் விரும்பாத இடங்கள், தொல்வரவில் தீர்ந்த தொழில்படுகையில் செய்யலாகாதவை, தீயவொழுக்கங்கள் சில, பெரியாரோடு செல்லும்பொழுது செய்யத்தகாதன, நூல்முறையாளர் துணிவு, குரவர்க்குச் செய்யும் ஒழுக்கம், திறங்கண்டார் கண்ட நெறி, பிறப்பினுள் போற்றப் பெறுபவர், இன்னவரோடு தனித்திருக்கலாகாதென்றல், அரசருடன் பழகும் அளவு, சொல்லுமிடத்துக்குற்றமாவன, நன்னெறி, அரசன் செயலில் வெறுப்படையாமை முதலியன, அரசர் முன்பு செய்யத் தகாதவை, அரசர்முன் பல்காற் பயின்றுரையாதன, பிறரை வணங்கத்தகாத இடங்கள், பெரியார் முன் செய்யின் பழியாவன, நன்மாணுக்கர் செய்கை, அவையில் செய்யத்தகாதன, சொல்லும் முறைமை, குலமாதர் செய்கை, அரசவையில் செய்யலாகாதவை, அறிஞர் முச்செயல், குரவர் பெயர் முதலியனகூருமை, ஆன்றோர் செயல் ஆகாதன, மனைவி மனம் மாறுபடுதல், ஒரு தன்மையான வாழ்வுடையவர், பயின்றன என்றிகழத் தகாதன, அரசரின் மேம்பட்ட செய்யாமை, உண்டது கேளாமை, கட்டிலிற் கிடந்தாருக்குச் செய்யத்தகாதன, உதவிப் பயனுரையாமை முதலியன, கிட்டாதவற்றை விரும்பாமை முதலியன, தலைப் பூமோத்தல் முதலியன காட்டுள் நடந்து கொள்ளும் முறைமை, அந்தணர் வாய்ச்சொல் கேட்டல், மன்றத்து ஆகாச் செயல், ஐயமில் காட்சியார் செயல், பொன்போல் போற்றத்தக்கவை, எறும்பு முதலியன போற் கருமஞ் செய்தல், பெரியோர் முன் ஒன்றைச் சொல்லும் முறை, புகத்தகாத இடங்கள், நடுக்கற்ற காட்சியார் செய்யாதன, ஆசாரத்திலிருந்து விலகியவர்.

ஆசாரங்கள்—(௩) சமயாசாரம், குலாசாரம், தேசாசாரம்.

ஆசாரலிங்க பத்தர்கள்-(௬) ஆசாரலிங்கமோகி, ஆசாரலிங்கபத்தன், ஆசாரலிங்க பூசகன், ஆசாரலிங்கவீரன், ஆசாரலிங்கப்பிரசாதி, ஆசாரலிங்கப் பிராணி.

ஆசாரவிதம் —(௩) ஒழுக்கம், வழக்கு. தண்டம்.

ஆசாரிய புருடர்கள்—(௪) சங்கராச்சாரியார், தோடகாசாரியார், அத்தாமலகாசாரியார், பதுமபாதாசாரியார், இவர்கள் அத்வைத சமயத்தினர். நாட்டிலே அத்வைதம் பரவ வுழைத்தனர். பின்வந்தோர் பலர் சங்கராச்சாரியார் என்னும் பெயரையே மேற்கொண்டபடியால் முன்னவர் ஆதிசங்கரர் எனப் பெறுவார்.

ஆசாரியபுருஷர்கள்—(எ௪) திருக்குருகைப்பிரான், கூரத்தாழ்வான், நடாதூராழ்வான், எங்களாழ்வான், தெற்காழ்வான், இளையாழ்வான், கோமடத்தாழ்வான், சேட்டலூராழ்வான், வேதாந்தியாழ்வான், அனந்தாழ்வான், நடுவிலாழ்வான், மிளகாழ்வான், நெய்யுண்டாழ்வான், உக்கலாழ்வான், திருக்கோவலூராழ்வான், திருமோகூராழ்வான், கோயிலாழ்வான், அருணபுரத்தாழ்வான், கணியனூர் சிறியாழ்வான், திருமலைநல்லான், கிடாம்பியாச்சான், வங்கிபுரத்தரசன், ஈச்சம்பாடியாச்சான், கொங்கிலாச்சான், திருக்கண்ணபுரத்தாச்சான், எம்பார், சிறிய கோவிந்தப்பெருமாள், கிடாம்பிப் பெருமாள், அம்

மங்கிப்பெருமாள், ஆசூரிப்பெருமாள், பிள்ளையப்பன், பிள்ளைத்திருமலை நம்பி, வங்கிபுரத்து நம்பி, சொட்டைநம்பி, முடும்பை நம்பி, பராங்குச நம்பி, திருக்குறுங்குடி நம்பி, தொண்டனூர் நம்பி, அருணபுரத்துநம்பி, மருதூர் நம்பி, மழையூர் நம்பி, வடுக நம்பி, குரவி நம்பி, புண்டரிகாட்சர், முதலியாண்டான், கந்தாடையாண்டான், மாருதியாண்டான், மதுரையாண்டான், ஈயுண்ணியாண்டான், சோமாசியாண்டான் ஸ்ரீயராண்டான், ஈசாண்டான், பெரியாண்டான், சிறியாண்டான், அம்மங்கியாண்டான், ஆளவந்தாராண்டான், சுந்தரத்தோளுடையார், உக்கலம்மாள், பரித்திக்கொல்லையம்மாள், சொட்டையம்மாள், முடும்பையம்மாள், வைத்தமாநிதியார், பராசரபட்டர், சீராமபிள்ளைப்பட்டர், சிறுப்பள்ளி தேவராஜபட்டர், பிள்ளையுறந்தை யுடையார், பிள்ளை திருவாய்மொழி யரையர், பிள்ளை திருநாரையூரரையர், பிள்ளை ராஜமகேந்திரம் பெருமாளரையர், அதிகாரிப்பிள்ளை, திருநகரிப்பிள்ளை, குமரன் பேரப்பிள்ளை, ஆனந்த சோமயாஜியார், காஞ்சிசோமயாஜியார்.

ஆசாரியராதற்குரிய குலம் — (௪) பிராமணர், அரசர், வைசியர், வேளாளர்.

ஆசாரியர்—(௪) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர், மாணிக்கவாசக சுவாமிகள்.

ஆசாரிவகையர்—(௨) தீட்சாகுரு, வித்தியா குரு.

ஆசான்சாதி — (௪) காந்தாரம், சிகண்டி, தசாக்கரி, சுத்தகாந்தாரம், இவற்றுள் ஆசான் என்னும் பண்ணியலுக்கு அகச்சாதி காந்தாரம், புறச்சாதி சிகண்டி, அருகு சாதி தசாக்கரி, பெருகு சாதி சுத்தகாந்தார மெனக்கொள்க.

ஆசிரமங்கள்—(௪) பிரமசரியம், கிருகஸ்தன், வானப்பிரத்தன் சந்நியாசி.

ஆசிரியர்—(௩) உரையாசிரியர், நூலாசிரியர், போதகாசிரியர்.

ஆசிரியர்கள்—(அ) போதககுரு, வேதககுரு, நிகிதகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காரககுரு, விகிதகுரு. - போதககுரு நூல் போதிப்பார். வேதககுரு மறைபோதிப்பார்-நிகிதகுரு மந்திர தந்திரங்கள் கற்பிப்பார்; காமியகுரு; இம்மை மறுமைகட்கு வேண்டிய அறிவுரைகளைப் போதிப்பார்; சூசககுரு அறிவுரையால் சமாதி முதலிய அறுகுணங்களை ஒருங்கே உண்டாக்குவார் - வாசககுரு; இவ்வுலகப் பொய்ம்மை முதலியவைகளை உரைத்து ஆன்மவிருப்பம் உண்டாக்குவார்-காரககுரு; சிவசீவர் ஐக்கிய அறிவை உண்டாக்குவார்; விகிதகுரு-ஐயம் மாறுபாடு முதலிய குற்றங்கள் நீங்கி வீடடையச் செய்வார்.

ஆசைகள் — (௨) இம்மையாசை, மறுமையாசை.

ஆசைகள் — (௩) பெண்ணாசை, மண்ணாசை, பொன்னாசை.

ஆச்சிரமம்—(௪) பிரமசாரி, இல்வாழ்வோன், வானப்பிரத்தன், சந்நியாசி. இவருள் பிரமசாரி—ஆசிரியனிடத்தோதி விரதங்காத்து விவாக மின்றி யிருப்போன், இல்வாழ்வோன்-இல்லறத்தின்வழா தில்லாளோடுங்கூடி வாழ்வோன், வானப்பிரத்தன் - இல்லந்துறந் தில்லாளோடாயினுந் தனித்தாயினும் வனத்திற்றவஞ் செய்வோன், சந்நியாசி-முற்றத் துறந்தோன்.

ஆடலின் கூறுபாடு—(௩) தாண்டவம், நாட்டியம். நிருத்தம்.

ஆடல்வகை — (௯௬) வசைக் கூத்து, புகழ்க்கூத்து, வேத்தியல், பொதுவியல் வரிக்கூத்து, வரிச்சாந்திக்கூத்து, சாந்திக் கூத்து, விநோதக்கூத்து, ஆரியும், தமிழ், இயல்புக்கூத்து, தேசிக்கூத்து, சுத்தநிருத்தம், வடுகு, சிங்களம், குரவை, கலி நடம், கரணம், நோக்கு, தோற் பாவை, நகைத்திறச்சுவை, அல்லியம், கொடுகொட்டி, குடை, துடி, குடம், பாண்டரங்கம், மல், கடையம், பாவை, மரக்கால், பேடு, கழங்கு, பந்து, அம்மானை, பொழில் விளையாட்டு, நீர்விளையாட்டு.

ஆடவர் குணம்—(௪) அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.

ஆடற்பேதம்—(௨) நின்ருடல், வீழ்ந்தாடல்.

ஆட்டின்வகை — (௫) காராடு, செம்மறியாடு, கம்பளியாடு, மலையாடு, துருவாடு, பள்ளையாடு.

ஆணவமலகாரியம்—(௮) விகற்பம், கற்பம், குரோதம், மோகம், நகை, கொலை, அருர், மதம்.

ஆண்கை—(௯) முட்டி, சிகரம் பதுமம், சந்தஞ்சம், சிலந்தி, சூசி, சதுநம், பதாகம், திரிபதாகம் என்பனவாம்.

ஆண்டருளுமுறை—(௨) மர்க்கட சம்பந்தம், மார்ச்சால சம்பந்தம்.

ஆண்நட்சத்திரம்—(௧௦) பரணி, கார்த்திகை, உரோகணி, புநர் பூசம், பூசம், அத்தம், அநுடம், திருவோணம், பூரட்டாதி, உத்திரட்டாதி.

ஆண்பாலெழுத்து—(௧௨) அஆ, இஈ, உஊ, எஏ, ஐ, ஒஓ, ஔ. சிலர் உயிர்க்குற்றெழுத்தைந்தும் உயிர்மெய்க்குற்றெழுத்துத் தொண்ணூறும் ஆகிய தொண்ணூற்றைந்தும் என்பர்.

ஆணை—(௨) கடவுளாணை, அரசனுணை.

ஆண்பாற்கூற்றுக்கைக்கிளைத் திணை—(௯) காட்சி, ஐயம், துணிவு, உட்கோள், பயந்தோர்ப் பழிச்சல், நலம் பாராட்டல், நயப்புற்றிரங்கல், புணரா விரக்கம், வெளிப்படவிரத்தல்.

ஆண்பாற் பிள்ளைக்கவிப் பருவம்—(௧௦) காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப்பருவம், சப்பாணிப் பருவம், முத்தப்பருவம், வருகைப் பருவம், அம்புலிப் பருவம், சிறுபறைப்பருவம், சிற்றில் சிதைத்தற் பருவம், சிறுதேருருட்டற் பருவம், இவை முறையே இரண்டாம் மாதம், ஐந்தாமாதம், எட்டாமாதம், ஒன்பதாம் மாதம், பதினோராமாதம், பன்னிரண்டாமாதம், பதினெட்டாமாதம், இரண்டாமாண்டு, மூன்ருமாண்டு, நான்காமாண்டு என்னும் காலங்களிற் கூறப்படுவனவாம்.

ஆண்மைகள்—(௩) கல்வியாண்மை, செல்வத்தாண்மை, வீரத் தாண்மை.

ஆதனங்கள் — (௯) சுபத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் என்பன.

ஆதாரதலம்—(௬) மூலாதாரம் - திருவாரூர், சுவாதிட்டானம் - திருவானைக்கா, மணிபூரகம் - திருவண்ணுமலை, அநாகதம் - சிதம்பரம்; விசுத்தி - திருக்காளத்தி, ஆக்கினை - காசி.

ஆதாரதேவதைகள்—(௬) விநாயகக் கடவுள் - மூலாதாரம், பிரமன் - சுவாதிட்டானம். விட்டுணு - மணிபூரகம், ருத்திரன் - அநாகதம், மகேசுரன் - விசுத்தி, சதாசிவன் - ஆக்கினை.

ஆதாரத்தோற்றம்—(சு) பந்தம், விளக்கு, மின்னல், மின்மினி, சூரியன், சந்திரன்.

ஆதாரம்—(சு) மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை; இவற்றிற்கு முறையேயிடம் குதம், குய்யம், நாபி, இதயம், அடிநா, நெற்றி.

ஆதிசைவகுல அடியார்கள்—(ச) சுந்தரமூர்த்தி நாயனர், புகழ்த்துணை நாயனர், சடைய நாயனர், இசைஞானியார்.

ஆதிதீர்த்தங்கரர் — (உச) நிர்வாண, சாகர, மகாசாது, விமலப்பிரப, சீதர, சுதத்த, அமலப்பிரப, உத்தர, ஆங்கீர, சந்மதி, சிந்து, குசுமாஞ்சலி, சிவகண, உச்சாக, ஞானேச்வர, பரமேச்வர, விமலேச்வர, யசோதர, கிருட்ண, ஞானமதி, சுத்தமதி, சீபத்ர, அதிக்கிராந்த சாந்தாச்சேதி.

ஆதித்தன் பிள்ளைகள் — (அ) மனு, யமன், சனி, காளிந்தி, சுக்கிரீவன், கன்னன், நாதன், தத்தியன்.

ஆதித்தன்றேவிமார்—(உ) உஷாதேவி, சாயாதேவி.

ஆதிமருந்து—(ங) சுக்கு, மிளகு, திப்பிலி.

ஆதிமார்க்கிகசாத்திரம்—(ங)பாசுபதசாத்திரம், காபாலிக சாத்திரம், மாவிரதம்.

ஆத்யான்மிகசாத்திரம் —(ங)சாங்கியம், பாதஞ்சலம், வேதாந்தம்.

ஆத்திவகை—(சு) ஆத்தி, காட்டாத்தி, செவ்வாத்தி, ஊழலாத்தி, திருவாத்தி, விளாத்தி.

ஆத்மா—(ங) ஞானத்மா, மகானத்மா, சாந்தாத்மா.

ஆத்மாக்கள்—(உ) சீவாத்மா, பரமாத்மா.

ஆத்மாவின்தர்மம்—(கஉ) நித்தியம், அவ்வியயம், சுத்தம், ஏகம் க்ஷேத்ரஞ்ஞன், ஆசிரயம், அவிகாரி, சொப்பிரகாசம், ஏது, வியாபகம், சங்கமில்லாதது, அநாவிருதம்.

ஆத்மாவின் நிஷேத்தியவிசேடணங்கள்—(க0) அநந்தம், அகண்டம், அசங்கம், அத்துவிதீயம், அகன்மம், நிருவிகாரம், நிராகாரம், அவ்வியக்தம், அவ்வியயம், அட்சரம்.

ஆத்மாவின்பேதம் — (ங) மாத்தியாத்துமா, கௌணாத்துமா, முக்கியாத்துமா.

ஆத்மாவின் விதேய விசேடணங்கள்—(க0) சத்து, சித்து, ஆநந்தம், பிரமம், சுயம்பிரகாசம், கூடஸ்தர், சாட்சி, திருட்டா, உபதிருட்டா, ஏகம்.

ஆத்மாவை அடையாத விகாரங்கள்—(சு) பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, விகாரம், குறைவு, மறைவு.

ஆநந்தக்குற்றங்கள்—(ச) எழுத்தாநந்தம், சொல்லாநந்தம், இறப்பவிழிந்த ஆநந்த உவமை, இறப்ப உயர்ந்த ஆநந்த உவமை.

ஆநந்தம்—(ங) பிரஹ்மாநந்தம், விடயாநந்தம், வாசனானந்தம்.

ஆமணக்கு—(கச) எலியாமணக்கு, கடலாமணக்கு, காட்டாமணக்கு, சிற்றாமணக்கு, செவ்வாமணக்கு, பறங்கியாமணக்கு, புல்லாமணக்கு, பேராமணக்கு, மலையாமணக்கு, சூரியகாந்தவாமணக்கு, எரியாமணக்கு, படுக்கையாமணக்கு, மணியாமணக்கு, அறுபதாங்கொட்டையாமணக்கு.

ஆயர்குலம்—(ங)நல்லினத்தாயர், கோட்டாயர், புல்லினத்தாயர்.

ஆயுதங்கள்—(௰) வச்ராயுதம், த்வஜாயுதம், கதாயுதம், பத்மாயுதம், சக்கராயுதம், சத்தியாயுதம், தண்டாயுதம், வாளாயுதம், பாசாயுதம், திரிசூலாயுதம். இவற்றைத் தசாயுதங்கள் என்பர்.

ஆயுதத் தொகை — (௩௦) வில் - வாள், சக்கரம், மழு, சூலம், தோட்டி, வேல், வச்சிராயுதம், தண்டு, ஈட்டி, கைவேல், இருப்புலக்கை, பெருஞ்சவளம், சிறுசவளம், வளைக்கயிறு, ஊசி, முசுண்டி, உளி, கைக்கட்டி, குறுந்தடி, கத்தி, கைவாள், அடைவாள், அரிவாள், கொடுவாள், வட்டம், கழுமுள், நாராசம், பிண்டிபாலம், அம்பு.

ஆயுதப்பொது — (எச) வளைவிற்பொறி, கருவிரலூகம், கல்லுமிழ் கவண், கல்லிடுங்கூடை, தூண்டில், தொடக்கு, ஆண்டலையடுப்பு, கவை, கழு, புதை, ஐயவித்துலாம், கைபெயர் ஊசி, எரிசிரல், பன்றி, பணை, எழு, சீப்பு, கணையம், கோல், குந்தம், வேல், சதாக்கினி, தள்ளிவெட்டி, களிற்றுப்பொறி, விழுங்கும்பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறி, ஞாயில், பிண்டிபாலம், சூலம், எழு, மழு, வாள், கவசம், தோமரம், கதை, தண்டம், நாராசம், இருப்புமுள், கழுமுள், கூன்வாள், சிறுவாள், கொடுவாள், அரிவாள், சுழல்படை, ஈர்வாள், உடைவாள், கைவாள், கணையம், கோடாரி, தோட்டி, வேல், வச்சிரம், குறுந்தடி, ஈட்டி, கவண், சிறுசவளம், பெருஞ்சவளம், சக்கரம், கன்னம், உளி, பாசம், தாமணி, சாலம், ஊசி, முசுண்டி, முசலம், இடங்கணி, அள், பலகை.

ஆயுதவகை—(உ) அத்திரம், சத்திரம்; இவற்றுட்கைவிடு மாயுதமத்திரம், கைவிடாவாயுதஞ் சத்திரம்.

ஆய்தக்குறுக்கம்—(உ) லகரவீற்றிற் குறுகல், ளகரவீற்றிற் குறுகல்.

ஆய்தம்—(உ) குற்றுய்தம், முற்றுய்தம்.

ஆரபடியிலக்கணம்—(உ) பொருள் பொருளாக வருதல், வீரமானுடர் தலைவராக வருதல்.

ஆரவகை—(எ) மலையாரம், தீமுரன்பச்சை, கிழான்பச்சை, பச்சை வெட்டை, அரி, சந்தனம், வேர் சுக்கொடி.

ஆரைவகை —(ச) ஆரை, கடலாரை, கல்லாரை, புளியாரை, வல்லாரை.

ஆர்த்தன்—(ச) ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தாத்தி, ஞானி.

ஆலமரம்—(௩) ஆலமரம், கல்லாலமரம், பேயாலமரம்.

ஆலயவகை—(உ) இருதயப் பிரத்தம், சரீரப்பிரத்தம்.

ஆவரணம்—(அ) (வீரசைவம்) குரு, லிங்கம், சங்கமம், திருநீறு, சிவகண்மணி, திருவைந்தெழுத்து, புனிதநீர், பிரசாதம்.

ஆவரணம் (மறைக்கை) (உ)அசத்துவாபாதக ஆவரணம், அபானுபாதக ஆவரணம்.

ஆவரைவகை—(ச) வெள்ளையாவரை, ஆவரை, கொடியாவரை, கடலையாவரை, பொன்னுவரை, சூரத்தாவரை.

ஆழ்வார்கள்—(கஉ) பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பட்டர்பிரானுழ்வார், சூடிக்கொடுத்தநாச்சி

யார், தொண்டரடிப்பொடியாழ் வார், திருப்பாணாழ்வார், திரு மங்கையாழ்வார்.

ஆளத்தி—(௩) காட்டாளத்தி, நிர வாளத்தி, பண்ணாளத்தி.

ஆளத்திக்கு வருமெழுத்து—(௧௨) அகரமுதல் ஔகாரமிறுதியன வாம்.

ஆற்றுப்படை—(௫) திருமுருகாற் றுப்படை, பொருநராற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, தணி கையாற்றுப்படை.

ஆனந்தம்—(௮) விடயானந்தம், பிரமானந்தம், வாசனானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம், ஆன்மானந்தம், அத்துவிதா னந்தம், வித்தியானந்தம்.

ஆனைமுகக்கடவுளைப்பூசித்தற்குரிய மலர் வகைகள்—(௨௧) மாசிப் பச்சை, கையாந்தகரை, வில் வம், ஊமத்தை, நொச்சி, நாயு ருவி, கத்தரி, வன்னி, அலரி, காட்டாத்தி, எருக்கு, மருது, விட்டுணுகரந்தை, மாதுளை, தேவதாரு, மரு, நெல்லி, சிறு சண்பகம், செந்தாளி, பாதிரி, அறுகு.

ஆன்மசரீரம்—(௩) தூலசரீரம், சூக்குமசரீரம், காரணசரீரம்.

ஆன்மதத்துவம்—(௨௪) பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், மெய், வாய், கண், மூக்கு, செவி, வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம், சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், மனம், புத்தி, அகங்காரம், குணம்.

ஆன்மவறிவு—(௬) சுவையறிவு, ஒளியுணர்வு, ஊறுணர்தல், ஓசையுணர்வு, கந்தறிவு, பகுத் தறிவு என்பனவாம்.

ஆன்மா—(௨) சீவான்மா, பர மான்மா; அவையாவன - சரீரா வச்சின்னவான்மா - சீவான்ம இதரபதார்த்தமான வச்சின்ன வான்மா-பரமான்மா.

ஆன்மா—(௩) ஜீவாத்துமா, அந்த ராத்துமா, பரமாத்துமா.

ஆன்மாக்களின் வகை—(௩) விஞ் ஞானகலர், பிரளயாகலர், சகலர்.



இகழ்ச்சிக் குறிப்புச்சொல்—(௯) என், இளி, ஏயே, சீச்சீ, என்னே, எற்று, எவன், எல், சை.

இசை—(௩) மந்தரம், மத்திமம், தாரம்.

இசை—(எ) குரல், துத்தம், கைக் கிளை, உழை, இளி, விளரி, தாரம். இவற்றுண்மிடற்றுற் குரல், நாவினுற்றுத்தம், அண் ணத்தாற் கைக்கிளை. சிரத்தா லுழை, நெற்றியாலிளி, நெஞ் சால்விளரி, மூக்காற் றாரம், இங் ஙனந் தனித்தனி பிறக்கும்! இவையே யேழ்சுரமெனவும், வீணையிலேழ் நரம்பெனவும் படும்; இவற்றிற்கோசை யுவமை- மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை. சுவை யுவமை-பால், தேன், கிழான் நெய், ஏலம், வாழை, மாதுளங் கனி. வாசனை யுவமை-மௌ வல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், பொன்னுவிரை, புன்னை. அக்கரம்-ஆ, அ, ஈ, இ, ஊ, உ, ஏ, எ, ஐ, ஓ, இ, ஔ, உ. மாத்திரை-நான்கு குரல், நான்கு துத்தம், இரண்டு கைக்கிளை, மூன்றுழை, நான்கிளி, மூன்றுவிளரி, இரண்டு தாரம் இவற்றுலெழு பாலை பிறக்கும். அவையாவன:

குரலே குரலாயிற் செம்பாலை, துத்தமே குரலாயிற் படுமலைப் பாலை, கைக்கிளையே குரலாயிற் செவ்வழிப்பாலை உழையே குரலாயினரும்பாலை, இளியே குரலாயிற் கொடிப்பாலை, விளரியே குரலாயின் விளரிப்பாலை, தாரமே குரலாயின் மேற்செம்பாலை. இவற்றுட் செம்பாலைக் குக்கொடிப்பாலைவலிது. கொடிப்பாலைக்கு விளரிப்பாலையும் மேற்செம்பாலையும் வலிது. அன்றியுந் தாரத்து ளுழையு முழையுட்குரலுங் குரலுளிளியு மிளியுட்டுத்தமுந் துத்தத்துள் விளரியும், விளரியுட் கைக்கிளையும் பிறப்பது தகுதி-இவற்றிற் கிறைவர் விசுவாமித்திரன், சமதக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன், ஈசன், இவற்றிற்குயிர் ஈசன்.

இசைக்கரணம்—(அ) பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு. இவற்றின் வரலாற்றைப் பொருளகராதியிற் காண்க.

இசைக்கருவி—(ரு) தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவி.

இசைக்கிரியை—(அ) எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், எலி, உருட்டு, தாக்கு.

இசைக்குரியசுவை—(எ) பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி.

இசைக்குரியதேவர்—(எ) விசுவாமித்திரன், யமன், அக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன் காசிபன் எனவுங் கூறுப.

இசைக்குரிய மணம்—(எ) மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், தாமரை, புன்னை.

இசைக்குரியவகை—(அ) வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை. இவற்றுள் வார்தலாவது - சுட்டு விரலாற் றெழில் செய்தல். வடித்தலாவது-சுட்டுவிரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை யகமும் புறமுமாராய்தல், உந்தல் - நரம்புகளைத் தெறித்து வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டது மறிதல், உறழ்தலாவது-ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் இரண்டிடையிட்டு நரம்புகளைத் தெறித்தல், உருட்டலாவது-இடக்கைச் சுட்டுவிரலுருட்டலும் வலக்கைச் சுட்டுவிரலுருட்டலும் சுட்டொடு பெருவிரற் கூட்டியுருட்டலும், இருபெருவிரலுமியைந்துடனுருட்டலுமாம். பிறவற்றை வந்துழிக் காண்க.

இசைக்குழற்குரியன—(ரு) கருங்காலி, சந்தனம், செங்காலி மூங்கில், வெண்கலம் என்பனவாம். இவற்றுள் மூங்கிலிற் செய்வது உத்தமம் வெண்கலம் மத்திமம். ஏனைய அதமமாம்.

இசைநிறையசைச்சொல்— (சு) ஏ, ஓ, உம், அம்ம, அரோ, குரை.

இசைபிறக்கும்வகை—(சு) தாரத்துள் உழை, உழையுட்குரல், குரலுள் இளி, இளியுள்துத்தம், துத்தத்துள் விளரி, விளரியுட் கைக்கிளையுமாம்.

இசைப்பா —(கக) செந்துறை, வெண்டுறை பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்தகம், பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகு மண்டிலம், சிந்து, திரிபதை, சவலை, சம்பாகவிருத்தம், சாதிக்கிரியை, செந்துறை, வண்டுறை, சாதிக்கிரியைப் பெருந்தேவபாணி, சாதிக்கிரியைச் சிறுதேவபாணி.

இசைப்பாச்சாதியோசை—(௩)சுத்தம், சூாளகம், தமிழ்.

இசைப்பாவகை—(௧) செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, முத்தகம், பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகுமண்டிலம் என்பனவாம். இவையின்றிச் சிந்து, திரிபதை, சவலை, சம்பாதம், விருத்தம், செந்துறை, வெண்டுறை, தேவபாணி, வண்ணம் எனவுங் கூறுப.

இசைபிறப்பிடம்—(எ) மிடற்றுல் குரல், நாவினுற் றுத்தம், அண்ணத்தாற் கைக்கிளை, சிரத்தால் உழை, நெற்றியால் இளி, நெஞ்சால் விளரி, மூக்காற்றுரம்.

இசைப்பெருந்தானம்—(அ) நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணக்கு, உதடு, பல், தலை.

இசைமாத்திரைகள்—(எ)குரலிற்கு நான்கு, துத்தத்திற்கு நான்கு, கைக்கிளைக்கு மூன்று, உழைக்கு இரண்டு, இளிக்கு நான்கு, விளரிக்கு மூன்று, தாரத்திற்கு இரண்டு.

இசையிலக்கணம்—(௯) ஆடல், பாடல், ஆதியிசை, முத்தமிழ், பண், பாணி, தூக்கு, முடம், தேசிகம், இவற்றுள் ஆடலென்பது எல்லாக்கூத்து. பாடலென்பது பண்ணல் முதலிய எல்லாப் பாடலியல்பு. ஆதியிசையென்பது நரப்படைவாலுரைக்கப் பட்ட பதினோராயிரத்துத்தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்ருகிய விசை. முத்தமிழென்பது வடவெழுத் தொரீஇ வந்தவெழுத்தானே உறழ்ந்து கட்டப்பட்ட வாக்கியக் கூறுகளும், இயலிசை நாடகமென்று சொல்லப்பட்டனவுமாம். பண்ணென்பது நாப்படைவால் நிறந்தோன்றப் பண்ணப்படா நின்ற பண்ணும் பண்ணியற் றிறமும் திறமும் திறத்திறமுமாம். பாணியென்பது இருவகைத் தாளவிகற்பம். தூக்கென்பது செந்தூக்கு முதலாய எழுவகைத் தூக்கு. முடமென்பது இவற்றின் குற்றங்கள். தேசிகமென்பது இயற்சொற் முதலிய நான்கு சொற் கூருய சொற்பிரயோகமாம்.

இசையெழுத்து—எ-ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ.

இசையெழுத்து—எ-ச, ரி, க, ம, ப, த, நி.

இசையோசை—எ-வண்டு, கிளி, குதிரை, யானை, குயில், தேனு, ஆடு.

இடத்தையச்சொல்—(௪) யாங்கு, யாங்ஙனம், யாண்டு, யாண்டை.

இடந்தலைப்பாட்டின் வகை —(௩) தெய்வந்தெளிதல், கூடல், விடுத்தல்.

இடந்தலைப்பாட்டின்விரி—(௫)தந்த தெய்வந்தருமெனச்சேறல், முந்துறக்காண்டல், முயங்கல், புகழ்தல், உடன்புணராயத்துய்த்தல்.

இடப்பெயர்—(௪௪) தத்துவம், அதலம், விதலம், சுதலம், தராதலம், நிதலம், இரசாதலம், பாதலம், தியலோகம், மகலோகம், தவலோகம், சனலோகம், சுவர்லோகம், புவர்லோகம், பூலோகம், ஆகாயம், அண்டகோளகை, அண்டமுகடு, அண்டச்சுவர், திக்கு, நவகண்டம், எழுதீவு, நாடு, நகரம், புரம், இராசதானி, பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம், மடப்பம், பெருங்கிராமம், சிறுகிராமம், சேரி, வழி, மேடு, பயம்பு, திணை, காடு, கடல், மலை, வயல், சுரம், செய், கரம்பு, களர்.

இடப்பொருளிடைச் சொற்கள்—(௪௯) கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின், முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முதல், பின், பாடு, அளை, தேம், உழை, உழி, உளி, இல், அகம், புறம், உள், அந்தில், ஆங்கு, ஈங்கு, ஊங்கு, அவண், இவண், உவண், ஆண்டு, ஈண்டு, யாண்டு, யாங்கு, அங்கு, இங்கு, உங்கு, எங்கு, எவண், அயல்.

இடம்—(௩) மலை, நாடு, யாறு.

இடம்—(௩) முதல், இடை, கடை,

இடம்—(௨) வழக்கிடம், செய்யுளிடம்.

இடம்—(௩) தன்மை, முன்னிலை, படர்க்கை.

இடவோட்டு நட்சத்திரம் —(௧௨) ரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை, மகம், பூரம், உத்திரம், விசாகம், அனுஷம், கேட்டை, திருவோணம், அவிட்டம், சதயம்.

இடைச்சொல்—(௧௧) உவம உருபிடைச்சொல், தத்தம் பொருளுணர்த்து மிடைச்சொல், வேற்றுமை யுருபிடைச்சொல், இடைநிலையுருபிடைச்சொல், விகுதியுருபிடைச் சொல், சாரியையுருபிடைச்சொல், இசைநிறையிடைச் சொல், அசை நிலையிடைச்சொல், ஒலிக்குறிப்பிடைச்சொல், அச்சக் குறிப்பிடைச்சொல் விரைவுக் குறிப்பிடைச்சொல்.

இடைச்சொற் பொருள்கோள்—(௨௧) தெரிநிலை, தேற்றம், ஐயம் முற்று எண்சிறப்பு; எதிர்மறை, எச்சம், வினு, விழைவு, ஒழியிசை, பிரிநிலை, கழிவு, ஆக்கம், சுட்டு, காலம், இடம், எல்லை; இடப்பன்மை, தொழில் பயில்வு, பயனின்மை, விகற்பம், இரக்கம், வியப்பு, அச்சம், இகழ்ச்சி, ஒலிக்குறிப்பு, அச்சக் குறிப்பு, விரைவுக் குறிப்பு.

இடையர்குல அடியார்கள்—(௨) திருமூல நாயனர், ஆனுயநாயனர்.

இடையெழுத்துக்கள்—(௬) ய, ர, ல, வ, ழ, ள.

இடைவள்ளல்—(எ) அக்குரன், அந்திமான், கன்னன், சந்தன், சந்திமான், சிசுபாலன், வக்கிரன்.

இட்டதிட்டங்கள்—(௯) ஆப்தேஷ்டம், ஆகமேஷ்டம், சம்சாரேஷ்டம், மோட்சேஷ்டம், பிரத்தியபிஞ்ஞானேஷ்டம், கரும்பலசம்பந்தேஷ்டம், லோகப் பிரவிருத்தி திருஷ்டம், சாஸ்திரப்பிரவிருத்திதிருஷ்டம், புருஷப்பிரவிருத்தி திருஷ்டம்.

இணக்கம்—(௨) நல்லோரிணக்கம், தீயோரிணக்கம்.

இணைக்கை—(௧௬) அஞ்சலி, புட்பாஞ்சலி, பதுமாஞ்சலி, கபோதம், கற்கடகம், சுவத்திகம், கடகாவருத்தம், நிடதம், தோரம், உற்சங்கம், புட்பபுடம், மகரகம், சயந்தம், அபயவத்தம், வருத்தமானம்.

இணையா வினைக்கை—(௩௩) பதாகை, திரிபதாகை, கத்திரிகை, தூபம், அராளம், இளம்பிறை, சுகதுண்டம், முட்டி, கடகம், சூசி, கமலகோசிகம், காங்கூலம், கபித்தம், விற்பிடி, குடங்கை, அலாபத்திரம், பிரமரம், தாம்பிரசூடம், பசாசம், முகுளம், பிண்டி, தெரிநிலை, மெய்ந்நிலை, உன்னம், மண்டலம், சதுரம், மான்றலை, சங்கு, வண்டு, இலதை; கபோதம், மகரமுகம், வலம்புரி.

இதிகாசம்—(௨) பாரதம், இராமாயணம்.

இதிகாசம்—(௩) சிவரகசியம், பாரதம் இராமாயணம்.

இந்திரர்—(௧௪) அரி, விபசித்து, சுசாந்தி, சிபு, விபு, மனோசவன், புரந்தரன், மாவலி, அற்புதன், சாந்தி, விருடன், இருத்தாமன், திவஸ்பதி, சுசி, இவர்களுள் விபுவை, வசு, இரவி எனவும், புரந்தரனை ஓசஸ்வீ, யெனவுங் கூறுவர்.

இந்திரற்குரியன—(௧௩) அமுதம், உச்சைச்சிரவம், இடி, காமதேனு, நவநிதி, இந்திராணி, அமராவதி, ஐராவதம், வச்சிராயுதம், சுதன்மம், கற்பகமலர், சயந்தமண்டபம், சயந்தகுமாரன், வசந்தமாளிகை, மேகவாகனம், மருதநிலம்.

இந்திரன் தருக்கள்—(௫) சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம்.

இந்திரன் மேகம்—(௭) ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சம்காரித்தம், காளமுகி, துரோணம், நீலவருணம். சம்வர்த்தம். இவையே சப்தமேகங்கள் எனப்படும்.

இந்திரன் மைந்தர்-(௩) அர்ச்சுநன், குரங்கரசனாகிய வாலி, சயந்தன்.

இந்திரியக் காட்சி—(௬) ௦சையோகம், சையுக்த சமவாயம், சையுக்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேடண விசேடிய பாவம்.

இந்திரியங்களின் விடயங்கள்—(௧௦) வசதம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம், சத்தம், பரிசம், இரசம், உருவம், கந்தம்.

இந்திரியங்கள்—(௧௦) வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம். சுரோத்திரம், தொக்கு, சக்கு, சிங்குவை, ஆக்கிராணம்.



இந்திரியவகை—(௨) கன்மேந்திரியம், ஞானேந்திரியம்.

இயக்கம்—(௪) முதனடை, வாரம், கூடை, திரள், இவற்றுள் முதனடை யென்பது, மிகவுந் தாழ்ந்த செலவினை யுடைத்து, வாரம் அளவுநிரம்புத லுடைத்து, கூடைப்பாடல் சொற்செறிவும், இசைச்செறிவும், இனிமைச் செறிவு முடைத்து; திரட்பாடல் மிக முடுகிய நடையினை யுடைத்து.

இயக்கர் நகரம்—(௨) உத்தரசேடி, தக்கிணசேடி.

இயமம்—(௧௦) கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர் மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாமை, இரக்கம், வஞ்சமில்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம், சுசியுடைமை.

இயல்—(௮) அழுக்காறிலாமை, அவாவின்மை. தூய்மை, ஒழுக்கம், குடிப்பிறப்பு, வாய்மை, நற்புலமை, நடுவு நிலைமை.

இயல்பு வழக்கு—(௩) இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉமொழி.

இயற்கைப் புணர்ச்சிவகை—(௨) தெய்வப் புணர்ச்சி, தலைவியிற் புணர்ச்சி.

இயற்கைப் புணர்ச்சிவிரி—(௨௧) கலந்துளமகிழ்தல், நலம்பாராட்டல், ஏற்புறவணிதல், வேட்கையுணர்த்தல், மறுத்தல், உடன்படல், கூட்டம், இரந்து பின்னிற்றற் கெண்ணல், இரந்து பின்னிலை நிற்றல், முன்னிலையாக்கல், மெய்தொட்டுப் பயிறல், பொய்பாராட்டல், இடம் பெற்றுத் தழாஅல், வழிபாடு மறுத்தல், இடையூறு கிளத்தல், நீடுநினைந்திரங்கல், மறுத்தெதிர்

கோடல், வறிதுநகைதோற்றல், முறுவற் குறிப்புணர்தல், முயங்குதலுறுத்தல், புணர்ச்சியின் மகிழ்தல், புகழ்தல்.

இயற்சொல்—(ச) பெயரியற் சொல், வினையியற் சொல், இடையியற்சொல், உரியியற் சொல்.

இயைபுத்தொடை—(அ) அடியியைபு, கூழையியைபு, பொழிப்பியைபு, ஒரூஉவியைபு, கூழையியைபு, மேற்கதுவாயியைபு, கீழ்க்கதுவாயியைபு, முற்றியையபு.

இரசங்கள்—(சு) தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, கைப்பு, துவர்ப்பு, உறைப்பு.

இரசவாதம்—(உ) மூலவாதம், சாலவாதம், உண்மையாகச் செய்வது மூலவாதம். பொய்யாகச் செய்வது சாலவாதம்.

இரட்டைக்கை—(கயி) அஞ்சலி, புட்பாஞ்சலி, பதுமாஞ்சலி, கபோதம், கற்கடகம், சுவத்திகம், கடகாவருத்தம், நிடதம், தோரம், உற்சங்கம், புடப்புடம், மகரம், சயந்தம், அபயவத்தம், வருத்தம்.

இரணபேரிகை—(உ) யானைமுரசம், ஒட்டகமுரசம். போர்தொடுக்க அறைவது யானைமுரசம், போர் நிறுத்த அறைவது ஒட்டக முரசம். இம்முரசங்கள் யானை ஒட்டகம் ஆகியவைகளின் பேரில் ஏற்றி அடிக்கப்படுவதோடு ஒலிப்பிலும் மாறுபாடு உணர்த்தப்படும்.

இரதம்—(க) சிங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம்.

இரத்தினங்கள்—(ச) சருக்கராபம், சிபிடம், தளாபம், வருத்துலம், சருக்கராபம் சுக்கான் கல் போல்வது, சிபிடம் அவல்போலிருப்பது, தளாபம், நீண்ட உருவுள்ளது, வருத்துவம் உருண்டை வடிவுள்ளது.

இரத்தினங்கள்—(கூ) மணி—(கூ) காண்க.

இரத்தினலிங்கம்—(அ) வச்ரலிங்கம், மாணிக்கலிங்கம், வைடூர்ய லிங்கம், ஸ்படிகலிங்கம், பவளலிங்கம், இந்திரநீலலிங்கம், கோமேதகலிங்கம் மரகதலிங்கம்.

இரப்பு—(உ) மானந்தீராவிரப்பு, அதுதீர்ந்தவிரப்பு

இரப்பு—(கூ) உயர்ந்தோனிரப்பு, இழிந்தோனிரப்பு, ஒப்போனிரப்பு.

இரவிமனைவியர்—(உ) உஷாதேவி, சாயாதேவி.

இரவிமைந்தர்—(ச) யமன், காளிந்தி, சனி, சுக்கிரீவன், கன்னன்.

இரவுக்குறி யிடையீட்டுவகை—(உ) அல்லகுறி, வருந்தொழிற்கருமை.

இரவுக்குறியிடையீட்டுவிரி—(கஅ) இறைவிக்கிகுளை யிறைவரவுணர்த்தல், தான்குறிமருண்டமை தலைவியவட் குணர்த்தல், பாங்கிதலைவன்றீங் கெடுத்தியம்பல், புலந்தவன் போதல், புலந்தபின் வறுங்களந் தலைவி கண்டிரங்கல், தன்றுணைக்குரைத்தல், தலைமகளவலம் பாங்கி தணித்தல், இறைவன்மேற் பாங்கி குறிபிழைப்பேற்றல், இறைவிமேலிறைவன் குறிபிழைப்பேற்றல், அவள் குறி மருண்டமை யவளவற்கியம்பல், அவன் மொழிக்கொடுமை, சென்றவளவட் குரைத்தல்,

இறைமகனேதல், தாயு நாயு முருந் துஞ்சாமை, காவலர்கடு கல், நிலவு வெளிப்படுதல், கூகைகுழறல், கோழிகுரற் காட்டல்.

இரவுக்குறிவிரி—(உஎ) இறையோனிருட்குறி வேண்டல், பாங்கி நெறியின தருமை கூறல், இறைவன் நெறியினதெளிமைகூறல், பாங்கி தலைவனுட்டணியியல் வினுதல், கிழவோனவணுட்டணியியல் வினுதல், தலைவற்குத் தன்னுட்டணியியல் பாங்கி சாற்றல், இறைவிக்கிறையோன், குறியறிவுறுத்தல், நேராதிறைவி நெஞ்சொடு கிளத்தல், நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல், நேர்ந்தமை பாங்கி தலைவற் குணர்த்தல், குறியிடை நிறீஇத் தாய் துயிலறிதல், இறைவிக்கிறைவன் வரவறிவுறுத்தல், அவட்கொண்டு சேறல், குறியுய்த்தகறல், தலைவனெதிர்ப்படுதல், பெருமகளாற்றின தருமை நினைத்திரங்கல், புரவலன்றேற்றல், புணர்தல், புகழ்தல், இறைமகளிறைவனைக் குறிவிலக்கல், தலைவனிறைவியை யில்வயின் விடுத்தல், இறைவியை யெய்திப் பாங்கி கையுறைகாட்டல், இற்கொண்டேகல், இறைவனை வரவுவிலக்கல், பெருமகண் மயங்கல், தோழி தலைமகடுயர் கிளந்து விடுத்தல், திருமகட்புணர்ந்தவன் சேறல் என்பனவாம்.

இரவுக்குறிவகை—(க) வேண்டல், மறுத்தல், உடன்படல், கூட்டல், கூடல், பாராட்டல், பாங்கியிற் கூட்டல், உயங்கல், நீங்கல்.

இராகத் தகுதி—(ச) இடம், செய்யுள், குணம், காலம்; இவற்றுளிடம்பற்றிய விராக மைந்திணையிராகம், செய்யுள் பற்றிய விராகத்துள் வெண்பாவிராகம் சங்கராபரணம்; அகவலிராகம் - தோடி; கலியிராகம் - பந்துவராளி கலித்துறையிராகம்- பைரவி, தாழிசையிராகம் - தோடி; விருத்த விராகம் - கலியாணி, காம்போதி, மத்திமாவதி பலவும்; உலாவிவிராகம் - சௌராட்டிரம், தோடையவிராகம்-சௌராட்டிரம், நாட்டை, மங்களராகம்-மங்கள கௌசிகம்; தேவாரத்திராகம்-பூபாளம், பிள்ளைக்கவிராகம்.கேதார கௌளம்; பரணியிராகம் - கண்டாரவம்; குணம்பற்றிய விராகத்துள் இரக்கராகம் ஆகரி கண்டாரவம், நீலாம்புரி, பியாகடை,புன்னுகவராளி; துக்கவிராகம் - இரக்கராகங்களன்றி வராளியின்மேலாம்; மகிழ்ச்சியிராகம் - காம்போதி. சாவேரி, தந்நியாசி; யுத்தவிராகம், நாட்டை, காலம் பற்றிய விராகத்துள் வசந்தகால விராகம்-காம்போதி, அசாவேரி, தந்நியாசி; அன்றியுமாலையிராகம் - கலியாணி, காபி, கன்னடம், காம்போதி; சாமராகம்-ஆகரி; விடியலிராகம்-இந்தோளம், இராமகலி, தேசாக்கரி நாட்டை, பூபாளம். உச்சியிராகம்-சாரங்கம்; தேசரக்கரி அன்றியும் ஆகரி, இந்தோளம், இராமகலி, சாரங்கம், பூபாளநீக்கி நின்ற மற்றவை எக்காலந்துக்கும் பொதுமைய.

இராகம்—(உ௨) பைரவி, தேவக்கிரியை, மேகரஞ்சி. குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி. சீராகம்; இந்தோளம், பல்லதி. சாவேரி, படமஞ்சரி, தேசி, இலலிதை, தோடி, வசந்தம், இராமக்கிரியை, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி, பங்காளம், தந்நியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாக்கரி. காந்தாரி, சாரங்கம். இவற்றுள் பைரவி-புருடவிராகம், பிராமணசாதி, இதன் மனைவிகள் தேவக்கிரியை, மேகரஞ்சி, குறிஞ்சி,

அதிதேவதை யீசன்; பூபாளம், புருடவிராகம், பிராமணசாதி, இதன் மனைவிகள் வேளாவளி, மலகரி, பௌளி; அதிதேவதை திருமால்; சீராகம்-புருடவிராகம் அரசசாதி, இதன் மனைவிகள், இந்தோளம், பல்லதி, சாவேரி, அதிதேவதை சரச்சுவதி; படமஞ்சரி - புருடவிராகம், அரசசாதி, இதன் மனைவிகள் தேசி, இலலிதை, தோடி; அதிதேவதை - இலக்குமி; வசந்தம்-புருடவிராகம், வைசியசாதி, இதன் மனைவிகள், இராமக்கிரியை, வராளி, கைசிகம், அதிதேவதை சூரியன்; மாளவி - புருடவிராகம், வைசியசாதி, இதன் மனைவிகள் நாராயணி, குண்டக்கிரியை கூர்ச்சரி, அதிதேவதை நாரதன்; பங்காளம்-புருடவிராகம், சூத்திரசாதி, இதன் மனைவிகள் தந்நியாசி, காம்போதி, கௌளி, அதிதேவதை விநாயகன், நாட்டை - புருடவிராகம், சூத்திரசாதி-இதன் மனைவிகள் தேசாக்கரி, காந்தாரி, சாரங்கம் அதிதேவதை-தும்புருவன்; இவையன்றிப் பலவகைப்பட வழங்கு மிராகம் பலவுள. அவை கூறிற் பெருகும்.

இராசதகுணவகை—(அ) தானம், தவம், தருமம், பேணல், ஞானம், கல்வி, நலன், கேள்வி.

இராசர்—(கூ) அங்கன், அருணன், அவந்திநாடன், ஆந்திரன், இலாடன், யவனன், ஒட்டியன், கருசன், கலிங்கன், கன்னடன், கருநாடன், காசன், காசிமீரன், காந்தாரன், காம்போசன், கிராடன், குருகுதேசன், குடகராசன், குந்தளன், குருநாடன், குலிந்தன், கூர்ச்சரன், கேகயன், கேரளன், கொங்கணன், கொல்லன், கோசலன், சகதேசராஜன், சவ்வீரன், சாலுவன், சிங்களன், சிந்துநாடன், சீனராஜன், சூரசேனன், சோழராஜன், சோனகநாடன், திராவிடன், துளுவன், தெங்கணன், நிடதன், நேபாளன், பாஞ்சாலன், பப்பரன், பல்லவன், பாண்டியன், புலிந்தன், போசநாடன், மகதன், மச்சராசன், மராடன், மலையாளன், மாளவன், யுகந்தரன், வங்கன், வங்காளன், விகர்ப்பன்.

இராசி—(கஉ) மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம், இவற்றுள் முன்னூறு முத்தராயணராசி, பின்னூறுந் தக்கணாயனராசி, அன்றியு முதன் மூன்றுங் கடைமூன்று மேறுமிராசி, இடையாறு மிறங்குமிராசி

இராசியுச்சக்கோள்—(எ) மேடத்திற்குச் சூரியன்; இடபத்திற்குச் சந்திரன், மகரத்திற்குச் செவ்வாய், கன்னிக்குப் புதன், கர்க்கடகத்திற்கு வியாழன், மீனத்திற்கு வெள்ளி, துலாத்திற்குச் சனி, இடபத்திற்கு இராகு, விருச்சிகத்திற்குக் கேதுவாம்

இராசிவீதி—(ங) மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி.

இராமர்—(ஈ) சிவராமன், தசரதவிராமன், பலராமன், பரசுராமன்.

இராமன்குமாரர்—(உ) குசன், இலவன்.

இராமன்பூசித்தவிடம்—(ரு) சித்தாச்சிரமம், இராமேச்சுரம், கதிர்காமம், திருமாற்பேறு, வாரணவதம், அன்றியும் நவபாஷாணம் (இது இராமர் நவக்கிரக பிரதிஷ்டை செய்த இடம். இது இராமேச்சுரத்தருகிலுள்ளது.)

இராமாயணவகை—(எ) கம்பராமாயணம், வான்மீகியிராமாயணம், பாலஇராமாயணம், அத்தியாத்ம

இராமாயணம், முல்ல இராமாயணம், பட்ட இராமாயணம்,சம்பு இராமாயணம். இவ்வையேயன்றி இன்னும் பல இராமாயணங்களுமுள.

இராமோபதேசமந்திரம்—(௨)பல, அதிபல.

இராக்ஷதகணம்—(௯) கார்த்திகை, ஆயிலியம், மகம், சித்திரை, விசாகம், கேட்டை, மூலம், அவிட்டம், சதையம்.

இருகாலிராசி—(௪) மிதுனம், கன்னி, துலாம், கும்பம்.

இருக்குவேதவுபநிடதங்கள்—(௧௦) ஐதரேயம், கௌடீதகி, நாகவிந்து, ஆத்மப் பிரபோதம், நிருவாணம், திரிபுரை, வஹ்விருசம், முற்கலை, சௌபாக்யம், அக்ஷமாலிகை.

இருடிகள்—(௧௧) அத்திரி, வசிஷ்டர், புலத்தியர், கிருது, பரத்வாசர், விஸ்வாமித்திரர், பிரசேதஸ், ருசிகர், அகஸ்தியர், ததீசி, துருவாசர்.

இருடியர்—(௧௪௧)விட்டுணு,விருத்தன், விசாலாக்கன், வச்சகுண்டினன், சாபலன், ஆருணி, முயல், சமதக்கினி, சடரன், சங்கமன், சயன், பக்கன்,மகாக்கிரீபன், மகாகாயன், பாசதரன், மகோதரன், பாரகன், மகாவாகு காலன், உத்தாலகன், அகத்தியன், வசிட்டன், காசிபன்,மார்க்கண்டேயன், பிருகு, அங்கிரா, கௌதமன், கவுசிகன், தக்கன், முற்கலன், கௌச்சிகன், மகாசேனன், காணன், ஆமலகப்பிரியன், ஆரார்த்திதரன், திரிபாதன், உக்கிரவீரன், ஏகபாதன், துவிபாதன், பதுமநாபன், இரணியாக்கன், கிலீபன், உலோபன், சடரன்,கல்லாரன், வளாதரன், காலாக்கினி,சுவேதவாகு, உருத்திரபதி, சூலன், சுவேதாச்சுவதரன், சித்தன், அதற்பன், காலமாலி, பங்கன், அருணன், நேயகன், சுதன், பவுலன், சீலன், பாண்டகன், பிருங்கி, பருப்பதன், சிரைகன், காலவன், கலாதரன்,கவுசிகன், சாபாலன், ஆர்த்திதன். சிவசங்கற்பபத்தன், மாபத்தன், இலம்பகன்னன், மாண்டன், மோசகன், மாகாண்டன், சபாவன்னன், சங்கு, சத்திதன், அரிவிசுவன்,வசு, அக்கினிவன்னன், சாபாலி, சோமன், காலரூபன், நிருதி, தேவலன். பரந்தபன், சத்தியன், நிரதிதன், சரன், சுகன், சனி, சுதீக்கணன், தூமமன், சமதக்கினி, அரிதகன், பராசரன், சூதன், பரத்துவாசன், மாண்டவியன், வியாசன், பிரன், புதன், சதானந்தன், கண்ணுவன், உபயாசன், யாசன், மத்தியந்தினன், உபமன்னியன்,பதஞ்சலி, வியாக்கிரபாதன், காண்டிப்பியன், சத்தி, அத்திரி, விபாண்டகன், குண்டலன், சௌநகன்,கைவல்லியன், பண்டிதோத்தமன், சயன், சரபங்கன், வாரன், கருணன், நாரதன், துருவன், அசிதன், அங்கி வேத்திரன், கபிலன், இருசிய சிருங்கி, மித்திராவருணன், காத்தியாயனன், புலத்தியன், உசத்தியன், குச்சகன், மிருககண்டுயன், மிருகண்டுயன், வாமதேவன், சிகண்டி முதலாயினோராம்.

இருதுக்கள்—(௬) வசந்தருது, கிரீஷ்மருது, வர்ஷருது, சரத்ருது, ஏமந்தருது, சசிரருது.

இருதுக்கள்வகை—(௨) சாந்தர சௌரம் என்பன.

இருத்தலின்பகுதி—(௨) திரிதரவுடையன, திரிதரவில்லாதன. இவற்றுள் திரிதரவுடையன யானை, தேர், புரவி, பூனை முதலியன போன்றிருத்தல், திரிதர

வில்லாதன பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படியிருக்கை,கம்புடன், அயமுகம், சுவத்திகம், தனிப்புடம், மண்டிலம்,ஏகபாதம் என விவை; இதனை "பதுமுகமுற்கட்டிதமே யொப்படி-யிருக்கை, சம்புடமயமுகஞ் சுவத்திகந்-தனிப்புட மடிலமேக பாத-முளப்படவொன்பது மாகுந்-திரிதரவில்லா விருக்கையென்ப" என்று உதயண காவியத்து நருமதைச் சம்பந்தத்துட் கூறப்பட்டதனு னறிக. இனி நாடக நூலார் இவ்விருப்பை ஐம்பதென விரிவரையறையாற் கூறித் தொகை வரையறை கூறுவார். அவற்றை ஒன்பதினடக்கினரென வுணர்க. "ஆதிப் பாவிருத்தியைம்பதிற் புலவோ - ரோதிக் கொண்டன ரொன்பான் விருத்தி" என்றுர் நாடக நூலாரும்.

இருத்விக்குகள்—(கசு) பிரம்மா, உத்காதா, ஹோதா, அத்வர்யு, பிராம்மணன், பிரஸ்தோதா, மைத்ராவருணன், பிரதிபாஸ்தாதா, புரோதா, பிரதிஹர்த்தா, அச்சாவாகன், நேஷ்டா, அக்நீதரன், சுப்ரமண்யன், கிராவஸ்துத், உன்னேதா.

இருந்தும் இறந்தவர்கள்—(ரு) தீராப்பிணியுடையோன்,உலோபன், வறியவன், உழைத்துண்பவன்.

இருபாற்பெருந்திணை—(கஎ) செலவழுங்கல், மடலூர்தல்,தூதிடையாடல், துயரவற்குரைத்தல், கண்டுகைசோர்தல், பருவமயங்கல், ஆண்பாற்கிளவி, பெண்பாற்கிளவி, வெறியாட்டு, பாண்வரவுரைத்தல், பரத்தை கூறல், விறலிகேட்பத் தோழிகூறல், விறலிதோழிக்கு விளம்பல், பரத்தை வாயில் பாங்கிகண்டுரைத்தல், பிறர்மனைத் துயின்றமை விறலி கூறல், குற்றிசை குறுங்கலி.

இருமல்—(ரு) மருந்தீடு இருமல், கஞ்சா இருமல், மது இருமல், சுர இருமல், இரத்த இருமல்.

இருமுதுகுரவர்—(உ) தாய், தந்தை.

இருமை—(உ) இம்மை, மறுமை.

இரும்பிற்குச் சத்துரு—(கஎ) சிலாசித்து, பூநீறு, அண்டவோடு, வெண்கலம், நிமிளை, வங்கம், கிளிஞ்சி, திரா, கெந்தி, காரம், சவ்விரம், மனோசிலை, மிர்தார்சிங்கி, கௌரிப் பாஷாணம், வெள்ளைப்பாஷாணம், அபிரேகம், வெண்காரம்.

இரும்பிற்கு மித்துரு—(கக)கெந்தி, சூடன், நாகா, காந்தம், செம்பு, பூரம், பூநாகம், ராசவர்த்தம், தங்கம், வெள்ளி, காரீயம்.

இருள்—(உ) அகவிருள், புறவிருள்.

இரேகைகள்—(ரு) அன்னரேகை, சங்கரேகை, சக்கரரேகை, பதுமரேகை, விலங்கிரேகை.

இலக்கணங்கள்—(உ) சொரூப லட்சணம் தடஸ்த லட்சணம் என்பன.

இலக்கணங்கள் — (சஎ) அகத்தியம், அணியியல், இசை நுணுக்கம், இந்திரகாளியம், குணநூல், கூத்தநூல், சயந்தம், செயிற்றியம், தண்டியலங்காரம், தாளவகையோத்து, தொல்காப்பியம், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, பஞ்சபாரதியம், பஞ்சமரபு, பரதசேனபதியம், பரதம், புறப்பொருள் வெண்பாமாலை, பெருங்குருகு, பெருநாரை, மதிவாணர் நாடகத் தமிழ்நூல், முறுவல், இறையனாரகப் பொருள், சத்தகௌத்துவம், கையடம், சித்

தாந்த கௌமுதி, பிரயோக விவேகம், வெண்பாப் பாட்டியல், நன்னூல், சிதம்பரப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சம்பந்தப்பாட்டியல், பன்னிரு பாட்டியல், யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கல விருத்தி, மாமூலர் யாப்பு, அவிநயம், துராலிங்கம், வையாபிகம், அதங்கோட்டாசிரியம், காக்கை பாடினியம், வாய்ப்பியம், பனம்பாரம், கழாரம்பம், நற்றத்தம், வாமனம், செம்பூட்சேயம்.

இலக்கணம்—(ரு) எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி.

இலக்கணவகை—(உ) அகத்திலக்கணம், புறத்திலக்கணம்.

இலக்கணை—(௩) விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டுவிடாத இலக்கணை.

இலக்கணை—(௬) ஆதாரம், காரணம், காரியம், சமீபம், உபகாரம், தர்மானுகிருஷி.

இலக்கியங்கள்—(௬௬௨) சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி, கந்தபுராணம், சூளாமணி, யசோதர காவியம், நாககாவியம், மேரு மந்தர புராணம், மா புராணம், பூத புராணம், நீலகேசித்திரட்டு, உதயண காவியம், கூர்ம புராணம், இலிங்கபுராணம், வாயுசங்கிதை, சூதசங்கிதை, இரகுவமிசம், அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு, பதிற்றுப் பத்து, கல்லாடம், கலித்தொகை, கலிங்கத்துப்பரணி, கம்பராமாயணம், குலோத்துங்க சோழனுலா, குறிஞ்சிப்பாட்டு, குறுந்தொகை, சித்தாந்தத் தொகை, தக்கயாகப்பரணி, திருக்கோவையார், தஞ்சைவாணன் கோவை, கோடீசுரக்கோவை, வெங்கைக்கோவை, திருக்குறள், நாலடியார், நரிவிருத்தம், நற்றிணை, பதினெண்கீழ்க்கணக்கு, பரமத திமிர பானு, சைவ சமயநெறி, புறப்பொருள் வெண்பாமாலை, பெரியபுராணம், விம்பசாரகதை, நைடதம், ஒன்பதாந் திருமுறை, பத்தாந்திருமுறை, பதினோராந் திருமுறை, காஞ்சிப்புராணம், தணிகைப் புராணம். ஆதியுலா, ஏகாம்பரநாதருலா, பரராசசேகரம், செகராச சேகரம், சேது புராணம், சிவராத்திரி புராணம், கலி, களரியாவிரை, கணுநூல், குருகு, பரிபாடல், பாசண்டம். பெருங்குறிஞ்சி, முத்தொள்ளாயிரம், வெண்டாளி, குசேலோபாக்கியானம், மச்சபுராணம், வில்லிபுத்தூரர் பாரதம், நல்லாப்பிள்ளை பாரதம். பெருந்தேவனார் பாரதம், நளவெண்பா, உபதேச காண்டம், திருப்புகழ். மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம், மீனாட்சியம்மைபிள்ளைத் தமிழ், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்,பண்டார மும்மணிக் கோவை, சிதம்பர மும்மணிக் கோவை, பெருந்திரட்டு, குறுந்திரட்டு, சித்தாந்த ரத்னாகரம், ஆசாரத்திரட்டு நட்சத்திர மாலை, சாதிவிளக்கம், அளவை விளக்கம், ஆசார சிந்தாமணி, ஞானாமிர்தம், தத்துவ விளக்கம், சௌந்தரியலகரி, சிவானந்த லகரி, திருப்போரூர் சந்நிதி முறை, சகலாகமத் திரட்டு, தத்துவதீபம், திருச்சிற்றம்பலநாடித் திரட்டு, சித்தாந்த சிகாமணி, பிரபுலிங்கலீலை, திருவிளையாடற் புராணம், திருவாதவூரடிகள் புராணம், பட்டினத்துப்பிள்ளையார் புராணம், கந்தரந்தாதி, கம்பரந்தாதி திருச்செந்திலந்தாதி, திருக்கருவைப் பதிற்றுப்பத்தந் தாதி, திருக்கருவை வெண்பா வந்தாதி, பேருர்ப் புராணம், திருவானைக்காப் புராணம்,

பார்க்கவ புராணம், சாமுத்திரிகா லக்கணம், அருணகிரி புராணம், கடம்பவனபுராணம், கோயிற்புராணம், சிவரகசியம், ஏரெழுபது, சிலையெழுபது, பாகவத புராணம், சரப புராணம் முதலாயினவாம்.

இலக்கியப்பொருட் டொடர்நிலைச் செய்யுட் கூறுபாடு—(சு) அத்தியாயம், இலம்பகம், காண்டம், சருக்கம், படலம், பரிச்சேதம்.

இலக்கியம்—(உ) சிறுகாப்பியம், பெருங்காப்பியம்.

இலக்கினவகை—(ரு) ஆண், பெண், அலி.

இலக்குமிகள்—(அ) தனலட்சுமி, தானியலட்சுமி, தைரிய லட்சுமி சௌரியலட்சுமி, வித்தியாலட்சுமி, விசயலட்சுமி, கீர்த்தி லட்சுமி, இராச்சியலட்சுமி.

இலங்கைச் சிவதலம்—(உ) திரிகோணமலை, திருக்கேதீச்சுரம்.

இலங்கைச் சுப்பிரமணியதலம்—(ரு) கதிர்காமம், நல்லூர்க் கந்தசுவாமி கோவில், மாவிட்டபுரக் கந்தசுவாமி கோயில், வில்லூன்றிக் கந்தசுவாமி கோயில், கொழும்புச் சுப்பிரமணியர் கோயில், மேலைப் புலோலிப் புதுச் சந்நிதிக்கோயில்.

இலக்ஷணை—(ரு) அகத்துவாவிருத்திலக்ஷணை, தடத்தலக்ஷணை, சொருப லக்ஷணை, இவையே இலக்ஷணாத்திரயம் எனப்படும்.

இலட்சணை தோடம்—(ரு) அவ்வியாப்தி, அதிவியாப்தி, அசம்பவம்.

இலந்தைவகை—(ச) இலந்தை, கொடியிலந்தை, காட்டிலந்தை புளிப்பிலந்தை.

இலவமரம்—(ரு) இலவமரம், கோங்கிலவமரம், முள்ளிலவமரம்.

இலிங்கபுராணப்பகுதி—(உ) பூருவ காண்டம், உத்தரகாண்டம்.

இலிங்கம்—(ரு) இட்டலிங்கம், பிராணலிங்கம், பாவலிங்கம்.

இலிங்கம்—(கு) பிருதுவியிலிங்கங் காஞ்சியில், அப்புவிலிங்கம் திருவானைக்காவில், தேயுவிலிங்கந் திருவண்ணாமலையில், வாயுவிலிங்கஞ் சீகாளத்தியில், ஆகாயவிலிங்கஞ் சிதம்பரத்தில், இவையே பஞ்சபூத வடிவங்களானபிரதான பஞ்சவிலிங்கமாம்.

இலிங்கவகை—(எ) பரார்த்தலிங்கம், சுயம்புவிலிங்கம், காணலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம், மானுடலிங்கம், க்ஷணிகலிங்கம், இவற்றுள் பரார்த்தலிங்கமாவது சிவபெருமான் மகாசங்கார காலம்வரையும் சாந்நித்தியராயிருந்து ஆன்மாக்களுக்கு அநுக்கிரகிக்கப் பெறுமிலிங்கமாம். இது தாவரலிங்கம், திரலிங்கம் எனவும் பெயர்பெறும்.

சுயம்புலிங்கமாவது—தானே தோன்றியது. காணலிங்கமாவது விநாயகர் சுப்பிரமணியர் முதலிய கணங்களாலே தாபிக்கப்பட்டது. தைவிகலிங்கமாவது விட்டுணு முதலிய தேவர்களாலே தாபிக்கப்பட்டது.

ஆரிடலிங்கமாவது—முனிவர்களாலே தாபிக்கப்பட்டது; அசுரர் இராக்கதர் முதலாயினோராற் ருபிக்கப்பட்டதும் அதுவே. மானுடலிங்கமாவது மானுடர்களாற் ருபிக்கப் பட்டது.

க்ஷணிகலிங்கமாவது—பூசித்தவுடன் விடப்படும் இலிங்கம். இவற்றுள் க்ஷணிக லிங்கத்தினுயர்ந்தது மானுடலிங்கம், மானுட லிங்கத்தினுயர்ந்தது ஆரிடலிங்கம், அதனினுயர்ந்தது தைவிகலிங்கம், அதனினுயர்ந்தது காணலிங்கம், அதனி

னுயர்ந்தது சுயம்புலிங்கம். க்ஷணிகலிங்கம் மண், அரிசி, அன்னம், ஆற்றுமணல், கோமயம், வெண்ணெய், உருத்திராக்ஷம், சந்தனம், கூர்ச்சம், புஷ்பமாலை, சருக்கரை, மா எனப் பன்னிரு பொருளாலுஞ் செய்யப்படுவது.

இல்லறத்தார் சீலம்—(௰௧) கொல்லாமை, பொய் சொல்லாமை, களவின்மை, காமமின்மை, இரவாமை, உயர்ந்த ஆசனத்து இருத்தல், கிடத்தலின்மை, சந்தனம், மாலை முதலியன தரியாமை, பொன், வெள்ளிகளைத் தீண்டாமை, பாடலாடல் விரும்பாமை, உதயத்திற்கு முன்பு புசித்தல் என்பனவாம். இது நீலகேசி விருத்தி சமய திவாகரத்தில் கண்டது.

இல்லறத்தார் பொதுச்சீலம்—(௫) கொல்லாமை, திருடாமை, வியபிசாரஞ் செய்யாமை, பொய் கூறுமை, கள்ளுண்ணுமை.

இல்லறநிட்டாபரர் சீலம்-(அ) மேற்குறித்தபொதுச்சீலமைந்தனோடு இரவிற் சுத்தமில்லாத உணவைப் புசியாமை, சந்தன முதலிய மணமுள்ள பொருள்களை யுபயோகியாமை, தரையிற்பாய் மேலே படுத்தல், என்று மூன்றுஞ்சேர எட்டாதல் காண்க. இது தர்மிக சூத்திரம் என்னும் பௌத்தநூலார் கொள்கை.

இழிச்சொல்—(௪) குறளை, பொய், கடுஞ்சொல், பயனில் சொல்.

இழிதிணைப்பால்—(௨) ஒன்றன் பால், பலவின்பால்.

இழிப்பினவினயத்தன்மை—(௬) இடுங்கிய கண்ணுடைமை, வெளிப்பட்ட பற்களுடைமை, ஒடுங்கியமுகமுடைமை, நடவாக் காலுடைமை, சோர்ந்த வுடலுடைமை, சொல் நிரம்பாமையுடைமை.

இளமைப்பெயர்—(௯) பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி.

இளிவரல்—(௪) மூப்பு, பிணி, வருத்தம், மென்மை.

இறையனுரகப்பொருளினுரையை முறையில் கூறினவர்—(௰௫) நக்கீரர் கீரவிகொற்றனுர், தேனூர்க் கிழார், படியங்கொற்றனுர், செல்வத்தாசிரியர், பெருஞ்சுவனுர், மணலூர் ஆசிரியர், புளியங்காய்ப் பெருஞ்சேந்தனுர், செல்லூர் ஆசிரியர், ஆண்டைப் பெருங் குமாரனுர், திருக்குன்றத்து ஆசிரியர், மாதளவனுர், இளநாகனுர், முசிறி ஆசிரியர், நீலகண்டனுர்.

இறந்தும்இறவாதவர்—(௫) கவீச்சுரன், தியாகி, சுத்தவீரன், செங்கோல் வேந்தன், தருமஞ் செய்தோன்.

இறைவனிலக்கணம்—(௨) சொரூபலக்கணம், தடத்தலக்கணம்.

இறைவன்குணம்—(அ) ஈச்சுரன் குணம் (அ) காண்க.

இறைவன் சத்திகள்—(௫) ஆதி சத்தி, இச்சாசத்தி, பராசக்தி, கிரியாசத்தி, ஞானசத்தி.

இறைவன் தேவிமார்—(௪) உமை, விட்டுணு, காளி, துர்க்கை.

இறைவன்தொழில்—(௫) படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.

இனஎதுகை—(௩) வல்லின எதுகை, மெல்லின எதுகை, இடையின எதுகை இனவெழுத்தால் வரும் எதுகை.

இனமோனை—(௩) வல்லின மோனை, மெல்லின மோனை,

இடையின மோனை, இனவெழுத்தால் வருமோனை.

இன்பத்துப்பாலின் இயல்கள்—(உ) களவியல், கற்பியல்.

இன்பம்—(உ) சிற்றின்பம், பேரின்பம்.

இன்பம்—(ங) உணவு, உறக்கம், காதல்.

## ஈ

ஈகை—(உ) தானே கொடுத்தல், கேட்டுக்கொடுத்தல்.

ஈகைவகை—(ச) புகழ், புண்ணியம், நட்பு, நிட்காமியம்.

ஈசன்பேதம்—(அ) சிவம், சக்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், விட்டுணு, பிரமன்.

ஈசன்தொழில்—(ங) படைத்தல், காத்தல், மறைத்தல்.

ஈசன் வீரநிகழ்ந்த இடம்—(அ) திருக்கண்டியூர், திருக்கடவூர், திருவதிகை, திருப்பறியல், திரிவிற்குடி, திருவழுவூர், திருக்குறுக்கை, திருக்கோவல். இவையே அட்ட வீரட்டத்தலங்களாம்.

ஈசன்வீரம்—(அ) பிரமன்றலை கிள்ளல், காலனை யுதைத்தல், திரிபுரதகனம், தக்க சங்காரம், சலந்தரவதம், கயாசுரவதம், காமதகனம், அந்தகாசுரமர்த்தனம்.

ஈசானகலை—(ரு) சசினி அங்கதை, பிரமேட்டை, மரிசி, சுவாலினி. இவற்றை நியசிக்குந்தானம் முறையே ஊர்த்துவம், பூர்வம், தக்ஷிணம், உத்தரம், பச்சிமம் என்னும் மூர்த்திவிகளாம்.

ஈசுவரசத்தி—(ங) செனனி, ஆரிணி, ரோதயித்திரி.

ஈசுவரசரீரம்—(ங) விராட்டுவாகிய தூலசரீரம், இரணியகர்ப்பமாகிய சூக்குமசரீரம், அவ்வியாகிருதமாகிய காரண சரீரம்.

ஈசுரனுக்கில்லாமை—(உ) இறப்பு, பிறப்பு.

ஈசுரர்—(அ) அநந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகனேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தர், சிகண்டர், சிகண்டி.

ஈசுரன் உடை—(உ) புலித்தோல் யானைத்தோல்.

ஈசுரன் செல்வம்—(ரு) ஐசுவரியம், தர்மம், கீர்த்தி, லட்சுமி, ஞானம்.

ஈசுரன்ஞானம்—(ரு) உற்பத்தி, பிரளயம், கதி, ஆகதி, வித்தை, அவித்தை.

ஈசுரன்தேவியர்—(உ) கங்கை, பார்வதி.

ஈசுரன்மூர்த்தங்கள்—(உ) இலிங்கம், இலிங்கோற்பவம், முகலிங்கம், சதாசிவம், மகாசதாசிவம், உமாமகேசம், சுகாசனம் உமேசம், சோமாஸ்கந்தம், சந்திரசேகரம், ருஷபாரூடம், ருஷபாந்திகம், புசங்கலளிதம், புசங்கத் திராசம், சந்தியா நிருத்தம், சதாநிருத்தம், காளிதாண்டவம், கங்காதரம், கங்காவிசர்ச்சனம், திரியுவிந்தகம், கல்யாணசுந்தரம், அர்த்தநாரீசம், கசயுத்தம், சுவராபக்னம், சார்த்தூலகரி, பாசுபதம், கங்காளம் கேசவார்த்தம், பிட்சாடனம், சிம்மக்கனம், சண்டேசானுக்கிரகம், தட்சிணாமூர்த்தம், யோகதட்சிணாமூர்த்தம், வீணாதக்ஷிணாமூர்த்தம், காலாந்தகம், காமாரி, இலகுளேசம், பைரவம், ஆப

தோத்தாரணம், வடுகம், க்ஷேத்ரபாலம், வீரபத்ரம், அகோராஸ்தரம், தக்ஷயஞ்ஞ ஹதம், கிராதம், குருமூர்த்தம், அச்வாரூடர், கசாந்திகம், சலந்தரவதம், ஏகபாத திரிமூர்த்தம், திரிமூர்த்தி திரிபாதம், ஏகபாத மூர்த்தம், கௌரி வரப்பிரதம், சக்ரதானஸ்வரூபம், கௌரிலீலாசமன்விதம், விஷாபஹரணம், கருடாந்திகம், பிரமசிரச்சேதம், கூர்மசம்மாரம், மச்சாரி, வராகாரி, பிரார்த்தனுமூர்த்தம்.

ஈசுரன்வில்—(உ) மகாமேரு, பிநாகம்.

ஈசுவரிபேதம்—(எ) அதிக்கிராந்த விந்துகபராசக்தி, அநதிக்கிராந்த விந்துக பராசக்தி, மனோன்மணி, மகேசுவரி, உமை, இலக்குமி, சரசுவதி.

ஈச்சுரசத்தி—(ரு) ஆதிசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, பராசத்தி, ஞானசத்தி.

ஈச்சுரபேதம்—(க) சிவம், சக்தி, நாதம்விந்து, சதாசிவன், மகேச்சுரன் உருத்திரன், விட்டுணு, பிரமன்.

ஈச்சுரன்கிருத்தியம்—(ரு) சிருட்டி திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம்.

ஈச்சுரன் குணம்—(அ) தன் வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், இயற்கை யுணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை. வரம்பிலின்பமுடைமை, இவை சைவாகமத்துட் கூறப்பட்டன. அன்றியும் வரம்பின் ஞானம், வரம்பில் காட்சி, வரம்பிலின்பம், வரம்பிலாற்றல், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, இடையூறின்மை என்பன ஆருகதராற் கூறப்பட்டன.

ஈச்சுரன் பிரபுத்துவ சாமார்த்திய குணம்—(ங) கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அன்னியதா கர்த்தத்துவம்.

ஈச்சுரன் முகம்—(ரு) ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம்; இவற்றுள் ஈசானம் அனைத்துமாளுதல், தற்புருடங் காத்தல், அகோர மழித்தல், வாமம் விளக்கல், சத்தியோசாதந் தோற்றுவித்தல்.

ஈச்சுரன் முக்கியகுணம்—(கஉ) சருவஞ்ஞத்துவம், சருவேச்சுரத்துவம், சருவநியந்திருத்துவம், சருவாந்தரியாமித்துவம், சருவகற்பிதத்துவம், சருவசத்தித்துவம், அன்றியும் தன் வயத்தனுதல், முதலிலனுதல், உடம்பிலனுதல், எல்லா நலமு முளனுதல், எங்கும் வியாபகனுதல், எவற்றிற்குங் காரணனுதல்.

ஈச்சுரன் மூர்த்தம்—(உரு) சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர்; காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், சகமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசனர், தக்கிணுமூர்த்தி, இலிங்கோற்பவர்.

ஈச்சுரன் வகை—(ங) இலயசிவன், போகசிவன், அதிகாரசிவன்.

ஈஞ்சுவகை—(ங) ஈஞ்சு, பேரீஞ்சு, காயாப் பேரீஞ்சு.

ஈடணம்—(ங) தனவிடணை, தாரவிடணை, புத்திரவிடணை.

ஈதி—(எ) விட்டில், கிளி, நாவாய், பன்றி, தொட்டியர், களவர், பெரும்புயல், என ஏழ்வகையாகப் பரிமேலழகருரைப்பர்.

ஈயங்கள்—(உ) வெள்ளியம், காரீயம்.

ஈரடிமடக்கு—(௬) முதலீரடியுமடக்கு, முதலடியும் மூன்றுமடியும் மடக்கு இடையீரடியுமடக்கு, முதலடியு மீற்றடியுமடக்கு, கடையீரடியு மடக்கு, இரண்டாமடியு மீற்றடியுமடக்கு.

ஈழமண்டல சிவாலயங்கள் — (உ) திருக்கோணமலை, திருக்கேதீச்சரம்.

ஈழமண்டலப் பிரிவு—(௧0) கொழும்பு, கண்டி, காலி, யாழ்ப்பாணம், திரிகோணமலை, மட்டக்களப்பு, அநுராதபுரம், குருநாக்கல், சப்பிரகாமம், ஊவா என்பனவாகும். இவை ஜில்லா அல்லது மாகாணம் எனப்படும்.

ஈறு—(உ) உயிரீறு, மெய்யீறு.

ஈறு—(௬) இயல்பீறு, விதியீறு, உயிர்முதலுயிரீறு, மெய்முதன் மெய்யீறு, மெய்முதலுயிரீறு, உயிர் முதன்மெய்யீறு.

## உ

உகம்—(௪) கிருதயுகம், திரேதயுகம், துவாபரயுகம், கலியுகம்.

உச்சாடன மூலிகை — (௮) வரற்சுண்டி, மான்செவிக் கள்ளி, பெருங்கிலுகிலுப்பை, அரமுறி, கண்டங்கத்திரி, நரிமிரட்டி, தேட்கொடுக்கு, கரந்தை.

உடலவத்தைகள் — (௬) சிசு, கௌமாரம், பௌகண்டம், கிசோரம், யௌவனம், சரை என்பன.

உடம்பிற்றோன்றும் பாவம் — (௩) கொலை, களவு, காமம்.

உடலற்றநாள்—(௩) மிருகசிரம், சித்திரை, அவிட்டம்.

உடல்—(௩) தூலம், சூக்குமம், காரணம்.

உடல்வர்த்தனை—(௯) மெய்சாய்த்தல், இடை நெரித்தல், சுழித்தல், அணைத்தல், தூக்குதல், அசைத்தல், பற்றல், விரித்தல், குவித்தல், என்னை? "மெய்சாய் விடைநெறிவு மேற்சுழிவோடாங் கணைத்தல், கைதூக் கசைத்தல், கலைபற்றல்-கைகள் விரித்தல் குவித்தலிவை சிங்களமாமென்று, தெரித்தனர் தண்டமிழோர் தேர்ந்து" என்றுராகலின்.

உடற்குறை—(௮) குறள், செவிடு, மூங்கை, முடம், கூன், குருடு, மருள், உறுப்பிலாப் பிண்டம். மருள்-ஆணோ பெண்ணோ வென்றறியப்படாத உறுப்பு மயக்கம், உறுப்பில் பிண்டம் - உறுப்புக் குறைந்த வடிவம்.

உடற்குறைவு—(௫) கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, கூன் கிடை, நட்டுவிழல்.

உடற்குற்றம்—(௧௮) பசி, நீர் வேட்டல், பயம், வெகுளி, உவகை, வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய்ப்படுதல், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், தேகம், கையுறவு.

உடற்புவியின்கூறு — (௫) என்பு, தோல், நரம்பு, உரோமம், தசை.

உடற்புனலின்கூறு—(௫) நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை.

உடற்றேயுவின்குணம்—(௫) பசி, தாகம், சோம்பல், நித்திரை, மைதுனம்.

வாத்திரம், பிரஸ்வாபனுத்திரம், சௌராத்திரம், தர்ப்பணம், கோடணம், சந்தர்ப்பணம், விலாபணம், மதனம், மோகனுத்திரம், தமசம், சௌமனம், சம்வர்த்தம், மௌசலம், சத்தியாத்திரம், மாயாதராத்திரம், தேசப்பிரபாத்திரம், சௌம்யாத்திரம், துவட்டாத்திரம், சிதேஷுமானவாத்திரம், சத்தியவந்தம், சத்தியகீர்த்தி, திரட்டம், ரபசம், பிரதிகாரதரம், பிராமுகம், அவாங்குகம், வட்சாட்சம், விடபம், திருடநாபம், சுநாபகம், சோதிடம், கிருசனம், நைராசியம், விமலம், யோகந்தரம், அரித்திரம், சார்ச்சிசர்மாலி, திருதிர்மாலி, விரத்திமான், ருசிகரம், பிதுருசௌமனசம், விதுனம், மகரம், கரவீகரம், தனம், தான்யம், காமரூபம், காமருசி, மோகம், ஆவரணம், சிரும்பகம், சர்வநாபம், சந்தானம், வாணம்.

கண்—(உ) அகக்கண், புறக்கண்.

கண்டங்கத்திரிவகை—(ங) கண்டங்கத்திரி, வெண்கண்டங்கத்திரி, முள்ளிக்கத்திரி.

கண்டம்—(கூ) கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்விரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம், இவையே நவகண்டம்.

கண்டவகை—(கூ) பரதகண்டம், குருகண்டம், கிம்புருடகண்டம், இளாவிருத கண்டம், அருவருடகண்டம், கேதுமால கண்டம், இரமியகண்டம், பதிராசுவகண்டம், இரணிய கண்டம்.

கண்ணன் மனைவியர்—(அ) உருக்குமணி, இலக்குமணை, சத்தியபாமை, சாம்பவதி, நீளாதேவி, காளிந்தி, மித்திரவிந்தை, பத்திரை.

கண்ணிச்செடி—(ங) அழுகண்ணி, தொழுகண்ணி, காடைக்கண்ணி.

கண்ணேவுற்றேனவிநயம்—(ச) கண்ணீர்த்துளியை விரலாற்றெளித்தல், வளைந்தபுருவமுடைமை, வாடியமுகம், வெள்ளிடநோக்கி யஞ்சுதல்.

கதி—(ச) தேவகதி, மக்கட்கதி, விலங்கின்கதி, நரககதி.

கதிரவன் வழிமுறை—(கசகசு) வைவச்சுதமனு, இலட்சுவாகு, விகுட்சி, ககுத்தன், சுயோதனன், பிருதவன், விச்சுவகன், அத்திரகன், பிரகதச்வன், குவலயாச்வன், சுவனவன், பிரமோதி, அரியச்வன், அதிகும்பன், சாங்கதாச்வன், கிருதாச்வன், இரணுசுவன், யுவனுசுவன், மாந்தாதா, திரிதன்வா, சூர்யவர்ணன், சத்தியவிரதன், அரிச்சந்திரன், உலோகிதன், துந்து, விசயன், குருதன், விரதன், விருகன், சகரன், அசமஞ்சன், அஞ்சுமான், திலீபன், பகீரதன், சுகதன், சுருதன், நாபாகன், அம்பரீடன், சிந்துத்தீபன், அயுதாயு, இரிதுபன்னன், சாருவபூமன், சுதாசன், சாவதாசன், அசுமாதன், மூலகன், சதரதன், இளிபிளன், விருத்தசருமா, விச்சுவகன், திலீபன், கட்வாங்கன், தீர்க்கவாகு, இரகு, அசன், தசரதன், இராமன், (இலட்சுமணன், பரதன், சத்துருக்கனன்) குசன் (லவன்) அதிதி, நிடதன், அநலன், நபசு புண்டரீகாட்சன், சேமதன்வா தேவாநீகன், அகீனகு, சுகாசுவன், சுகன், சந்திரகிரி, பானுசித்து, சுலுத்தாயு, வரதன், குரு, பாரியாத்ரன், பலன், சலன், உற்கன்,

வச்ரநாபன், சங்கணன், வியுஷிதாசுவன், விவசுவகன், இரண்யநாபன், புஷ்யன், துருவசந்தி, சுதரிசனன், அக்கினி வருணன், சீக்கிரகன், மரு, பிரசுசுகர், சுகந்தி, அமர்ஷன், சகஸ்வான் விச்வபவன், பிரகத்பலன், போககிரணன், உருஷிதன், வச்சபிரீதன், பிரதிவியோமன், மனு, திவீகசு, வாக்னிபதி, சகதேவன், பிரகதச்வன், சுப்ரதீகன், மேருதேவன், சுதட்சன், இரட்சகன், அந்தரட்சகன், சுதபசு, அமித்ரசிது, பிரகத்வாசி, பேரிகசு, தனஞ்சயன், இரணஞ்சயன், சிரஞ்சயன், சக்கியன், சுத்தாதரன், பிரசௌசித், க்ஷித்ரகன், இரணகன், சுரதன், சுமித்ரன்.

கதிர்காமக் கடவுடிருநாமங்கள்—(௯) கதிர்காமசுவாமி, கதிரைநாயகன், கதிரைவேலன், மாணிக்கசுவாமி, கந்தக்கடவுள், ஆறுமுகப்பெருமான், பரஞ்சோதிப்பெருமான், சிதாகாயநாதன், அவ்வியத்தமூர்த்தி.

கதிர்காம தலத்திருநாமங்கள்-(௧௨) ஏமகூடம், பூலோககந்தபுரி, காரிகாப்பு, வரபுரி, பஞ்சமூர்த்திவாசம், வில்வகானனம், சகலசித்திகரம், அகத்தியப்பிரியம், பிரமசித்து, அவ்வியத்தமூர்த்தம், சித்தகேத்திரம், கதிரை.

கத்திரிவகை—(எ) கத்திரி, காருக்கத்திரி, கொடிக்கத்திரி, செங்கத்திரி, நித்தக்கத்திரி, காட்டுக்கத்திரி, முள்ளுக்கத்திரி.

கத்துருவின் மக்கள்—(௭௦) ஆதிசேடன், வாசுகி, தட்சகன், கார்க்கோடகன், தனஞ்சயன், காளியன், நாகபுராணன், புஞ்சன், புரஞ்ஞன், ஏலாபுத்திரன், வாமனன், நிலன், அநிலன், கல்மாடன், சபலன், ஆரியகன், புண்டிரகன், விசாலன், போதகன், சுமநோகன், இரதிமுகன், ததிமுகன், விமலன், குண்டடன், பிண்டகன், பந்தகன், ஆப்தன், கோடரகன், சங்கபாதன், சிகன், நிட்டுரகன், ஏமன், உக்கமுகரன், நகுடன், பிங்கலன், கோகர்நன், அவ்வியகர்நன், அவிர்முகன், முதகரன், கம்பளாசுவன், அஸ்வநரன், தாளியகன், உருத்தன், சுவுருத்தன், சம்வாதகன், சங்கநகன், பிண்டரகன், அசரன், க்ஷேமகரன், சமுகன், பிண்டநகன், இரட்சேகமுகன், பிடரகன், கரவீரன், புட்பதவுட்டரன், நகரன், பலரகன், சாலகன், பகன், வில்வபாண்டுரன், பாதகபராசிதன், பதங்கக்கிரீவன், இரத்தாட்சன், அபராதிகன், மூஷிகாதன், சங்கசரன், புண்ணியதமுஷ்டரன், அரித்திரகன், அபானமித்திரன், சோதிகன், சீவகன், பராதீதன், அயக்கிரிவன், கவுர்வியன், திரிதராட்டிரன், புட்கரன், சல்லியன், விரசன், சாலுண்டன், கபோதவன், வில்வகன், சுபாகு, சலபிண்டன், அஸ்திபத்திரன், முகரகோணன், நாசிகன், குஞ்சரன், குரங்கன், பிரகாரன், தித்திரி, புரிலன், பாலிகண்டன், குண்டரன், குதரன், பிரபகரசுமுதகாண்டகன், விரன், குடாரன், அருகுஷன், காகோதரன், அரிதி, கர்க்கரன், அகர்க்கரன், குண்டோதரன், மகோதரன், சலர்க்காரை (மகள்) கத்துரு என்பவள் காசியப முனிவருடைய மனைவியர் பதின்மூவரில் ஒருத்தி.

கந்தபுராணசங்கிதை—(௬) பிரமசங்கிதை, விட்டுணுசங்கிதை, சனற்குமாரசங்கிதை, சூரசங்கிதை, சங்கரசங்கிதை, சூதசங்கிதை.

கந்தர்—(உ) நற்கந்தம், துர்க்கந்தம்.

கந்தர்—(அ) சந்தநம், அகரு, கஸ்தூரி, கருப்பூரம், பச்சிலை, குங்குமம், இலாமிச்சை, கோட்டம்.

கமகபேதம்—(உஉ) சுவரிதம், பிரமதம், தீர்க்கம், இல்லிதோற்சாரம், கிருதம், திதம், உல்லாசிதம், உல்லோசிதம், கம்பிதம், சூக்குமிதம், தீர்க்கம், உலோவிதம், இலிலோ தீர்க்கம், தீர்க்கலீதம், பிரத்துதம், தாந்திகம், ஊர்ச்சிதம், சிட்டபதம், அடவிமூலம், இரசிதம், கோமளம்.

கம்பம்—(ச) தாலம்பம், வெள்ளை, சாலாங்கம், கற்பரி முதலிய பாஷாணங்கள்.

கம்புவகை—(ந) தோட்டக்கம்பு, காட்டுக்கம்பு, கனுக்கம்பு.

கயநோய் (க்ஷயநோய்) — (கஉ) பிரமக்ஷயம், இராசக்ஷயம், வைசியக்ஷயம், சூத்திரக்ஷயம், வாதக்ஷயம், பித்தக்ஷயம், சிலேட்டுமக்ஷயம், வாதபித்தக்ஷயம், வாதசிலேட்டுமக்ஷயம், பித்தசிலேட்டுமக்ஷயம், விகாரக்ஷயம், தொந்தக்ஷயம்.

கரகணம்—(கஉ) இணையாவினைக்கை (கஉ) காண்க

கரணம்—(ந) மனம், வாக்கு, காயம்.

கரணம்—(ச) மனம், புத்தி, அகங்காரம், சித்தம்.

கரணம்—(கக) பவம், பாலவம், கவுலவம், தை, துலை, கரசை, வணசை, பத்திரை, சகுனி, சதுர்ப்பாதம், நாகவம், கிமிஸ்துக்கினம்.

கரந்தையின்பிரிவு—(கச) கரந்தை, கரந்தையரவம், அதரிடைச்செலவு, போர்மலைதல், புண்ணொடு வருதல், போர்க்களத்தொழிதல், ஆளெறிபிள்ளை, பிள்ளைத்தெளிவு, பிள்ளையாட்டு, கையாறுநிலை, நெடுமொழிகூறல், பிள்ளைப்பெயர்ச்சி, வேத்தியன்மலிபு, குடிநிலை.

கரந்தைவகை—(ச) கொட்டான் கரந்தை, சிவகரந்தை, விட்டுணுகரந்தை, வெள்ளை விட்டுணுகரந்தை.

கரப்பான்நோய்—(எ) வாதக்கரப்பான், கண்டக்கரப்பான், வறட்கரப்பான், திமிர்வாதக் கரப்பான், கபாலக்கரப்பான், பித்தக்கரப்பான், சிலேட்டுமக்கரப்பான்.

கரிப்பான் வகை—(ச) கரிப்பான், கருங்கரிப்பான், செங்கரிப்பான், பொற்றலைக்கரிப்பான்.

கருங்காலிவகை—(ந) கருங்காலி, செங்கருங்காலி, வெண்கருங்காலி.

கருங்கை—(உ) கொன்றுவாழ் தொழிலிற் கன்றியகை, வன்பணித் தொழிலிற்கன்றியகை.

கருணை—(ந) (1) இடர்காத்தல், வேண்டியதை யுணர்தல், செய்தல், காறு. கருணை, காருக்கருணை, புளிக்கருணை என்ற மூவகைக் கருணைச் செடிகளின் கிழங்குகள்.

கருத்தா—(உ) இயற்றுதற்கருத்தா, ஏவுதற்கருத்தா.

கருப்பொருள்—(கச) தெய்வம், உயர்ந்தோர், தாழ்ந்தோர், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறை, யாழ், பண், தொழில்.

கருமகாரகம்—(எ) பற்றுக்கருமம், விட்டுக்கருமம், இருபுறக்கருமம், தான்தெரி கருமம், தெரியாக்-

கருமம், தீபக்கருமம், கருத்தா கருமம்.

கருமங்கள்—(௩) சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்,

கருமங்கள்—(அ) ஆகருடணம், உச்சாடனம், தம்பனம், பேதனம், மாரணம், மோகனம், வசியம், வித்துவேடனம்

கருமேந்திரிய காரியங்கள்—(ரு) உரை, ஏற்றல், நடத்தல், இரதிபோகம், மலநீக்கம்.

கருமம்—(அ) ஆதானம், விசர்க்கம், பிரஷம், நிஷேதம், சார்த்தவசநம், வியவகாரேக்ஷணம், தண்டம், சுத்தி.

கருமேந்திரியம்—(ரு) வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம், கன்மேந்திரியம் என்பதுமிது.

கரும்புவகை—(ரு) கரும்பு, செங்கரும்பு, பேய்க்கரும்பு, வெண்கரும்பு, இரஸ்தாளிக் கரும்பு.

கரும்பூமிக்குரிமை—(சு) வரைவு, தொழில், வித்தை, வாணிகம், உழவு, சிற்பம்.

கருவி—(ரு) இசைக்கருவி (ரு) காண்க.

கருவிகள் நூல்—(௪) புறப்புறக்கருவி, புறக்கருவி, அகப்புறக்கருவி, அகக்கருவி.

கருவுளமைப்பு—(சு) பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு.

கருவுள்வாதனை—(ரு) கருப்பாசயப்பை யுறுத்தல், சலம்பூரித்தல், உதராக்கினி சுடுதல், பிராணவாயு முறித்துத் தள்ளுதல், யோனித்துவாரத்தானெருக் குண்ணல.

கர்மம்—(௩) நல்வினை, தீவினை, மேற்படி யிரண்டுங் கலப்பு.

கர்மம் (வேறு)—(௩) சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தம்.

கர்மம்—(ரு) நித்தியம், நைமித்திகம், காமியம், பிராயச்சித்தம், நிஷித்தம்.

கர்மம்—(நியாய மதம்) (ரு) எழும்பல், விழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தல்.

கர்மம்—(அ) வசியம், மோகனம், உச்சாடனம், தம்பனம், பேதனம், ஆக்ருஷ்ணம், வித்வேஷணம், மாரணம்.

கலகங்கள்—(௪) பஞ்சத்தால் வருங்கலகம், நோயால் வருங்கலகம், கள்ளரால் வருங்கல்கம், போரால் வருங்கலகம்.

கலம்பகவுறுப்பு—(௧அ) புயவகுப்பு, மதங்கு, அம்மனை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல்.

கலவையணி—(௪) உறுப்புறுப்பிக்கலவை, நிகர்தலைமைக்கலவை, ஐயக்கலவை, ஒரு தொடர்ப்பொருட்கலவை.

கலித்துறைவகை—(உ) காப்பியக்கலித்துறை, கோவைக் கலித்துறை.

கலிப்பா—(௩) ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா, கொச்சகக்கலிப்பா.

கலிப்பா—(௧0) நேரிசையொத்தாழிசைக்கலிப்பா, அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பா, வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா, கலிவெண்பா, வெண்கலிப்பா, தரவுகொச்சகக்கலிப்பா, தரவிணைக்கொச்சகக்கலிப்பா, சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா, பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா, மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

கலிப்பாவினம்—(௩) கலித்தாழிசை கலித்துறை, கலிவிருத்தம்.

கலிப்பாவின் உறுப்புக்கள்—(௬) தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம்.

கலியுகச்சோழர்கள்—(௨௧) பவுண்டரிகசோழன், நிலமேகசாமளவர்ண சோழன், தானவாரீசசோழன், பூபாரந்தீர்த்தசோழன், பூவலம்வந்தசோழன், பற்றுசபயக்கைசோழன், பராக்ரமசோழன், மனுநிலையிட்டசோழன், சந்திரகுலாதிக்கசோழன், சேரசூடாமணிசோழன், நாகலோகங்கண்டசோழன், ஆடகேசுரசோழன், கனகபீதாம்பரசோழன், கனகசூடாமணிசோழன், உத்தரக்கானசோழன், சகத்ரட்சியசோழன், திருநீற்றுச்சோழன், காம்பீர்ய சோழன்.

கலியுகத்தில் ஆண்ட பாண்டியர்கள்—(௧௨) சோமசுந்தர பாண்டியன், கற்பூரசுந்தர பாண்டியன், குமாரசேகர பாண்டியன், குமாரசுந்தர பாண்டியன், சண்முகராச பாண்டியன், சுவர்ண பாண்டியன், சருவமித்திரபாண்டியன், பற்றுர்ச்சிம்ம பாண்டியன், மகரத்துவச பாண்டியன், சத்துருபிகர பாண்டியன், சத்துருசம்மார பாண்டியன். கொடுங்கோற்பாண்டியன்.

கலியுகத்தில் ஆண்ட சேரர்கள்—(௨௦). அட்சயபாத்திர சேரன் ஏநாதிச்சேரன், வம்சபரிபாலக சேரன், மங்களாகரச் சேரன், சிவதர்மோத்தாரகச்சேரன், சிவநேசச்சேரன், சிவோற்பவச்சேரன், சிந்துவாரணியச்சேரன், சிவசம்ரட்கச்சேரன், தீரகையாதரச்சேரன், தீரனதரார்த்தச்சேரன், அச்சுதபிரதாபசேரன், அகடிதகீர்த்திப் பிரதாபசேரன், வீரராசேந்திர சேரன், பீமீசுவரசேரன், நிர்மலசேகரசேரன், பஞ்சாட்சர சேரன், சிவபாதசேகரசேகரன், திருமஞ்சனசேரன், கைலாய மடைந்த சேரன்.

கலைகள்—வேறு—(௧௬) இரணிய கருப்பம், சிரத்தை, ஆகாசம், வாயு, தேயு, சலம், பிருதிவி, தசேந்திரியம், மநம், அந்நம், பலம், தவம், மந்திரம், கர்மம், உலகம், பெயர்.

கலை—(௨) சூரியகலை, சந்திரகலை.

கலை—(௩) தந்திரகலை, மந்திர கலை, உபதேச கலை.

கலை—(௫) நிவர்த்திகலை, பிரதிட்டாகலை வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியாதீதகலை.

கலை—(௧௬) கன்மேந்திரியமைந்து, ஞானேந்திரியமைந்து, மனம், அகங்காரம், புத்தி, வித்தை, வாக்கு, சத்தி.

கலைஞானம்—(௬௪) அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம் தருமசாத்திரம், யோகசாத்திரம், மந்திரசாத்திரம், சகுனசாத்திரம், சிற்பசாத்திரம், வைத்தியசாத்திரம், உருவசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரீட்சை, கனகபரீட்சை, இரதபரீட்சை, கசபரீட்சை, அசுவ பரீட்சை, இரத்தின பரீட்சை, பூமிபரீட்சை, சங்கிராமவிலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடணம், வித்துவேடணம், மதனசாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம்,

லைபீலவாதம், கவுத்துகவாதம்; தாதுவாதம், காருடம். நட்டம், முட்டி, ஆகாயப் பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசயம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப்பிரயோகம்.

கலைத்தொழில்—(அ) பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு.

கலைவகை—(ரு) பிரதிட்டாகலை, நிவர்த்திகலை, சாந்தி கலை, சாந்தியாதீதகலை, வித்தியாகலை.

கல்யாணப் பொருத்தம்—(ய) நட்சத்திரப் பொருத்தம், கணப் பொருத்தம், மகேந்திரப்பொருத்தம், ஸ்த்ரீ தீர்க்கப் பொருத்தம், யோனிப் பொருத்தம், இராசிப் பொருத்தம், இராசியதிபதிப் பொருத்தம், வசியப்பொருத்தம், வேதைப் பொருத்தம், ரச்சுப் பொருத்தம்.

கல்யாணம்—(ரு) சொர்க்காவதானம், மந்த்ராபிஷேகம், மகாப்பிரஸ்தானம், கேவலோத்பத்தி, பரிநிர்வாணம்.

கல்லடைப்புநோய்—(௩) வாதக் கல்லடைப்பு, பித்தக்கல்லடைப்பு, தொந்தக் கல்லடைப்பு,

கல்வி—(ச) கேள்வி; தானுணர்தல், பயிற்சி, ஓதுவித்தல்.

கவி—(ச) ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம், இவற்றுள் பொருளடிபாவணி முதலிய கொடுத்து, மற்றொருவன் பாடுகவென்றவுடனே பாடுவோனாசு கவி, பொருட்செல்வம், சொற்செல்வம், தொடை, தொடைவிகற்பஞ் செறிய வுருவக முதலிய வலங்காரத் தோடின்னோசைத்தாய முதமுறப்பாடுவோன் மதுரகவி, மாலைமாற்று, சுழிகுளம், ஏகபாதம், சக்கரம், எழுகூற்றிருக்கை, காதைகரப்பு கரந்துறை, தூசங்கொளல், வாவன்னாற்று, பாதமயக்கு, பாவின் புணர்ப்பு, கூடசதுக்கம் கோமுத்திரி, ஒரெழுத்தினம், ஒற்றெழுத்துத் தீர்ந்தவொரு பொருட்பாட்டு, சித்திரப்பா, விசித்திரப்பா, வினுவுத்தரம், சருப்பதோபத்திரம். எழுத்துவருத்தனமிவை முதலிய மிறைக்கவிதெரிந்து பாடுவோன், சித்திரக்கவி, மும்மணிக்கோவை, பன்மணிமாலை, மறம், கலிவெண்பா, தசாங்கம், மடலூர்தல், கிரிடை, இயல், இசை, கூத்து, பாசண்டத்துறை இணையன விரித்துப் பாடுவோன்வித்தாரகவி.

கழற்சிக்கொடி—(௨) கழற்சிக் கொடி, சிவப்புக் கழற்சிக்கொடி.

களவியல் அதிகாரங்கள் — (எ) தகையணங் குறுத்தல், குறிப்பறிதல், புணர்ச்சி மகிழ்தல், நலம்புனைந்துரைத்தல், காதற் சிறப்புரைத்தல், நாணுத்துறவுரைத்தல், அலரறிவுறுத்தல்.

களவிற்புணர்ச்சிக்குறி—(உ) பகற்குறி, இரவுக்குறி.

களாவகை—(உ) களா, சிறுகளா.

களித்தோனவிநயக் குணம்—(அ) இரகசியத்தை மறையாமை, சொல்லுதலின்மை, கவிழ்தல், சோர்தல், தாழ்தல், தளர்தல், வீழ்ஞ்சொற்க ளுடைமை, களிகவர்ந்த கண்ணோக்குடைமை.

கள்வகை—(ச) தென்னங்கள், பனங்கள், வேப்பங்கள். ஈச்சங் கள்.

கள்ளிகள்—(கு) திருகுகள்ளி, கொடிக்கள்ளி, ஐங்கணுக்கள்ளி செஞ்சதுரக்கள்ளி, மரக்கள்ளி.

கள்ளிவகை—(கூ) இலைக்கள்ளி, ஐங்கணுக்கள்ளி, கோபுரக் கள்ளி, கொடிக்கள்ளி, மரக் கள்ளி, பொத்தைக்கள்ளி, சது ரக்கள்ளி, செஞ்சதுரக்கள்ளி, திருகுகள்ளி.

கறிவேப்பிலைவகை—(உ) கறிவேப் பிலை, காட்டுக்கறி வேப்பிலை.

கற்கண்டுவகை—(௩) சீனிக்கற் கண்டு, பந்தாய்க் கற்கண்டு, பனங்கற்கண்டு.

கற்பிதம்—(உ) அத்தியாரோபம், அபவாதம்.

கற்பியலின் அதிகாரங்கள்—(சஅ) பிரிவாற்ருமை, படர்மெலிந்திரங் கல், கண்விதுப்பழிதல், பசப் புறுபருவரல், தனிப்படர்மிகுதி, நினைந்தவர் புலம்பல், கனவு நிலையுரைத்தல், பொழுதுகண்டி ரங்கல், உறுப்புநலனழிதல், நெஞ் சொடு கிளத்தல், நிறையழிதல், அவர்வயின் விதும்பல், நெஞ் சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை.

கற்புக்காலத்துப் பிரிவு—(சு) பரத் தையிற் பிரிதல், ஓதற்குப்பிரி தல், காவற்குப்பிரிதல், தூதிற் பிரிதல், துணைவயிற்பிரிதல், பொருள்வயிற் பிரிதல்.

கற்பூரம்—(உ) கற்பூரம், பச்சைக் கற்பூரம், இரசகற்பூரம.

கற்ருழைவகை—(அ) கற்ருழை, செங்கற்ருழை, பேய்க்கற்ருழை, கருங்கற்ருழை, நார்க்கற்ருழை, இலைக்கற்ருழை, வரிக்கற்ருழை, மருட்கற்ருழை.

கற்பபேதம்—(௩) ஆன்ம கற்பம், சிவகற்பம், சத்திகற்பம்.

கற்பம்—(உ) அகற்பம், சகற்பம்.

கற்பம்—(உ) பதுமகற்பம், சுவேத வராக கற்பம்.

கற்பிதம்—(உ) அத்தியாரோபம், அபவாதம்.

கற்பிற்கூற்றுக்குரியார்—(சஉ) நற் ருய், கண்டோர், பாணன், கூத் தர், விறலி, பரத்தையர், அறி வர், தலைவன், தலைவி, பார்ப் பான், பாகன், பாங்கி, செவிலி.

கனி—(௩) கதலி, மா, பலா, இவை முக்கனி எனப்படும்.

கன்மமலகாரியம்—(சு) ஒவ்வோர் தலங்களைப்பற்றி யிருத்தல், நோயாய்க்கிடத்தல், புண்ணிய பாவங்களைச் செய்தல், ஒவ் வொரு பற்றுக்களாய் நின்ற தொந்தனைகளை விடுத்தல், சர் வரையும் நிந்தித்தல், இகழ்ந்தா ருடன் பொருந்தல்.

கன்மம்—(௩) ஆகாமியம், சஞ்சி தம், பிராரத்தம்.

கன்மம்—(அ) ஞானுவரணீயம், தரிசனுவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷியம், நாமம், கோத்திரம், அந்தராயம் இவை காதிகள் எனவும், காதிகன்மங்க ளெனவும்படும்.

கன்னிகையர்—(கு) அகலிகை, துரோபதை, சீதை, தாரை, மண்டோதரி.

# கா

காகோளி—(உ) சிறுகாகோளி, பெருங்காகோளி.

காக்கட்டான் வகை—(உ) காக்கட்டான், கருங்காக்கட்டான்.

காக்கைப்பாடினியம்—(உ) பெருங் காக்கைபாடினியம், சிறு காக்கை பாடினியம்.

காங்கூலக்கை—(௩) குவிகாங் கூலம், முகிழ்காங்கூலம், விரி காங்கூலம்.

காசம்—(௧௨) மந்தாரகாசம், பக்க மந்தாரகாசம், சுடர்காசம், வாத காசம், பித்தகாசம், சுவாச காசம், இரத்தகாசம், சிலேட்டு மகாசம், பீனசகாசம், வாத பித்தகாசம், பித்தசிலேட்டுமகா சம், தொந்தகாசம்.

காசரைக்கீரை—(உ) கொடிக்கா சரை, செடிக்காசரை.

காசிப முனிவர் மனைவியர் — (௧௩) அதிதி, திதி, தநு, காலை, ஆயு, சிங்கிகை, மனு, சுரபி, முனி, குரோதவசை, அருகை, விநு தை, கத்துருவை.

காஞ்சித்தலத்தின் பறவைகள்—(௫) வானம்பாடி, அன்னம், கிள்ளை, ஆந்தை, சேவல்.

காஞ்சித்திணை—(உஉ) காஞ்சி, காஞ்சியதிர்வு, தழிஞ்சி, படை வழக்கு, பெருங்காஞ்சி, வாள் செலவு, குடைச்செலவு, வஞ்சி னக்காஞ்சி, பூக்கோணிலை, தலைக்காஞ்சி, தலைமாராயம், தலை யொடு முடிதல், மறக்காஞ்சி, பேய்நிலை, பேய்க்காஞ்சி, தொட் டகாஞ்சி, தொடாக்காஞ்சி, மன் னைக்காஞ்சி, கட்காஞ்சி, ஆஞ் சிக்காஞ்சி, மகட்பாற்காஞ்சி, முனைகடி முன்னிருப்பு.

காஞ்சித் திருமால் பதிகள் — (அ) புண்ணியகோடி விமானம், அட்டபுயம், திருவெஃகா, பாட கம், கஞ்சகாளரங்கம், நிரா காரம், நிலாத்திங்கட் குண்டம்.

காஞ்சி நகரத்தல மரங்கள் — (ரு) மா, புளி, இலுப்பை, அத்தி, எட்டி.

காஞ்சிப்பொதுவியல் திணை — (௫) முதுமொழிக்காஞ்சி, பொருள் மொழிக்காஞ்சி, புலவரேத்தும் புத்தேணுடு, முதுகாஞ்சி, காடு வாழ்த்து.

காஞ்சியில் உள்ள சிவப்பதிகள்—(உ0) கச்சபாலயம், ஏகம்பம், கச்சிமயானம், காரோணம், மாகாளம், பச்சிமாலயம், அநேக தங்காவதம், பணுதரம், பளீச் சுரம், வராகம், சுரகரீச்சுவரம், இராமம், வீரட்டம், வைதம், நூபுரம், உருத்திரம், வச்சிர நகரம், திருமாற்பேறு, மற்சை.

காஞ்சியின் ஆறுகள்—(எ) கம்பை, பம்பை, மஞ்சினி, பிச்சி, கலிச்சி, மண்ணி, வெஃகா.

காஞ்சியின் பொதுக்கள்—(அ) [1]முயல்சீறியானையைத் துரத்தும் பொது, [2]ஏழு சுரங்களை விளைக் கும்பொது, [3]திருமால்கண் துயி லும்பொது, [4]காமவடிவினைத் தரும்பொது, [5]புற்றின்கண்மத் தளவொலி முழக்கும் பொது, [6]திசைதோற்று துமயக்கும் பொது, [7]உமையவள் களித்த மரும்பொது, [8]நீருதவுங்கூவலம் பொது.

காஞ்சியின் பொய்கைகள் — (௯) பழம்பிணி நீக்கும்பொய்கை, இறுதிக்காலத்தைக் குறிக்கும் பொய்கை, காலவேறுபாடு

ணர்த்தும் பொய்கை, இறைவன் திருவடிகளைப் பெறச்செய்யும் பொய்கை, வேண்டியவைகளைப் பெறக்காட்டும் பொய்கை, மெய் யறிவுதரச்செய்யும் பொய்கை, பொன்வடி வைத்தரும்பொய்கை திருமகளருளை உண்டாக்கும் பொய்கை, வசீகரத்தை யளிக் கும் பொய்கை.

காஞ்சியின் றிருநாமங்கள் —(கூ) கஞ்சிபிரளயசித்து, சிவ புரம், விண்டுமாபுரம், திரிமூர்த்தி வாசம், பிரமபுரம், காமபீடம், தபோமயம், சகற்சாரம், சகல சித்தி, கன்னிகாப்பு, துண்டீர புரம், தண்டகபுரம்.

காடுபடுதிரவியம்—(ரு) அரக்கு, இருல், தேன், மயிற்பீலி, நாவி.

காட்சி—(சு) ஐயக்காட்சி, வாயிற் காட்சி, விகற்பக்காட்சி, அந்நு வயக்காட்சி, வெதிரேகக்காட்சி, திருவுகாட்சி.

காட்சியணி—(௩) வாக்கியப் பொருட்காட்சி பதப்பொருட், காட்சி, பொருட்காட்சி.

காட்சியளவைவகை—(௪) வாயிற் காட்சி, மானதக்காட்சி, தன் வேதனைக்காட்சி, யோகக் காட்சி.

காண்பான்—(௩) காண்பான், காட்சி, காணப்படுபொருள்.

காதலர்—(௩) புருடன், தோழன், மகன்.

காப்பியம்—(ரு) சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி. இவை ஐங்காப்பியமெனப்படும்.

காப்பியலக்கணம் — (௩௮) வாழ் த்து, தெய்வ வணக்கம், உரைக் கும் பொருளுணர்தல், சிறந்த நாயகனைக் கோடல், நாட்டுவரு ணனை, நகரவருணனை, மலைச் சிறப்பு, கடல் வருணனை, பரு வச்சிறப்பு, உதயாத்தமனவலங் காரம், கல்யாணம், முடி கவித் தல், பொழில் விளையாட்டு, நீர் விளையாட்டு, மதுபானம், மக்கட் பேறு, கலவியிற் களித்தல், புல வியிற் புலத்தல், மந்திரம், தூது, போர்மேற்செலவு, போர்புரிதல், வெற்றிவழிநடை, பவனி, கள வொழுக்கம், கற்பொழுக்கம், ஆற்றுச் சிறப்பு, திணைவளம், சூதுவிளையாட்டு, உறுதிகூறல், காண்ட, சருக்காதிகளின் பாகு பாடு, பொருட்டுறை, மெய்ப் பாடு, நவரசம், வனப்பு, உத்தி, மதம்.

காப்பியவகை—(உ) பெருங்காப்பி யம், சிறு காப்பியம்.

காப்பியவமைப்புவகை — (உ) வைதருப்பநெறி, கௌடநெறி.

காமஅவிநயக் குணம்—(எ) சுத்த மாகிய அலங்காரமுள்ளவடிவம், தொழில் காரிகையை நோக்குங் கடைக்கண்ணுடைமை, பற் களும் நகையுஞ் சந்திரனுநில வும்போலத் தோன்றல், மலர்ந்த முகமுடைமை, இரந்த சொற் களுடைமை.

காமன்கணைசெயல் — (சு) பெரு மயக்கு, சிந்தாகுலம், புணர்ச் சிக் கிணங்குதல், மோகனம், சந் தாபம், வசீகரணம்.

காமன்கணைத்துன்பம்—(ரு) சுப்பிர யோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், இறப்பு.

காமாலை நோய் — (௧௨) ஊதுகாட் மாலை, வறட்காமாலை, வாத காமாலை, பித்தகாமாலை, சிலே டும காமாலை, வாதசிலேட்டும பித்த சிலேட்டும காமாலை, மகாமாலை, தொந்தகாமாலை, மஞ் சட்காமாலை, அழகு காமாலை, செங்கமலக் காமாலை, கும்பகா மாலை, குன்மக்காமாலை.

காமிகள்பகை—(கo) முத்து, களபம், பனிநீர், பூங்கொத்து, குளிரி, பஞ்சணை, கடல், கங்குல், மலை, கதலி.

காயசாதி புருடர்—(ச) பூமான் சந்தனன், பத்திரசன்னியன், பாஞ்சசாலின்னியன்.

காயம்—(ரு) கடுகு, ஓமம், வெந்தயம், உள்ளி, பெருங்காயம், கடுகுநீக்கி, மிளகு கூட்டியும், ஓமம், நீக்கிச் சுக்கு கூட்டி காயம் ஐந்தென் பாருமுளர், இவையே ஐங்காயம் எனச் சொல்லப்படும்.

காய்கள்—(ந) கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்.

காய்ச்சீர்—(ச) தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய். இவை வெண்பா உரிச்சீர் எனப்படும்.

காரகம்—(ரு) கருமேந்திரியம் (ரு) காண்க. இவையே காரக பஞ்சகம் எனவும்படும்.

காரசாரப் பிறப்பு—(கo) சூடன், சீனம், பூநீறு, வளையலுப்பு, பச்சைக் கர்ப்பூரம், கல்லுப்பு, கறியுப்பு, பொன்னம்பர், மீனம்பர், கடல்நுரை என்பனவாம்.

காரணதத்துவம்—(ரு) தத்துவம் (ரு) காண்க.

காரணதன் மாத்திரை—(ரு) தன் மாத்திரை (ரு) காண்க.

காரணமூர்த்திகள்—(ரு) சதாசிவர், மகேசுரர், உருத்திரர், விட்டுணு, பிரமா.

காரணம்—(ந) முதற்காரணம், துணைக்காரணம், நிமித்தகாரணம், எனவே உலகிற்கு முதற்காரணம் மாயை, துணைக்காரணம் சிவசக்தி நிமித்தகாரணம் சிவபெருமான் இவற்றோடு அவாந்தர காரணமொன்றுங் கொள்வர்; இவை காரணத்திரயம் எனவும்படும்.

காரணவாதம்—(ந) ஆரம்பவாதம், பரிணாமவாதம், விவர்த்தவாதம்.

காரம்—(ரு) வெங்காரம், சீனிக்காரம், சௌக்காரம், பொரிகாரம், நவச்சாரம்.

காருகத் தொழில்—(உ) ஆடையாக்கல், சுமத்தல்.

காலடிப் பூண்டு—(உ) மயிற்காலடிப்பூண்டு, யானைக் காலடிப் பூண்டு.

காலம்—(ந) இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.

காலம் — (சு) பருவத்தைக் காண்க.

காலம்—(கஉ) சிறு பொழுதாறும், பெரும்பொழுது ஆறுமாம்.

காலவகை—(உ) சூக்குமகாலம், தூலகாலம்.

காலவகை—(உந) நிமிடம், காட்டை, கலை, முகூர்த்தம், சாமம், பகல், இரவு, நாள், வாரம், பக்கம், மாதம், இருது, அயனம், வருடம், சந்தியம்சம், சந்தி, யுகம், சதுர்யுகம், மகா யுகம், பிரளயம், கற்பம், பரார்த்தம், பரம்.

காலற்றநாள்—(ந) கார்த்திகை, உத்திரம், உத்திராடம்.

காவல்—(உ) அறப்புறங்காத்தல், நாடுகாத்தல்.

காவற்பிரிவு—(உ) பிரிவறிவித்தல், பிரிவுகேட்டிரங்கல். (திரு-ர்)

காவற்பிரிவு—(உ) அறப்புறங் காவல், நாடுகாவல்.

காவியகுணம்—(ய)செறிவு,தெளிவு சமநிலை, இன்பம், ஒழுகிசை,

உதாரம், உயத்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி.

காவிரிப்பூம்பட்டினப் பெயர்கள்—(கக) இந்திர விருத்தி, மூதூர், சம்பாபதி, பூம்புகார், பட்டினம், காகந்தி, முசுகுந்த நகரம், சோமப்பிரியம், சகலாகாரம், காகந்தி, சங்கமுகநகர்.

காவிரிப்பூம்பட்டினப் பொய்கை—(உ) சூரியகுண்டம், சோமகுண்டம்.

காவேரிக்குத் தென்கரையிலுள்ள சிவாலயங்கள்—(கஉஎ) வாட்போக்கி, கடம்பந்துறை, திருப்பராய்த்துறை, கற்குடி, மூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, எறும்பியூர், நெடுங்களம், மேலைத் திருக்காட்டுப்பள்ளி, ஆலம்பொழில், திருப்பூந்துருத்தி, கண்டியூர், சோற்றுத்துறை, திருவேதிகுடி, தென்குடித்திட்டை, புள்ளமங்கை, சக்கிராப்பள்ளி, திருக்குருகாவூர், திருப்பாலைத்துறை, நல்லூர், ஆவூர்ப் பசுபதீச்சுரம், திருச்சத்திமுற்றம், பட்டீச்சரம், திருப்பழைய றை வடதளி, திருவலஞ்சுழி, குடமூக்கு, குடந்தைக் கீழ்க்கோட்டம், திருக்குடந்தைக் காரோணம், திருநாகேச்சரம், திருவழுந்தூர், தென்குரங்காடுதுறை, திருநீலக்குடி, வைகன் மாடக்கோயில், திருநல்லம், திருக்கோழம்பம், திருவாவடுதுறை, திருத்துருத்தி, திருவிடை மருதூர், திருமயிலாடுதுறை, விளநகர், திருப்பறியலூர், திருச்செம்பொன்பள்ளி, திருநனிபள்ளி, திருவலம்புரம், தலைச்சங்காடு, திருவாக்கூர்த்தான் ரேன்றிமாடம், திருக்கடவூர், திருக்கடவூர் மயானம், திருவேட்டக்குடி, தெளிச்சேரி, தருமபுரம், திருநள்ளாறு, கோட்டாறு, திருவம்பர் பெருந்திருக்கோயில் திருவம்பர்மாகாளம், திருமீயச்சூர், திருமீயச்சூர் இளங்கோயில், திலதைப்பதி, திருப்பாம்புரம், சிறுகுடி, திருவீழிமிழலை, வன்னியூர், கருவிலி, பேணுபெருந்துறை, திருநறையூர், அரிசிற்கரைப்புத்தூர், சிவபுரம், கலையநல்லூர், கருக்குடி, திருவாஞ்சியம், திருநன்னிலத்துப் பெருங்கோயில், திருக்கொண்டீச்சுரம், திருப்பனையூர், திருவிற்குடி, திருப்புகலூர், திருப்புகலூர் வர்த்தமானீச்சரம், இராமனதீச்சரம், திருப்பயற்றூர், திருச்செங்காடு, திருமருகல், திருச்சாத்தமங்கை, அயவந்தி, நாகைக்காரோணம், சிக்கல், கீழ்வேளூர், தேவூர், திருவாரூர், பள்ளியின் முக்கூடல், திருவாரூரரநெறி, திருவிளமர், திருவாரூர் பரவையுண் மண்டளி, கரவீரம், பெருவேளூர், தலையாலங்காடு, குடவாயில், திருச்சேறை, நாலூர் மயானம், கடுவாய்க்கரைப்புத்தூர், இரும்பூளை, அரதைப் பெரும்பாழி, அவளிவணல்லூர், பரிதிநியமம், வெண்ணியூர், பூவனூர், பாதாளிச்சரம், திருக்களர், சிற்றேமம், திருவுசாத்தானம், இடும்பாவனம், கடிக்குளம், தண்டலை நீணெறி, கோட்டூர், வெண்டுறை, கொள்ளம்பூதூர், பேரெயில், கொள்ளிக்காடு, தெங்கூர், நெல்லிக்கா, நாட்டியத்தான்குடி, காருயல், கன்றுப்பூர், வலிவலம், கைச்சினம், கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு, அகத்தியான்பள்ளி, கோடிக்குழகர்.

காவேரிக்கு வடகரையிலுள்ள சிவாலயங்கள்—(சஉ) தில்லை, திருவேட்களம், திருநெல்வாயில், திருக்கழிப்பாலை, திருநல்லூர்ப்பெருமணம், திருமயேந்திரப்பள்ளி, திருமுல்லைவாயில், திருக்கலிக்காமூர், திருச்சாய்க்காடு, திருப்பல்லவனீச்சுரம்,

திருவெண்காடு, திருக்காட்டுப் பள்ளி, திருக்குருகாவூர், சீர்காழி, திருக்கோலக்கா, புள்ளிருக்கு வேளூர், குருமாணக்குடி, திருக்கடைமுடி, திருநின்றியூர், திருப்புன்கூர், நீடூர், அன்னியூர், வேள்விக்குடி, எதிர்கொள்பாடி, திருமணஞ்சேரி, குறுக்கை, கருப்பறியலூர், குரக்குக்கா, வாழ்கொளிபுத்தூர், திருப்பழமண்ணிப்படிக்கரை, ஓமாம்புலியூர், கானாட்டுமுள்ளூர், திருநாரையூர், கடம்பூர், பந்தணைநல்லூர், கஞ்சனூர், திருக்கோடிக்கா, திருமங்கலக்குடி, திருப்பனந்தாள், திருவாய்ப்பாடி, திருச்சேய்ஞலூர், திருந்து தேவன்குடி, திருவியலூர், கொட்டையூர், இன்னம்பர், திருப்புறம்பயம், விஜயமங்கை, திருவைகாவூர், வட குரங்காடுதுறை, திருப்பழனம், திருவையாறு, திருநெய்த்தானம், பெரும்புலியூர், திருமழபாடி, பெரும்புலியூர், திருவலூவூர், அன்பிலாந்துறை, மாந்துறை. திருப்பாற்றுறை, திருவானைக்கா, திருப்பைஞ்ஞீலி, திருப்பாச்சிலாச்சிராமம், ஈங்கோய்மலை.

காளான்வகை—(ச) காளான், பேய்க்காளன், மலைக்காளான், மரக்காளான்.

காற்றின்குணம்—(ரு) போக்கு, வரவு, நோய், கும்பித்தல், பரிசம்.

•

# கி

கியாதிகள்—(ரு) அசத்கியாதி, ஆத்மக்கியாதி, அந்நியதாக்கியாதி, அக்கியாதி, அநிர்வசனீயக்கியாதி.

கிரகசமித்து—(கூ) எருக்கு, முருக்கு, கருங்காலி, நாயுருவி, அரசு, அத்தி, வன்னி, அறுகு, தருப்பை.

கிரகணம்—(உ) சூரிய கிரகணம், சந்திரகிரகணம்.

கிரகதானியம்—(கூ) கோதுமை, பச்சையரிசி, துவரை, பச்சைப்பயறு, கடலை, மொச்சை எள், உளுந்து, கொள்ளு இவை முறையே கொள்க.

கிரகத்துட்குறியர்—(கூ) சந்திரன, செவ்வாய், சனி.

கிரகத்துட்சத்திரியர்—(உ) சூரியன், செவ்வாய்.

கிரகத்துட்சமர்—(உ) சூரியன், சுக்கிரன்.

கிரகத்துட் பிராமணர்—(உ) குரு, சுக்கிரன்.

கிரகத்துட்பெண்—(கூ) சந்திரன், சுக்கிரன், இராகு.

கிரகத்துளலி—(கூ) புதன், சனி, கேது.

கிரகத்துளாண்—(கூ) சூரியன், செவ்வாய், குரு.

கிரத்துள் நெடியர்—(ச) புதன், குரு, இராகு, கேது.

கிரகத்துள் வேளாளர்—(உ) சனி, கேது.

கிரகத்துள்வைசியர்—(உ) சந்திரன் புதன்.

கிரகபாஷை வகை—(ரு) ஆரியம், தெலுங்கு, தமிழ், வடுகு, அந்நியபாடை.

கிரகபுட்பங்கள்—(கூ) செந்தாமரை, வெள்ளாம்பல்; சண்பகம், வெண்காந்தள், முல்லை, செங்கழுநீர், டாமரை, கருங்குவளை, மந்தாரை, செவ்வாம்பல், இவற்றை

முறையே சூரியன், முதற் கேது இறுதியாகவுள்ள கிரகங்களுக்குக் கொள்க.

கிரகம்—(கூ) ஆதித்தன், சோமன், அங்காரகன், புதன், பிரகற்பதி, சுக்கிரன், சனி, இராகு, கேது இவையே நவக்கிரகங்களெனவும், நவகோள்களெனவும், கூறப்படும்.

கிரகரத்தினம்—(கூ) மாணிக்கம், பவளம், புட்பராகம், நீலரத்தினம், வைடூரியம், முத்து, பச்சை, வைரம், கோமேதகம். இவை முறையே சூரியன், செவ்வாய், குரு, சனி, கேது, மதி, புதன், வெள்ளி, இராகு என்பவற்றிற்குக் கொள்க.

கிரகரன் குணம்—(கூ) தும்மல் செய்வது, சினமூள்வது, வெம்மை விளைப்பது.

கிரகலோகம்—(கூ) தம்பாக்கு, ஈயம், செம்பு, பித்தளை, பொன், வெள்ளி, இரும்பு, கருங்கல், துருக்கல்.

கிரகவகை—(கூ) ஆண், பெண், அலி.

கிரகவடிவம் — (கூ) நெடுமை, குறுமை, சமம்.

கிரகவாகனம்—(கூ) மயில், முத்து விமானம், அன்னம், குதிரை, யானை, கருடன், காகம், ஆடு, சிங்கம்.

கிரககாரகம்—(கூ) சூரியன்-பிதுர்காரகன், சரீரகாரகனும், சந்திரன்-மாதுர்காரகன், செவ்வாய் சகோதரகாரகன், புதன் - வித்தியாகாரகன், குரு புத்திரகாரகன், சுக்கிரன் - களத்திரகாரகன், வாகனகாரகன், சனி - ஆயுட்காரகன், இனி குருபிதா மககாரகன், யோககாரகன், போககாரகன் - கேது - மாதாமககாரகன், ஞானகாரகன், மோக்ககாரகன், எனக் கொள்க.

கிரகாங்கங்கள்—(கூ) செவ்வாய்க்குத் தலை, சுரக்கிரனுக்குமுகம், புதனுக்குக் கழுத்து, சந்திரனுக்குத் தோள், சூரியனுக்கு மார்பு, குருவுக்கு வயிறு, சனிக்குத் தொடை, இராகுவிற்கு முழங்கால், கேதுவிற்கு உள்ளங்கால் ஆகுமென்ப.

கிரகாசனம் — (கூ) வட்டவடிவம், சதுகரம், திரிகோணவடிவம், அம்பு, வடிவம், நீண்டசதுரம், ஐங்கோணம், வில்வடிவம், கொடிவடிவம், முச்சில் வடிவு.

கிராணி — (கூ) பித்தக்கிராணி, உட்டணவாதக்கிராணி, சிலேட்டுமவாதக் கிராணி, மேகக் கிராணி, மூலக்கிராணி. பாதக் கிராணி.

கிராணிநோய் — (உகு) வாதக் கிராணி, பித்தக்கிராணி, சிலேட்டுமக்கிராணி, தொந்தக்கிராணி, உஷ்ணவாயுக் கிராணி, அந்தாவாயுக்கிராணி, மூலவாயுக் கிராணி, குன்மக்கிராணி, கெற்பக்கிராணி, ஒட்டுக்கிராணி, சங்கிரகக்கிராணி, வாதாதிசாரம், பித்தாதிசாரம், சிலேட்டுமாதிசாரம், திரிதோஷ அதிசாரம், சுராதிசாரம், சன்னிபாதாதிசாரம், தோடதிசாரம், விதூமசீரணம், தூம அசீரணம், விஸ்பட்ட அசீரணம், வாத விடுசி, சிலேட்டும விடுசி.

கிரியைவகை—(ச) கிரியையிற் சரியை கிரியையிற் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் இவற்றுள் கிரியையிற் சரியையாவது-சிவபூசைக்கு வேண்டும் உபகரணங்கள் செய்துகோடல், கிரியையிற் கிரியையாவது - சிவாகமத்தில் விதித்தவாறே ஐவகைச்சுத்தி

முன்னாகச் சிவலிங்க வடிவிற் செய்யும் பூசனையாம். கிரியையில் யோகமாவது - அகத்தே பூசை ஓமம் தியானம் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யப்படும் அந்தரியாகம். கிரியையில் ஞானமாவது - அவ்வந்தரியாகவுறைப்பின் கணிக முழும் ஓரநுபவ வுணர்வு.

கிருத்தர்வகை—(உ) உதாசீனன், சாதகன்.

கிலுகிலுப்பை—(௩) பெருங் கிலுகிலுப்பை, செங்கிலு கிலுப்பை, வெள்ளைக் கிலுகிலுப்பை.

கிலேசம்—(ரு) அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேடம், அபிநிவேசம்.

கிலேதம்—(எ) இரக்தாசயம், கபாசயம், ஆமாசயம், பித்தாசயம், பக்குவாசயம், வாயுவாசயம், மூத்திராசயம்.

கிழங்குவகை—(௧எ) உருளைக் கிழங்கு, கருணைக்கிழங்கு, சிறுகிழங்கு, சேனைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு, காட்டுக் கருணைக் கிழங்கு, குண்டோசரிக்கிழங்கு, கூகைக்கிழங்கு, கோடங்கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, நிலப்பனைக்கிழங்கு, பிரப்பங் கிழங்கு, பூமிச் சருக்கரைக் கிழங்கு, பூலாங்கிழங்கு, விப்புருதிக் கிழங்கு, வெருகன் கிழங்கு, நிர்விஷக்கிழங்கு.

கிழமை—(உ) தற்கிழமை, பிறிதின் கிழமை.

கிளிகள்—(௩) பச்சைக்கிளி, வெள்ளைக்கிளி, பஞ்சவர்ணக் கிளி.

கிளுவைவகை—(௩) கிளுவை, செங்கிளுவை, மாங்கிளுவை.



# கீ

கீடபேதம்—(௪) வாயுக்கீடம், அக்கினிக்கீடம், சோமக்கீடம், சங்கீரணக்கீடம், இவற்றின் விரி-௬௭—வருமாறு: வாயுக்கீடம் ௧அ அக்கினிக் கீடம் உ௪ சோமக் கீடம் ௧௩ சங்கீரணக்கீடம் ௧உ இவற்றின் விவரம் தத்தம் வரியிற் காண்க.

கீடம்—(அ) ஒணன், தவளை, அடவியீ, வீட்டுப்பல்லி, காட்டு மசகம், மக்ஷிகா, மலையெறும்பு, சிலந்தி.

கீதவுரு—(௩) உக்கிரம், துருவம், ஆபோகம். துருவமென்பது துருமை யெனவும், ஆபோகமென்பது ஆயோமெனவுஞ் சொல்லப்படுதலுமுள.

கீதவுறுப்பு—(௪) உக்கிரம், துருவை ஆபேரகம், பிரகலை.

கீரைத்தண்டுவகை—(ரு) கீரைத்தண்டு, ரோசுக் கீரைத்தண்டு, செங்கீரைத் தண்டு, முளைக் கீரைத்தண்டு, வெண்கீரைத் தண்டு.

கீரைவகை—(௧௩) காசினிக்கீரை, குப்பைக்கீரை, குமிட்டிக்கீரை, கோழிக்கீரை, சாணக்கீரை, பலகீரை, பிண்ணாக்குக்கீரை, புதினாக்கீரை, மகிளிக்கீரை, மணலிக்கீரை, முக்குளிக்கீரை, வள்ளைக்கீரை, அரைக்கீரை.

கீழுலகம்—(எ) அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம்.

கீழ்நிலைநாள்—(௯) அசுவனி, உத்திரம், உத்திராடம், கார்த்

திகை, பரணி, பூரம், பூராடம், மகம், மூலம்.

கீழ்நோக்குநாள்—(கூ) உரோகணி, திருவாதிரை, பூசம், உத்திரம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதையம், உத்திரட்டாதி.



குசலவித்தைகள்—(ரு) எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ் வாசித்தல்.

குடிகள்—(கஅ) சேரர், சோழர், பாண்டியர், ஒளியர், நாகர், பல்லவர், கொங்கர், துளுவர், கார்காத்தார், தொண்டைநாட்டார், குறவர், ஆயர், வேடர், பரதவர், பன்னர், கள்ளர், மறவர், அகம்படியர். இவர்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்த பதினெண்குடிகளாவர்.

குடிமக்கள்—(கஅ) வண்ணான், நாவிதன், குயவன், தட்டான், கன்னான், கற்றச்சன், கொல்லன், தச்சன், எண்ணெய் வாணிகன், உப்புவாணிகன், இலைவாணிகன், பள்ளி, பூமாலைக்காரன், பறையன், கோவிற்குடியான், ஓச்சன், வலையன், பாணன்.

குட்டம்—(அ) கருங்குட்டம், இரணக்குட்டம், வெண்குட்டம், செங்குட்டம், கிருமிகுட்டம், நீர்குட்டம், விரல்குறை குட்டம், சொரிகுட்டம்.

குட்டநோய்—(கஅ) புண்டரீகக் குட்டம், விசுபோடக் குட்டம், பாமா குட்டம், ஏகசருமகுட்டம், கர்ணகுட்டம், சருமகுட்டம், கிருட்டிண குட்டம், அதுவும் பரகுட்டம், மண்டல குட்டம், அபரிசகுட்டம், விசர்ச்சிகா குட்டம், விபாதிகா குட்டம், கிடீப குட்டம், சர்மதலகுட்டம், தத்துரு குட்டம், சித்மாகுட்டம், சதாரு குட்டம், சுவேதகுட்டம்.

குணங்கள்—(ச) மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை.

குணம்—(கூ) சத்துவம், இராசதம், தாமதம். அவையாவன - ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறி யடக்கலென வெட்டுஞ் சத்துவம் மனவூக்கம், ஞானம், வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வியென வெட்டுமிராசதம். பெருண்டி, நெடுந்துயில், சோம்பு, நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை, இவை தாமதம்.

குணம்—(அ) அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. இவற்றுள் முன்னைய நான்கும் ஆடூஉக் குணம். பின்னைய நான்கும் மகடூஉக் குணமென்றறிக.

குணம்—(கஅ) பசி, தாகம், பயம், கோபம், சந்தோஷம், விருப்பம், நினைவு, உறக்கம், நரை, நோய், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், துன்பம், செயலின்மை.

குணம்—(உச) ரூபம், ரஸம், கந்தம், பரிசம், சங்கியை, பரிமாணம், பிரதக்தவம், சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், சிநேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்னம், தருமம், அதருமம், சமஸ்காரம்.

குண்டத்தில் அக்கினி இலக்கண வகை—(ரு) வர்னம், சத்தம், கந்தம், சுவாலை, தூமம், ஈணம்.

குண்டத்தில் அக்கினி இலக்கண விரி—(௩0) வர்னம், (௧௧) சப்தம், (௩) கந்தம், (௧௩) சுவாலை, (௩) தூமம், (௪) ஈணம், (௩௨).

குதிரைக்குரற் குணம்—(ரு) கடல், முகில், சங்கம், இடபம், முழவம்.

குதிரைச்சுழி—(எ) சந்திரசுழி, அண்டாவர்த்தம், சௌவகம், காகாவர்த்தம், கேதாரி, தேசாவர்த்தம், பட்டடை.

குதிரைச் சுழியளவு—(ய) சிரத்தில் இரண்டு, காதில் நான்கு, மார்பில் இரண்டு, நெற்றியினிடத்து ஒன்று, குளம்பி லொன்றுமாகப் பத்துச்சுழிகள் குறையாதிருக்க வேண்டும்.

குதிரை நடை—(௬) சுவரிதகம், ஆக்கிரந்திகம், வல்கிதம், இரேசிதம், புலிதம் இவற்றிற்கு முறையே மெல்லிய நடை, விரைவு நடை, இருகாற்றாக்கியாடி வருநடை, சுற்றியோடல், முழுவோட்டம்.

குதிரை நிறக் குற்றம்—(அ) புலி, கரடி, கழுதை, செந்நாய், பூனை, நரி, காகம், புகையென்னுமிவை போன்ற நிறம்.

குதிரைநிறம்—(எ) முத்து, சந்திரன், தாமரைப் பூந்தாது, பொன், காயாமலர், செவ்வரத்த மலர், பசுங்கிளி யிவை போன்ற நிறமுடைமை நன்மை.

குதிரைப்பெயர்கள்—(௧ரு) மங்காளன், சாரங்கன், கங்காநீலன், மௌவழகன், கொங்காளன், சன்னசம்பான், குங்குமச் சோரன், கரியான், நீலன், சாரன், மள்ளான், உரஞ்சிவந்தான், நல்லான், பொல்லான், கருங்காற் சம்பான்.

குதிரையின் பிறப்பிடம்—(எ) பிரமன் விழிப்புனல், வசுக்கள், பாற்கடல், அக்கினி, கருப்பை, கோட்டான் முட்டை, அமிர்தம்.

குதிரை வழு வி லக்கணம்—(௯) கொம்பு, கன்னம், திருகுகன்னம், நஞ்சபாதம், கொள்ளிக்கால், வெள்ளிக்கண், சடைமுகம், காளகண்டம், அண்டமின்மை, அண்டப் பெருக்கம்.

குதிரைவாலிதட்டை—(௩) பெருங் குதிரைவாலி, வெண்குதிரை வாலி, சிவப்புக் குதிரைவாலி.

குப்பைமேனி—(உ) குப்பைமேனி, வெண்குப்பைமேனி.

குமஞ்சான்—(உ) ஆண்குமஞ்சான், பெண் குமஞ்சான்.

குமிட்டிவகை—(ஐ) குமிட்டிக் காய்க்கொடி, கச்சக்குமிட்டிக் கொடி, பேய்க்குமிட்டிக்கொடி, குமிட்டிக்கீரை, சிவப்புக்குமிட் டிக்கீரை.

குமிழ்வகை—(௪) குமிழ், கருங் குமிழ், செங்குமிழ், சிறுகுமிழ்.

குய்யதராட்டகபுவனம்—(அ) கயை, குருகேத்திரம், நாகலம், நகலம், விமலம், அட்டகாசம், மகேந்திரம், பீமேசம்.

குய்யாட்டகர்—(அ) அமரேசன், பரீரிபாசன், நயிமிசன், புட்கரன், ஆஷாடி, டிண்டி, பராபூதி, நாகுலன். இவர்கள் அப்புதத்துவத்திலிருப்பவர்கள்.

குரங்கு—(௪) சாதாரணக் குரங்கு, வாலில்லா குரங்கு, குட்டைவாற் குரங்கு, கருங்குரங்கு.

குரவர்—(௫) அரசன், உபாத்தியாயன், தந்தை, தேசிகன், மூத்தோன். இவ்ஐவருள் தேசிகனை நீக்கி, தாயெனக் கூறினுமுளர். (உ-ம்) "அரசனுவாத்தியாயன் ருய்தந்தை தம்மு-

ணிகளில் குரவரிவரைவரைத் தேவரைப் போலத் தொழுதெழுக'. எனவே இவர்களைத் தேவர்களைப்போலத் தொழல் வேண்டும் என்பது பெறப்பட்டது. இவர்கள் வணக்கத்திற்கு ஐங்குரவர் வணக்கம் எனக்கூறுவது வழக்கம்.

குரவர்—(௮) போதககுரு, வேதககுரு, நிகிதககுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காரககுரு, விகிதகுரு.

குருலிங்கப் பத்தர்கள்—(௬) குருலிங்கமோகி, குருலிங்கப் பத்தன், குருலிங்கபூசகன், குருலிங்க வீரன், குருலிங்கப் பிரசாதி, குருலிங்கப் பிராணி.

குருலிங்கம்—(௩) தீட்சை, சிட்சை சுவாநுபவம்.

குருவருளால் வீடு பெற்றவர்—(௧௨) சுந்தரமூர்த்திநாயனார், திருநாவுக்கரசு நாயனார், குலச்சிறைநாயனார், பெருமிழலைக் குறும்ப நாயனார், அப்பூதியடிகளாயனார், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருமூலநாயனார், சோமாசிமாற நாயனார், கணநாத நாயனார், நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், திருநீலகண்டயாழ்ப்பாணர்.

குருவிந்த மாணிக்க நிறம்—(௮) மஞ்சாடி, உலோத்திரம், செம்பருத்திப்பூ, முருக்கமலர், குன்றிமணி, முயலிரத்தம், சாதிலிங்கம், குக்கிற்கண்.

குருவிலக்கணம்—(௬) கலாவல்லபம், சமயாசாரம், துலாக்கோல் போல் குணம், சுகுணம், சீலம், அருள்.

குருவிற்குக் கொடுக்க வேண்டிய பொருள்—(௩) உடல், பொருள், ஆவி

குலங்கள்—(௩) சூரியகுலம், சந்திரகுலம், அக்கினி குலம்.

குவளை—(௨) கருங்குவளை, செங்குவளை.

குழு—(௫) அரசர்க்குழு (௫) காண்க. இவர்களே ஐம்பெருங்குழு எனப்படும்.

குளம்படி வகை—(௪) மாட்டுக்குளம்படி, குதிரைக்குளம்படி, கழுதைக்குளம்படி, ஆட்டுக்குளம்படி.

குறண்டிவகை—(௫) குறண்டி, ஊசிக்குறண்டி, சடைக்குறண்டி, பாற்குறண்டி, முட்குறண்டி.

குறள் வெண்பாவிற்கினம்—(௨) குறள் வெண்டாழிசை, குறள் வெண் செந்துறை.

குறிக்கோள்—(௮) இன்பம், தெளிவு, நிறை, ஒளி, வன்சொல், இறுதி, மந்தம், உச்சம்.

குறிஞ்சா—குறிஞ்சா, சிறுகுறிஞ்சா, கருங்குறிஞ்சா, பவளக்குறிஞ்சா, பெருங்குறிஞ்சா.

குறிஞ்சியாழ்த்திறன்—(௩௨) அந்தாளி, நட்டபாடை, மலகரி, விபஞ்சி, காந்தாரம், செருந்தி, கௌடி, உதயகிரி, பஞ்சுரம், புறம்பஞ்சுரம், மேகராகக்குறிஞ்சி, தேதாளி, குறிஞ்சி, கௌவாணம், பாடை, சூர்துங்கராகம், நாகம், மருள், பழந்தக்கராகம், திவ்வியவராடி, முதிர்ந்தவிந்தளம், அநுத்திர பஞ்சமம், தமிக்குச்சரி, அருட்புரி, நாராயணி, நட்டராகம், இராமக்கிரியை, வியாழக்குறிஞ்சி, பஞ்சமம், தக்கணாதி, சாவகக்குறிஞ்சி, ஆனந்தை.

குறுநிலமன்னர் மரபடியார்—(௫) மெய்ப்பொருணாயனார், கூற்றுவநாயனார், நரசிங்க முனையரைய நாயனார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், கழற்சிங்கநாயனார்.

குறைநயப்புக் கூறல்—(அ) குறிப்பறிதல், மென்மொழியாற் கூறல், விரவிக்கூறல். அறியாள்போறல், வஞ்சித்துரைத்தல், புலந்துகூறுதல், வன்மொழியாற் கூறல், மனத்தொடு நேர்தல். (திரு-ர்.)

குறையுற வுணர்தல்—(ரு) குறையுற்று நிற்றல், அவன் குறிப்பறிதல், அவள் குறிப்பறிதல். இருவர் நினைவு மொருவழி யுணர்தல் (திரு ர்)

குற்றங்கள்—(கo) அரசனாணை கடத்தல், பெண் கொலை செய்தல், வருணங்கலத்தல், பிறன் மனைவியைச் சேர்தல், களவு செய்தல், கணவனின்றிக் கருவடைதல், சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சொல்லத்தகாதவற்றைச் சொல்லுதல், கருவழித்தல்.

குற்றமற்ற செல்வப் பயன்—(உ) அறம், இன்பம்.

குற்றம்—(௩) காமம், வெகுளி, மயக்கம்.

குற்றம்—(௩) அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம்.

குற்றம்—(௫) கொட்டாவி நெட்டை, குறுகுறுப்பு, கூன் கிடை, நட்டுவிழல்.

குற்றம்—(௫) அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, வெகுளி, இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேசமென்பர்.

குற்றம்—(அ) ஞானவ்ரணீயம், தரிசனவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயு, நாமம், கோத்திரம், அந்தராயம்.

குற்றம்—(கo) குன்றக்கூறல், மிகைபடக்கூறல் கூறியது கூறல், மாறு கொளக்கூறல், வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல், வழூஉச் சொற் புணர்த்தல், மயங்க வைத்தல், சென்று தேய்ந்திறுதல், நின்று பயனின்மை.

குற்றெழுத்து—(௫) அ, இ, உ, எ, ஒ.

குன்மநோய்கள்—(அ) சூலைகுன்மம், வாதகுன்மம், பித்தகுன்மம், சிலேட்டுமகுன்மம், சன்னிகுன்மம், எரிகுன்மம், சாத்திகுன்மம், வலிகுன்மம்.

குன்மம்—(அ) சூலைகுன்மம், வாதகுன்மம், பித்தகுன்மம், வலிகுன்மம், சன்னிகுன்மம், சாத்திகுன்மம், வெய்ய குன்மம், எரிகுன்மம்.

குன்றிமணி—(௫) குன்றிமணி, பெருங்குன்றிமணி, கருங்குன்றிமணி, வெண்குன்றிமணி, மஞ்சட் குன்றிமணி.

## கூ

கூத்தின்விநற்பர்—(கரு) அலைப்பு, இலயம், உள்ளாளனம், கடகம், கரணம், குனிப்பு, கூடை, கொந்தளம், சிங்களம், தேசிகம், பவுரி, பிரமரி, மலைப்பு, மல், வீரட்டானம்.

கூத்து—(உ) சாந்தி, விநோதம்.

கூத்துவகை—(உ) தேசிகம், மார்க்கம். பின்னது வடுகு என்றுஞ் சொல்லப்படும்.

கூந்தற்பால்—(௫) முடி, குழல், தொங்கல், பனிச்சை, சுருள். இவற்றுள், மயிரை உச்சியின் முடித்தல் முடி, சுருட்டி முடித்தல் குழல், மயிரை முடிந்து விடுதல் தொங்கல், பின்னி விடுதல் பனிச்சை, பின்னே செருகல் சுருள்.

கூலம்—(அ) நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, மூங்கினெல், "பதி னென் கூலமுமுழவர்க்குமிகுக" என்றார் மதிவாண நாடகத் தமிழ் நூலாராகலின், பலசரக் கென்பாருமுளர்.

கூலம்—(கஅ) நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை என்பர் கூத்த நூலா சிரியர்.

கூழைத்தொடை.—(ரு) கூழை மோனை, கூழையியைபு, கூழை எதுகை, கூழைமுரண், கூழை அளபெடை.

கூறைவிகற்பம்—(கஎ) கந்தை, விரிபம், கண்டை, பிடியல், வேதகம், புங்கம், பங்கம், கத்தி யம், தாரியம், சிற்றில், நாகம், பாரி, பாளிதம், காம்பு, நேத்தி ரம், மயிரகம், வயிரியம்.

# கே

கேடு—(அ) விட்டில், தன்னரசு, யானை, மிகு மழை, மிகுகாற்று, நட்டம், வேற்றரசு, கிளி.

கேந்திரம்—(ச) உதயம், ச, எ, பத்தாம் இராசிகள்.

கேள்வி—(ச) அறம், பொருள், இன்பம், வீடு இந்நான்குங் கேட்டல்.

கேள்வி—(ரு) அறம், பொருள், இன்பம், வீடு இந்த நாற் கேள்வியோடு இவற்றின் வழி நிற்றல்.

# கை

கை—(சஉ) பதாகை, திரிபதாகை, கத்தரிக்கை, தூபம், அராளம், இளம்பிறை, சுகதுண்டம், முட்டி, கடகம், சூசி, கமலகோ சிகம், காங்கூலம், கபித்தம், விற் பிடி குடங்கை, அலாபத்திரம், பிரமரம், தாம்பிரசூடம், பசாசம், முகுளம், பிண்டி, தெரிநிலை, மெய்ந்நிலை, உன்னம், மண்டலம், சதுரம், மான்றலை, சங்கு, வண்டு, இலதை, கபோதமுகம், மகரமுகம், வலம்புரி, அஞ்சலி, புட்பாஞ்சலி, பதுமாஞ்சலி, கபோதம், கற்கடகம், சுவத் திகம், கடகாவருத்தம், நிடதம், தோரம், உற்சங்கம், புட்பபுடம், மகரம் சயந்தம், அபயவத்தம், வருத்தமானம்.

கைக்கிளைப் பெருந்திணை—(கo) காந்தள், வள்ளி, சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, இல்லாண் முல்லை, பாசறை முல்லை.

கைத்தொழில்—(ரு) எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத் தொடுத்தல், யாழ் வாசித்தல்.

கைவட்டணை—(ச) அபவேட்டி டிதம், வியாவர்த்திதம், பரிவர்த் திதம்.

# கொ

கொங்குநாட்டுச் சிவாலயங்கள்—(எ) திருவெஞ்சமாக் கூடல், திருக்கருவூர்த் திருவானிலை, திருப்பாண்டிக் கொடுமுடி, திருச்

செங்குன்றூர், திருநணா, திருமுருகன்பூண்டி, திருப்புக்கொளியூர்.

கொச்சகக்கலிப்பா — (ஔ) தரவு கொச்சகக்கலிப்பா, தரவிணைக் கொச்சகக்கலிப்பா, சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா, பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

கொடிவகை — (கஉ) அடப்பங்கொடி, உப்பிலாங்கொடி, ஊசலாங்கொடி, ஊணுங்கொடி, கருங்கொடி, காத்தொட்டிக் கொடி, குமிட்டிக்கொடி, ஓடாங்கொடி, குவளைக்கொடி, குறட்டைக்கொடி, சவுரிக்கொடி, பிரம்புக்கொடி, பிள்ளைதாட்சிக் கொடி, ஆட்டாங்கொடி, மாந்தக்கொடி, கருடக்கொடி.

கொடுந்தமிழ்நாடு—(கஉ)பொங்கா நாடு, ஒளிநாடு, தென்பாண்டி நாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீத நாடு, பூழிநாடு, மலையமாநாடு, அருவாநாடு, அருவா வடதலை நாடு. இதனை "தென் பாண்டி குட்டம் குடம் கற்கா வேண்பூழி, பன்றியருவாவதன் வடக்கு - நன்றாய, சீதமநாடு, புனனாடு செந்தமிழ்சேர், ஏதமில் பன்னிருநாட்டெண்" என்ப தானறிக.

கொடை—(எ)வழக்கத்திற்கொடுத்தல், உரிமையிற்கொடுத்தல், அச்சத்திற் கொடுத்தல், பாவனையிற்கொடுத்தல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற்கொடுத்தல், அவலத்திற் கொடுத்தல், உதாரணம் வருமாறு:—மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என்பது வழக்கத்திற் கொடுத்தல், மகனுக்கரசு கொடுத்தான் என்பது உரிமையிற்கொடுத்தல், அரசற்குத் திறைகொடுத்தானென்பது அச்சத்திற்கொடுத்தல், தந்தை தாய்க்குத் திதி கொடுத்தானென்பது பாவனையிற் கொடுத்தல், அவனுக்குப் பரிசு கொடுத்தானென்பது உவகையிற் கொடுத்தல், அவனுக்குத் தண்டனை கொடுத்தான் என்பது வெகுளியிற் கொடுத்தல், வாய்க்கரிசியிட்டான் என்பது அவலத்திற் கொடுத்தல்.

கொடைப்பயன் — (உ) காமியம், நிட்காமியம்.

கொடைமாட்சி—(சு) சம்விதத்தம், பாரிதோஷிகம், சிரீதத்தம், இலஜ்ஜாதத்தம், பயதத்தம், பாபதத்தம்.

கொடைவகை—(ங) வரைவின்றி யாவர்க்குங் கொடுத்தல் புகழ்வோர்க்குக் கொடுத்தல், இரப்போர்க்குக் கொடுத்தல்.

கொட்டைவகை—(ச) அக்ரோட்டுக் கொட்டை, சேங்கொட்டை, பூந்திக்கொட்டை, புன்னைக் கொட்டை.

கொத்தவரை—(ங) சிறுகொத்தவரை, பெருங்கொத்தவரை, சீனிக்கொத்தவரை.

கொத்தான் — (ங) கொத்தான், வேரிலாக் கொத்தான், முடக் கொத்தான்.

கொள்ளுவகை — (ங) காட்டுக் கொள்ளு, கருங்கொள்ளு, செங்கொள்ளு.

கொழுமிச்சை—(ச) கொழுமிச்சை, காட்டுக் கொழுமிச்சை, சருக்கரைக் கொழுமிச்சை, புளிப்புக் கொழுமிச்சை.

கொன்றைவகை—(ச) கொன்றை, சரக்கொன்றை, சிறுகொன்றை குளோப்புக் கொன்றை, புலிநகக் கொன்றை, மயிற் கொன்றை.

# கோ

கோசங்கள் — (ரு) அந்நமயகோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம்.

கோசங்கள்—(சு) மூளை, அத்தி, நரம்பு, ஊன், தோல், மயிர்.

கோஷ்டங்கள்—(௧௦) கிலோமம், புத்புசம், யக்ருது, பலீகம், உந்துகம், விருக்கம், நாபி, டிம்பம், ஆந்திரம், வஸ்தி.

கோசம்—(௩) பிராணமயம்,மனோமயம், விஞ்ஞானமயம் இவை கோசத்திரயமாம்.

கோசம்—(ரு) அன்னமயம்,பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம், அவையாவன-உடல் அன்னமய கோசம், கருமேந்திரியமும் பிராணனும் பிராணமய கோசம். கருமேந்திரியமும் மனமும் மனோமயகோசம், ஞானேந்திரியமும், புத்தியும் விஞ்ஞானமய கோசம், அவித்தையானந்தமய கோசம்.

கோடல்வகை—(௧௦) கேளாதேற்றல், கேட்டேயேற்றல், ஏலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல். இவற்றிற்கு முறையே உதாரணம்-ஆவிற்கு நீர்விட்டான், வறியார்க்கீந்தான். மாணாக்கனுக்கறிவு கொடுத்தான், தனக்குச் சோறிட்டான், அரனுக்குக் கண்ணலர் கொடுத்தானரி, அரிக்குச் சக்கரங்கொடுத்தானரன், சோழனுக்கு விருந்திட்டான் சேரன், சோற்றிற்கு நெய்விட்டான், மாணாக்கற்குக் கசையடி கொடுத்தானாசிரியன், கள்ளனுக்குக் கசையடி கொடுத்தானரசன்.

கோடிவகை—(௧௪) கோசிகம் பீதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம், வடகம், பஞ்சு, இரட்டு, பாடகம், கோங்கலர், கோபம், சித்திரக்கம்மி, குருதி, கரியல், பேடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்கர்க்காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், வண்ணடை, கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இறஞ்சி, வெண்பாத்தி, செம்பொத்தி, பணிப்பொத்தி.

கோணங்கள்—(எ) முக்கோணம், ஐங்கோணம், அறுகோணம், எழுகோணம், அட்டகோணம், நவகோணம், நாற்பத்து முக்கோணம்.

கோரைவகை—(௪) சுனைக்கோரை, பெருங்கோரை, கல்கோரை, ஊசிக்கோரை.

கோரைவகை—(அ) கோரை, உப்பங்கோரை, ஊசிக்கோரை, கஞ்சாங்கோரை, கம்பங்கோரை, கனைக்கோரை, பாய்க்கோரை, கற்கோரை.

கோலம்—(உ) மணக்கோலம், பிணக்கோலம்.

கோவாங்குமணிநிறம்—(௪) செங்கல், குராமலர், கோவை, மஞ்சள்.

கோவைவகை — (ரு) மேகலை, காஞ்சி, கலாபம், பருமம், விரிசிகை மேகலை, எண்கோவையும், காஞ்சி எழுகோவையும்,

கலாபம் பதினாறு கோவையும், பருமம் பதினெட்டுக் கோவையும், விரிசிகை முப்பத்திரண்டு கோவையுமாம். (கோவை-மணிச்சரம்.)

கோவைவகை—(எ) கோவை, அப்பைக் கோவை, இராமக் கோவை, ஐவிரலிக்கோவை, கருங்கோவை, கொல்லன் கோவை, கற்கோவை.

# கௌ

கௌசிகம்—(௬) தோல், மாமிசம், இரத்தம், மேதை, மச்சை, எலும்பு.

கௌடநெறி—(௰) செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தவில் பொருண்மை, காந்தம், வலி, சமாதியென்னும் பத்துக் குணங்களுக்கும் மாறாக வருவனவாம். இது கௌடதேசக் கவிஞரால் விரும்பிக் கைக் கொள்ளப் பட்ட நெறி.

கௌடம்—(௫) சுத்தகௌடம், கானகுப்சம், சாரசுவதம், உற்கலம், மைதுலை.

கௌவியம்—(௫) கோசலம், கோமயம், பால், தயிர், நெய், இவற்றுடன் கோரோசனம், சேர, ஷட்கௌவியம்.

# ச

சகலர்வகை—(௩) அதிபக்குவர், மந்த பக்குவர், அபக்குவர். இவர்கள் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களை யுடையவர்கள் இவர்களுக்குக் காரண சரீரம், புரியஷ்டக சரீரம், தூலசரீரம் என மூவகைச் சரீரங்களுண்டு.

சகளமூர்த்திகள்—(௫) ஈசானன், ஈசுவரன், பிரமன், சிவன், சதாசிவன்.

சக்கரவர்த்திகள்—(௬) அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுற்சன், புரூரவன், கார்த்தவீரியன். இவர்கள் மற்றொருவனைப் பணியாது தரணியாண்டோர்.

சக்தி—(௩) உத்சாகசக்தி, பிரபு சக்தி, மந்திரசக்தி. இவை அரசனுக்கு யுத்த காலத்தில் இருக்க வேண்டியவை. இவற்றுள் உத்சாக சக்தி-மனோவேகம், பிரபு சக்தி-தன முதலியன, மந்திர சக்தி-ஆலோசனை.

சங்கங்கள்—(௩) முதல் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம்.

சங்கமர்வகை—(௨) பட்டாதிகாரர்கள். சரமூர்த்திகள்.

சங்கிலிகள்—(௩) இலாடசங்கிலி, திரிவட்டச்சங்கிலி, வீரச்சங்கிலி.

சங்கிரணகீடம்—(௧௨) துங்கீநசம், கலகஸ்தம், பகம், பாஹடகம், கோஷ்டகாகி, கிருமிகரம், மண்டலபுஷ்பகம், காளநாபம், சாஷபகம், மத்குளி, சம்பளி, அக்னிகீடம்.

சங்கு—(௪) இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம்.

சஞ்சிதம்—(௩) ஔபநிதிகம், யசிதம், ஔத்தமர்ணிகம். (பழைய வரவு)

சடக்குணப்பண்பு—(௫) பல்வகை வடிவு, இருகந்தம், ஐவண்ணம், அறுசுவை, எட்டூறு.

சடுத்தலங்கள்—(௬) பக்தத்தலம், மகேசத்தலம், பிரசாதித்தலம்,

பிராணலிங்கத்தலம், சரணத்தலம், ஐக்கியத்தலம்.

சடுத்தலங்கள் விரி—(௪௪)

பக்தத்தலங்கள்—(௧௫) பிண்டத்தலம், பிண்டஞானத்தலம், சமுசாரநீக்கத்தலம், குருகாருண்யத்தலம், இலிங்கதாரணத்தலம், விபூதிதாரணத்தலம், உருத்திராக்கதாரணத்தலம், பஞ்சாக்கரத்தலம், பத்தத்தலம், உபயத்தலம், திரிவிதசம்பத்தித்தலம், சதுவிதாசாரத்தலம், உபாதிதானத்தலம், நிருபாதிதானத்தலம், சகசதானத்தலம்.

மகேசத்தலம்—(௯) மகேசுரத்தலம், இலிங்கநிட்டைத்தலம், பூர்வாச்சிரமநிரசனத்தலம், அத்துவிதநிரசனத்தலம், ஆவாகனநிரசனத்தலம், அட்டமூர்த்தி நிரசனத்தலம், சர்வகத நிரசனத்தலம், சிவசகன் மயத்தலம், பக்ததேகிகதேவத்தலம்.

பிரசாதித்தலம்—(௭) பிரசாதித்தலம், குரு மான்மியத்தலம், இலிங்கமான்மியத்தலம், சங்கமமான்மியத்தலம், பத்தமான்மியத்தலம் சரணமான்மியத்தலம், பிரசாதமான்மியத்தலம்.

பிராணலிங்கத்தலம்—(௫) பிராணலிங்கத்தலம், பிராணலிங்கார்ச்சனைத்தலம், சிவயோக சமாதித்தலம், இலிங்கநிசத்தலம், அங்கலிங்கத்தலம்.

சரணத்தலம்—(௪) சரணத்தலம், தாமக நிரசனத்தலம், ஞானநிர்த்தேசத்தலம், சீலசம்பரதனைத்தலம்.

ஐக்கியத்தலம்—(௪) ஐக்கியத்தலம், சர்வாசார சம்பத்தித்தலம், ஏகபாசனத்தலம், சகபோசனத்தலம்.

சடுவிதவாதம்—(௬) அருத்தவாதம், உபாசநாபரவாதம், துதிபரவாதம், உபசாரிகவாதம், சகுணசாதிரிசவாதம், சாதிவியத்திவாதம்.

சட்குணம்—(௬) (1) சருவஞ்ஞை, திருப்தி, அநாதிபோதம், அலுப்தசத்தி, அநந்தசத்தி, சுவதந்திரத்துவம், (2) ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம்.

சட்சம்பத்திகள்—(௬) சமம், தமம், உபரதி, திதீட்சை, சிரத்தை, சமாதானம்.

சதி—(௪) சாரிகை, சதுரிகை, சகஞ்சாதிகை, தாதிகை. இவை சதுர்வித சதி எனப்படும்.

சதுரங்கம்—அங்கங்காண்க.

சதுர்விததானங்கள்—(௪) அபயம், ஆகாரம், சாஸ்திரம், ஔஷதம்.

சத்தசம்பந்தம்—(௨) சத்திவிருத்தி, இலட்சணாவிருத்தி.

சத்ததீவு—(௭) தீவு-(௭) காண்க.

சத்தப்பிரவிருத்தியின் நிமித்தம்—(௪) சாதி, குணம், கிரியை, சம்பந்தம்.

சத்தம்—(௨) எழுத்து வடிவம், ஒலி வடிவம்.

சத்தம்—(௫) தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி. இவையே சத்தத்துக்கைந்து காரணம்.

சத்தவிடங்கத்தலம்—(௭) திருவாரூர், நாகப்பட்டினம், திருநள்ளாறு, திருமறைக்காடு, திருக்காருயல், திருவாய்மூர், திருக்குவளை.

சத்தாவத்தை—(௭) அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம, பரோக்ஷஞானம், அபரோக்ஷ ஞானம், துக்கநிவிர்த்தி, ஆனந்தம்-

சீரகவகை—(ரு) சீரகம், சிறுசீரகம் பெருஞ்சீரகம், கருஞ்சீரகம், பிளவுசீரகம்

சீர்—(ரு) இயற்சீர், வெண்சீர் வஞ்சிச்சீர், பொதுச்சீர், அசைச்சீர்.

சீலங்கள்—(அ) கொல்லாமை, களவுசெய்யாமை, வியபிசரியாமை, பொய்கூருமை, கள்ளுண்ணுமை, மணமுள்ள பொருளைப் பயன்படுத்தாமை, தூய்மையற்ற உணவைஉண்ணுமை, பாய்மேற் படுத்தல் (இவைபௌத்தமதச் சார்பானவை)

சீவதேகம்-(௩)-தூலம், சூக்குமம், காரணம்.

சீவபேதம்-(௩) விசுவன், தைசதன் பிராக்கியன். இவை சீவரின், மூன்றுபேதங்கள், சீவத்திரய மென்பதுமிதே.

சீவரத்தினங்கள்-(எ)-அரச லக்ஷணமுள்ள யானை, எல்லாம்செய்யவல்ல சிற்பி, கற்புடைய பெண், வல்லசேனதிபதி, பண்டாரம் காப்போன், உற்பாதம் கூறும் நிமித்திகன், நல்ல லட்சணமுள்ள குதிரை.

சீவவுபாதி—(எ)-அநீசத்வம், சிஞ்சிஞ்ஞத்வம், பரிசின்னத்வம், மாயாசகித்வம், அற்ப சத்தித்வம், பராதீனத்வம், அபரோக்ஷத்வம்.

சீவனமுனை —(ரு) - வான்முனை, கொழுமுனை, எழுத்தாணிமுனை, கதிர்முனை, ஊசிமுனை.

சீவன்முத்திப்பயன் —(ரு) ஞான ரட்சை, தவம், விசம் வாத மில்லாமை, துக்கநிவர்த்தி, சுகப்பிராப்தி.

சீவாவத்தைகள்—(௩) சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி.

சீனச்செடிவகை—(சஅ) அம்பர் அம்மோனியாகப் பிசின், ஆலீவ் செடி, இபிகாக்குச் செடி, எர்க் கட்டரிசி, கற்பூரச் செடி கலம்பாச் செடி, காலசிகச் செடி, காலபேனச் செடி, காயத் தைலச் செடி, கிளிசிரீன் செடி, குவாக்குச் செடி, குவாசியாச் செடி, குசும்பாச் செடி, கூவ மாவுச் செடி, கொய்னுச் செடி, சகாமோனிச் செடி, கச்சினுர் மரம், சாயமரம், சான்ரேனின் செடி, சிங்கொனுயாக்குச் செடி, சென்சன் செடி, டாமற் செடி, டிசிடேலிஸ் செடி, டிரேக்காச் செடி, ஊதளைச் செடி, டோராக்கிஸ் செடி, தார்மரம், தேன்மரம், பர்க்கேண்டிபிச்சிச் செடி, பனிச்சிக்காய்ச் செடி, பாலஸ்மச் செடி, பாற்பெரிச் செடி, பிசின் பட்டைச் செடி, பெப்பர்மெண்டுச் செடி, பெல்லேடோனுச் செடி, பேதனு, பேரீராச் செடி, பைன்சுமரம், போடோவில்லிச் செடி, மக்கிச் செடி, மரியங்காய், மருக்களங்காய், மான்நாச் செடி, மூசாம்பரம், மோகடஞ் செடி, ரூமமஸ்தகிச் செடி, தோனியப் பூண்டுச் செடி.

# சு

சுகுணவிருத்தி — (எ) - ஞான நூலோதல், ஓதுவித்தல், ஞான நூற்பொருளுரைத்தல், ஞான நூற்பொருள் கேட்டல், ஞான நூற்பொருள் சிந்தித்தல், சற்சங்கஞ்சேர்தல், சற்சனர் வழி நிற்றல்.

சுடர்(உ)சூரியன், சந்திரன்
சுடர்-௩-சந்திரன், சூரியன், அக்கினி.

சுட்டுவகை—(உ)—அகச்சுட்டு, புறச்சுட்டு.

சுட்டெழுத்துக்கள்(௩)அ, இ, உ.

சுத்தத்திற்குரியவெழுத்து -(௧௨)—மகமுதலிய பன்னிருவர்க்க வெழுத்துகளாம்.

சுத்தி(௫)ஆன்மசுத்தி,தானசுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்கசுத்தி.

சுத்தி—(அ) பரிணுமசுத்தி, விநய சுத்தி, ஈரியாபதசுத்தி, பிரதிஷ்டாபனசுத்தி, சய்யாசன சுத்தி, வாக்சுத்தி, பிட்சசுத்தி, காயசுத்தி.

சுபக்கிரகம்—(௪) புதன், பிருகற்பதி, பூர்வபக்கச்சந்திரன், சுக்கிரன், (சுபக்கோள்.)
சுபம் -(அ) மங்கலங் காண்க.

சுபராசி—(௬) கற்கடகம், மிதுனம், இடபம், கன்னி, தனுசு, துலாம், மீனம்.

சுப்ரமணியர்குணம்—(௬) சருவஞ்ஞகை, திருப்தி, அநாதிபோதம், அலுப்தசத்தி, அநந்தசக்தி,சுவதந்திரத்துவம்.

சுப்ரமணியர்திருமுகம்—(௬) பிரணவம், இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, ஆதிசத்தி, பராசத்தி.

சுப்ரமணியர் தேவிமார்(உ)தெய்வயாணையம்மை, வள்ளியம்மை. இவருள் தெய்வயாணை அம்மையாரை ஞானசத்தியெனவும், வள்ளியம்மையாரைக் கிரியாசத்தியெனவும் கூறுப. அன்றி இச்சாசத்தி வள்ளியம்மையார், கிரியாசத்தி தெய்வயாணையம்மை, ஞானசத்தி கதிர்வேல், எனவுங்கொள்வர்.

8

சுப்பிரமணியர்பிரதானத்தலம் -(௬) திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், சோலைமலை.

சுயம்வரம்—(௩) இச்சாசுயம்வரம், பந்தயச் சுயம்வரம், வீரசுயம்வரம்.

சுரங்கள்—(௧அ) வாதசுரம், பித்தசுரம், சிலேட்டுமசுரம்,வாதபித்தசுரம், வாதசிலேட்டுமசுரம், பித்தசிலேட்டுமசுரம், பூதசுரம், அசீரணசுரம், அபிகாதசுரம், ஆக்கசுரம். மாறல்சுரம், ஆக்கசீதசுரம், ஆமசுரம், சருமதாதுகதசுரம், அஸ்திதாதுகதசுரம், இரத்ததாதுகதசுரம், மாசதாதுகதசுரம், சன்னிவாதசுரம்.

சுரம்—(எ)- ச, ரி, க, ம, ப, த, நி, அன்றியுமேழிசை காண்க.

சுரைவகை—(௫) சுரை, பேய்ச்சுரை, கின்னரிச்சுரை, கும்பச்சுரை, கலசச்சுரை.

சுவாயம்பூமனுவின் மக்கள்—(எ) அங்கிதீரன், எமதாதி, வபுட்டு, சோதிட்டு, துதியான், அவ்வியன், சவனன்

சுவை—(உ) சொற்சுவை பொருட்சுவை.

சுவை—(௬) கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு.

சுவை—(அ) வீரம், அச்சம்) இழிப்பு, வியப்பு, காமம், அவலம் உருத்திரம், நகை.

சுவையணியின்வகை—(௯) வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம் அவலம், உருத்திரம், நகை, சாந்தம்.

சுழிகள்—(௩) இடச்சுழி, வலச்சுழி நடுச்சுழி.

சுழுத்தி(வேறு)—(ரு) சுழுத்தி, மூர்ச்சை, சமாதி.

சுழுத்தி—(ரு) சுழுத்திசாக்கிரம், சுழுத்திசொப்பனம், சுழுத்தி சுழுத்தி.

சுற்றம்—(க) அரசர்க் குறுதிச் சுற்றம் (கு) காண்க.

# சூ

சூக்குமசரீரம்— (உ) சமஷ்டி, வியஷ்டி.

சூதகம்—(கு) சனனாசூசம், மரணா சூசம், சண்டாளதீண்டற்றோய்தல், சுராபானம்பண்ணல், பொய் கூறல்.

சூதமுனிவர்மாணாக்கர்—(சு) சுமதி அக்கினி, வருச்சசன், மித்திராயு, சாம்சபாயனன், அகிருதவிர ணன், சாவர்ணி.

சூத்திரம்—(கு) சைமினீயம், ஆசு வலாயனம், போதாயனம், காத் தியாயனம், வைகானசீயம்.

சூரியசந்திரர் முதலிய வீதி— (ங) மேடவீதி, இடபவீதி, மிதுன வீதி. அவைதாம்: இடபம், சிங் கம், மிதுனம், கடகம், இந்நான் கும் மேடவீதி; மீனம், மேடம், கன்னி, துலாம், இந்நான்குமிட பவீதி; தனுசு, மகரம், கும்பம், விருச்சிகம் இந்நான்குமிதுன வீதி.

சூரியர்—(கஉ) தாத்துரு, சக்க ரன், அரியமன், மித்திரன், வரு ணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்துரு, துவட்டா, இப்பெயர் சித்திரைமாத மேடவிராசி முதல் ஒவ்வொரு மாதத்தொவ்வோரி ராசியிற் புகுந்த சூரியனுக்கு முறையே செல்லுமென்பர், இவரே துவாத சாதித்தர்.

சூரியன்றேர்க்குதிரைகள் — (எ) காயத்திரி, பிருகதி, உட்டி ணிக்கு, சத்தி, திருட்டிப்பு, அனு ட்டிப்பு, பந்தி, ஆசிரியர் சிலர் சப்தாயென்னும் குதிரையின் பெயர்ஏழ்பரியெனமொழிபெயர்க் கப்பட்டதெனவும் ஒன்றே ஏழுவாரங்களையும் நோக்கி ஏழு நாமங்கள் கொடுக்கப்பட்ட தெனவுங் கூறுப.

சூலை—(௭) பித்தசூலை, வாதசூலை, சிலேட்டுமசூலை, வாதபித்தசூலை, சிலேட்டுமபித்தசூலை, ஐயகண சூலை.

சூலைநோய்—(கஒ) மேகசூலை, முறிச்சூலை, வாதசூலை, பித்த சூலை, சிலேட்டுமசூலை, ஆம சூலை, உக்காரசூலை, குன்மசூலை, உலர்த்துச்சூலை, நிதம்பச்சூலை, கறைச்சூலை, சுரசூலை, பக்கச் சூலை, கருப்பச்சூலை, தாரச்சூலை.

# செ

செந்தொட்டிவகை— (கு) செந் தொட்டி, சிறுசெந்தொட்டி, செஞ்செந்தொட்டி, கருஞ்செந் தொட்டி, சிவப்புச்செந்தொட்டி.

செப்பலோசை—(ரு) ஏந்திசைச் செப்பல், தூங்கிசைச்செப்பல், ஒழுகிசைச்செப்பல்.

செம்பரத்தை—(ரு) செம்பரத்தை, அடுக்குச்செம்பரத்தை, அலங் காரச் செம்பரத்தை.

செய்கை—(உ) நற்செய்கை, துற்செய்கை.

செய்கை— (நூல்) (சு) புறப்புறச் செய்கை, புறச்செய்கை, அகப் புறச்செய்கை, அகச்செய்கை.

செய்யுட்குரியகணங்கள்— (அ), ஆகாயம், இயமானன், கதிரவன் தீ, நிலம், நீர், திங்கள், காற்று. இவற்றுள் முன்னைய நான்கும் தீமை, பின்னைய நான்கும் நன்மை.

செய்யுட் பொருத்தம்—(ய) மங்கலம், சொல், பால், வருணம், உண்டி, தாநம், எழுத்து, நாள், கதி, கணம். இவை தசப்பொருத்தமெனவும்படும்.

செய்யுளுறுப்பு— (சு) எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை

செய்யுள்—(சு) வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாடற்பா, மருட்பா.

செய்யுள்நெறி—(உ) வைதருப்பம் கௌடம்.

செய்யுள் நெறியின் பிரிவுகள்-(௧௦) செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி.

செய்யுள் வகை—(சு) முத்தகம், குளகம், தொகைநிலை, தொடர்நிலை.

செய்யுள் விகாரம்—(கூ) வலித்தல் மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல், முதற்குறை, இடைக்குறை, கடைக்குறை.

செருப்படை—(உ) சிறு செருப்படை, பெருஞ் செருப்படை.

செல்வங்கள்—(௩) தனம், தானியம், மக்கட் பேறு.

செல்வம்—(அ) அழகு, செல்வம், கல்வி, விவேகம், குணம், தனம் நற்குடிப் பிறப்பு, அகவை.

செவிக்கள்ளி வகை—(ச) ஆட்டுச் செவிக்கள்ளி, குதிரைச் செவிக்கள்ளி, மான் செவிக்கள்ளி, முயற் செவிக்கள்ளி.

செவ்வந்தி வகை—(ச) சிவப்புச் செவ்வந்தி, மஞ்சட் செவ்வந்தி, வெண் செவ்வந்தி, நீல வர்ணச் செவ்வந்தி.

# சே

சேட்படை—(உகூ)தழை கொண்டு சேறல், சந்தனத் தழைதகாதென்று மறுத்தல், நிலத்தின் தன்மை கூறி மறுத்தல், நினைவறிவு கூறி மறுத்தல், படைத்து மொழியான் மறுத்தல், நாணுரைத்து மறுத்தல், இசையாமை கூறிமறுத்தல், செவ்வியில ளென்று மறுத்தல், காப்புடைத் தென்றுமறுத்தல் நீயேகூறென்று மறுத்தல், குலமுறை கூறி மறுத்தல்,நகையாடிமறுத்தல்,இரக்கத் தொடு மறுத்தல், சிறப்பின்மை கூறி மறுத்தல், இளமை கூறி மறுத்தல், மறைத்தமை கூறி நகைத்தல், நகை கண்டு மகிழ்தல், அறியாள்போன்று நினைவு கேட்டல், அவயங்கூறல், கண்ணயந் துரைத்தல், தழை மொழியெதிர்தல், குறிப்பறிதல், குறிப்பறிந்து கூறல், வகுத்துரைத்தல், தழையேற்பித்தல், தழை விருப்புரைத்தல். (திரு-ர்)

சேம்பு—(ச) சேம்பு, கருஞ்சேம்பு சீமைச் சேம்பு, பேய்ச் சேம்பு.

சேரமன்னர்கள் வழிமுறை—(௩௦) எதுகுலச்சேரன், வம்சோத்தாரகசேரன், மநுமுறை நடந்த சேரன், வீரப்பிரதாப சேரன், விக்கிரமகேசரி சேரன், இரிபுகுலக்ஷய சேரன், சமரசார்த்தூல சேரன், புனனாடு கொண்ட சேரன், புலிக்கொடி பறித்த சேரன், எல்லை கரை கண்ட சேரன், இரசகம்பீர சேரன்,

முந்நில மணியிட்ட சேரன், முரசறைந்த சேரன், இராசமார்த் தாண்ட சேரன், இராசராசேசுவரசேரன், இராசப் பிரதாப சேரன், ஆறிலொரு கடமை கொண்ட சேரன், மும்மூர்த்தி சேரன், அநந்த குணச் சேரன் மதன வித்தாரச் சேரன், வரகுணோற் பாலச்சேரன், ஆச்சிரம நிலையிட்ட சேரன், அநுபூதிச் சேரன், அவிற்பாகச் சேரன், தியாக சமுத்திரச் சேரன், திருநீற்றுச் சேரன், மெய்ப் பொருள் கண்ட சேரன், பாணர்க்கு நிதிதந்தசேரன், பாஸ்கரபானு சேரன்' தெய்வ குஞ்சரச்சேரன், சிந்து வருண சேரன்.

சேர்வையணி—(௩) பொருளணிச் சேர்வை, சொல்லணிச்-சேர்வை, சொற்பொருளணிச் சேர்வை.

சேனுவெள்ளவகை— (௯) ஏகம், கோடி, சங்கம், விந்தம், குமுதம் பதுமம், நாடு, சமுத்திரம், வெள்ளம், இவற்றுள் அக்குரோணி யெட்டுப் பங்குகொண்டது ஏகம் அஃது எட்டுப்பங்கு கொண்டது கோடி, அஃது எட்டுப் பங்கு விந்தம், ஏனையவு மிங்ஙனேயொவ்வொன்றெட்டுப் பங்கு கொண்டன்வாம்.

சேனைத்தொகை—(௧0) பதாதி, சேனுமுகம், குமுதம், கணகம், வாகினி, பிரளயம், சமுத்திரம் சங்கம், அநிகம், அக்குரோணி, அவையாவன-யானை-௧,தேர்-௧ குதிரை-௩, காலாள்-௫, இவை கூடியது பதாதி, பதாதி மும்மடி கொண்டது, சேனுமுகம், சேனுமுகமும்மடி கொண்டது குமுதம், குமுதமும்மடிகணகம், கணகமும் மடிவாகினி, வாகினி மும்மடி பிரளயம்,பிரளயமும்மடி சமுத்திரம், சமுத்திரமும்மடி சங்கம், சங்கமும்மடி அநிகம், அநிக மும்மடி அக்குரோணி.

# சை

சைதன்னியம்—(௭) ஈசுவரன், சிவன், சுத்தம், பிரமாதா, பிரமாணம், பிரமேயம், பிரமா.

சைவ சமய குரவர்கள்—(௪) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர்.

சைவசித்தாந்தசாத்திரம்— (௧௪) சித்தாந்தசாத்திரம்(௧௪)காண்க.

சைவ பத்ததி செய்தோர்— (௧௮) தூர்வாசர், பைங்களசிவர், உக்கிரஜ்யோதி, ஸ்ரீகண்டர், விஷ்ணுகண்டர், சுபோதர், வித்யா கண்டர்,இராமகண்டர், ஞானசிவர், ஞானசங்கரர், சோமசம்பு, பிரமசம்பு, வருணசிவர், பிரசாதசிவர், இராமநாதசிவர், ஈசானசிவர்,திரிலோசனசிவர், அகோர சிவர்.

சைவமுத்திரைகள்—(௫) உருத்திராக்கம், கமண்டலம் காவி, சடை; தண்டு.

சைவம்—(௧௬) ஊர்த்தசைவம், அநாதிசைவம், ஆதிசைவம், மகாசைவம்,பேதசைவம், அபேதசைவம், அந்தரசைவம், குணசைவம், நிர்க்குணசைவம், அத்துவா சைவம், யோக சைவம், ஞான சைவம், அணு சைவம், கிரியாசைவம்,நாற்பாதசைவம், சுத்தசைவம்.

சைவர்—(௬) ஆதிசைவர், மகாசைவர், அனுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர், அந்தியசைவர், இவர்கள் சிவதீட்சை பெற்றுச் சிவனைவழிபடுவோர்.

சைவாகமச்சார்புநூல்கள்— (௮) தத்துவப்பிரகாசிகை, தத்துவசங்கிரகம், தத்துவத்திரயநிர்ணயம், போககாரிகை,மோக்ஷகாரி

கை, இரத்தினத்திரயம், இவை அட்டப்பிரகாணம் எனவும் பெயர் பெறும்.

சைவாதீனமடங்கள்— (கஅ) திருவாவடுதுறை, தருமபுரம், காஞ்சிபுரம், சூரியனுர் கோவில், செங்கோலாதீனம், ஆகமசிவப்பிரகாசாதீனம், திருஞானசம்பந்தராதீனம், திருவண்ணுமலையாதீனம் - இராமேச்வராதீனம், நீலப்பாடி, தாயுமானசுவாமிகளாதீனம், (அன்னப்பன்பேட்டை) சாரமாமுனிவர் ஆதீனம், திருச்சி, சொர்க்கபுர ஆதீனம், வேளாகுறிச்சி ஆதீனம், (திருவாரூர்) வள்ளலார் ஆதீனம், இருளஞ்சேரி ஆதீனம், வரணியாதீனம், (வேதாரணியம்) நாய்ச்சியார் கோயிலாதீனம், (குடந்தை) நிரம்பவழகியதேசிகர் ஆதீனம்.

சைனக்குலங்கள் -- (ரு) உக்கிரகுலம், இட்சுவாகுகுலம், அரிகுலம், குருகுலம், நாதகுலம்.

# சொ

சொப்பனம்— (ங) சொப்பன சாக்கிரம், சொப்பன சொப்பனம். சொப்பனசுழுத்தி.

சொல்— (ச) பெயர், வினை, இடை, உரி.

சொல்லணி— (உ) மடக்கு, சித்திரம்.

சொல்லிற்றேன்றும்பாவம்— (ச) பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல்.

சொல்லின்பாகுபாடு— (ஙு) உட்சொல், புறச்சொல், ஆகாயச்சொல்.

சொல்வகை-(க0) பெயரியற்சொல் பெயர்த்திரிசொல், வினையியற்சொல், வினைத்திரிசொல், இடையியற்சொல், இடைத்திரிசொல், உரியியற்சொல், உரித்திரிசொல், வடசொல், திசைச்சொல்.

சொற்பாகுபாடு— (ச) சுன்னம், சுரிதகம், வண்ணம், வரிதகம். சுன்னமாவது நான் கடியான் வருவது, சுரிதகமாவது எட்டடியான் வருவது, வண்ணமாவது நாலுன்கடியான்வருவது, வரிதகமாவது முப்பத்திரண்டடியான் வருவது.

# சோ

சோகங்கள்— (ங) புத்திரசோகம், பெண்சோகம், பிணிச்சோகம்.

சோடசதானம்— தானம் (கசு) காண்க.

சோடசோபசாரம்— உபசாரம்-(கசு) காண்க.

சோதிலிங்கங்கள்— (கஉ) சோமநாதலிங்கம், மல்லிகார்ச்சுனலிங்கம், மகாகாளலிங்கம், ஓங்காரலிங்கம், கேதாரலிங்கம், பீமசங்கரலிங்கம், விசுவேசுரலிங்கம், திரியம்பகலிங்கம், வைத்தியநாதலிங்கம், நாகேசுவரலிங்கம். இராமலிங்கம், குச்மேசலிங்கம்.

சோபைநோய்—(ச)வாதசோபை, பித்தசோபை, சிலேட்டுமசோபை, முக்குற்றசோபை.

சோமகீடம்— (கக) பேதம், விஸ்வம்பரம், பஞ்சசுக்லம், பஞ்சமக்குரோதம், சௌண்டிகம், சையகம், துலாகம், படம், கிடிபை, சடி, சூசிமுகம், கிருஷ்ணகோதம் அதப்பரம், காஷாயவாசி.

சோழர்கள்தலைநகர்—(ஐ)காவிரிப் பூம்பட்டினம், கருவூர், திருவாரூர், உறையூர், திருச்செய்ஞலூர்.

சோழர்வழிமுறை—(சஅ)தேஞர்ந்த சோழன், விசுவசேநசோழன், இந்திரவிமான சோழன், போக பத்திபுரந்தரசோழன், மனுகாதவன்லோகளித்தசோழன், மக்கஞ் சாளிவகுத்தசோழன், ஏதறிந்த சோழன், பெறலியுதித்தசோழன் நாககன்னிகை பிடித்தசோழன், தன்னுயிரில் மன்னுயிரளித்த சோழன், கங்கைகொண்டசோழன், காவிரிக்கரைகண்டசோழன் வில்லவன்கவி கண்டசோழன் புலைக்கண்ட, சோழன், கம்பஞர் கோவில்செம் பொன்னுல் வேய்ந்த சோழன், மறநாடு கொண்டசோழன், கங்காபுரி புரந்த சோழன், இலவத்தரை கொண்டசோழன், கயிலாய வாயிற்கசம் கண்ட சோழன், அரைத்தசையிந்தசோழன், கலிங்கன் கரைகண்ட சோழன், பூகாருண்ய சோழன், சேரத்துறந்த சோழன், சிலைக்கடிந்தசோழன், மறகளில் அக்கமாறித்திய சோழன், அனத்தீக்குறு கொண்ட சோழன், அபயங்கரசோழன், விக்கிரம சோழன், ஏகசக்கிராதிய சோழன், பிராததக்கசோழன், குலோத்துங்கசோழன், இராஜேந்திர சோழன், சேயுருக்கொண்ட சோழன், கருவன்னஞ்சுரியிட்ட சோழன், வரகுணசோழன், திருநீற்றுச்சோழன், வீரசோழன், வசுதேவ சோழன். விட்டசிறைச் சோழன், ஆறிலொரு கடமை கொண்ட சோழன். மனுநெறி தறித்த சோழன், வருணநிலையிட்ட சோழன், திண்வசத்த சோழன், தாசைமுத்திரசோழன், சம்பிரதாயசோழன், நித்யோத்சவசோழன், கரிகாலச்சோழன்.

சோளவகை—(ஃ) வெண்சோளம் சிவப்புச்சோளம், மஞ்சட்சோளம், காக்காச்சோளம், இறுங்குச்சோளம், பேய்ச்சோளம்.

சோற்றில்தோஷங்கள் —(அ) அஸ்திரிதம், பிச்சளம், அசுசி, குவதிதம் சுஷ்மிதம், தக்தம், விரூபம், அநர்த்துவம்.

# ஞு

ஞுஞ்ஞையுற்றேனவிநயம் —(எ) பற்களைமென்றல், இறுக்கப்பட்ட நாவழிவுடைமை, நுரை சேர்ந்து கூம்பும் வாயுடைமை, பார்த்தவர்க்குரைப்பவன்போல அறிவிலாமை, விழிப்போன் போலவிழியாதிருத்தல், விழுத்தக வொழுக்கிலாமை, பிரகாசிக்க முகம் வாடிப்போதல்.

# ஞா

ஞானசதுட்டயம் —(ச) நித்தியாநித்தியவஸ்துவிவேகம், இகமுத்திரார்த்தபலபோகவிராகம், சமாதிசட்கசம்பத்து, முமூட்சுத்துவம்.

ஞானசாதனம்—(கக) விவேகம், வைராக்கியம், சட்சம்பத்தி, முமூட்சுத்துவம், ஆசிரியர்வழிபாடு, சிரவணம், தத்துவஞானப்பியாசம், மனனம், நிதித்தியாசனம், மனோநாசம், வாசனுட்சயம்.

ஞானபூமிகள்—(எ) சுபேட்சை. சுவிசாரணை, தநுமாநசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தபாவினி, துரியம்.

ஞானப்பிரதிபந்தம்—(ச) விடயாசத்தி, புத்திமந்தத்தன்மை குதர்க்கம், விபரீததுராக்கிரகம்

ஞானம்—(௩) ஞானம், வைராக்கியம், உபரதி.

ஞானம்—(௪) கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை.

ஞானம்—(௨) அபரஞானம், பரஞானம்

ஞானவகை—(௪) கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல், இவற்றுள்கேட்டல், ஞானத்திற் கிரியை, சிந்தித்தல், தெளிதல் ஞானத்தில் யோகம் நிட்டைகூடல், ஞானத்தின்-ஞானம், பரோட்ச ஞானம், அபரோட்ச ஞானம் என்ப. பிறவற்றை ஞானநூல்களிற் காண்க.

ஞானேந்திரியங்கள்—(௫) சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை கிராணம்.

ஞானேந்திரியகாரியங்கள்—(௫) சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம்.

# த

தகரைவகை—(௫) தகரை, ஊசித்தகரை, கருந்தகரை, செந்தகரை, புளித்தகரை.

தகுதிவழக்கு—(௩) இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி.

தக்காளிவகை—(௫) மிளகுதக்காளி, கருமிளகுத்தக்காளி, பெருந்தக்காளி, மணித்தக்காளி, சீமைத்தக்காளி.

தசகாரியங்கள்—(௧௦) தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம்.

தசநாடி—நாடி (ம) காண்க.

தசப்பொருத்தம்-செய்யுட்பொருத்தம் (ம) மணப்பொருத்தம்-(ம) காண்க.

தசமூலம்—மூலம் (ம) காண்க.

தசவாயு—வாயு (ம) காண்க.

தசாங்கம்—அங்கம் (ம) காண்க

தசோபசாரம்—(ம) ஆவாகநம், தாபநம், சந்நிதாநம், சந்நிரோதநம், அவகுண்டநம், தேநுமுத்திரை, பாத்தியம், ஆசமநீயம், அருக்கியம், புட்பதாநம், இவை உற்சவாதியிலே செய்யப்படும் உபசாரங்களுளொன்று.

தண்ணீர்வகை—(௧௫) மழைநீர், ஆற்றுநீர், ஆலங்கட்டிநீர், பனிநீர், குளத்துநீர், ஏரிநீர், கிணற்றுநீர், ஓடைநீர், சுனைநீர், ஊற்றுநீர், பாறைநீர், அருவிநீர், அடவிநீர், உப்புநீர், கடல்நீர்.

தத்துவங்கள்—(௩௬) மண், நீர், நெருப்பு, காற்று, விண், கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம், உபஸ்தம், பாயுரு, பாணி, பாதம் வாக்கு, ஆக்கிராணம், சிங்குவை சட்சு, துவக்கு, சோத்திரம், சித்தம், மனம், அகங்காரம், அறிவு, புருடன், ராகம், வித்தை, நியதி காலம், கலை, மாயை, சுத்தவித்தை, ஈச்சுரம், சதாக்கியம், சத்தி, சிவம்.

தத்துவம்—(௩) ஆத்துமதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம், தத்துவத்திரய மென்பதுமிஃதே.

தத்துவம்—(௫) காலம், நியதி, கலை வித்தை, அராகம், காரண தத்துவம் என்பதுமிதுவே.

தத்துவம்—(௯௬) ஆன்மதத்துவம்-௩௬, நாடி ம, அவத்தை-௫, மலம்-௩, குணம்-௩, மண்டலம்-௩, பிணி-௩, விகாரம்-௮, ஆதாரம்-௬, தாது-எ, வாயு-ம

கோசம்-ரு, வாயில்-சு, இவற்றுளான்மதத்துவமாவன பூதம்-ரு புலன்-ரு, ஞானேந்திரியம்-ரு, கருமேந்திரியம்-ரு-, கரணம்-௪ இவைதத்தம் விரியிற் காண்க.

தந்திரங்கள்—(ரு) அசம்பிரேட்சியகாரித்துவம், அர்த்தநாசம் சந்திவிக்கிரகம், சுகிர்லாபம் மித்திரபேதம்.

தந்தையர்—(ரு) பிறப்பித்தோன், கற்பித்தோன், மணமுடிப்பித்தோன், அன்னந்தந்தோன், ஆபத்துக்குதவினோன்.

தமிழ்—(உ) செந்தமிழ், கொடுந்தமிழ்.

தமிழ்—(௩) இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ்.

தமிழ்எல்லை—(௪) கீழ்கடல், மேல்கடல், தென்குமரி, வடவேங்கடம்.

தமிழ்நாடு—(க௩) செந்தமிழ் நாடொன்று. இதற்கெல்லை கருவூரின் கிழக்கு மருவூரின் மேற்கு வைகையாற்றின் தெற்கு மருதயாற்றின்வடக்கு, இதனைச் சூழ்ந்த கொடுந் தமிழ்நாடு-கஉ- தென்பாண்டி குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அருவாவடதலை, சீதம், மலாடு, புனனாடு.

தமோமயசிருட்டி —(ரு)— தமம், மோகம், மகாமோகம், தாமிச்சிரம், பந்தாமிச்சிரம்

தம்பனமூலிகை — (அ) கட்டுக்கொடி, பாற்புரண்டி, பரட்டைச்செடி, நீர்முள்ளி, நத்தைச்சூரி, சத்திச்சாரணை, பூமிச்சருக்கரைக்கிழங்கு, குதிரைவாலி.

தயாவிருத்தி(அ)பிறர்க்குப்பொருள் வரவையுவத்தல், பிறர் செல்வம் பொறுத்தல், பிறர் கருமத்திற்குடன்படல், தீமைக்கஞ்சல், பிறர் கருமமுடிக்கவிரைதல், பிறரையந்தீர்த்தல், நன்மை கடைப்பிடித்தல். பிறர்துயர்க்கிரங்கல்.

தயாவிருத்தி—(கச) களாபடனம், வியாதாகாரம், நிர்க்கத்தண்டனம், சந்தேகவாரணம், அன்னியகுண சகனம், பரதிருதூணயோகம், பார்த்ததேவப்பிராத்திதம், அவையாவன,-முறையே கல்வி பயிற்றல், துயர்தீர்த்தல், தண்டத்தினீக்கல், ஐயந் தேற்றல், பிறர்குணத்தழுக்கா றன்றிப் பொறுத்தல், பிறராற் செய்யப்படுந் தீமை மறந்து நன்றி நினைத்தல், பிறர்க்கு வேண்டித் தெய்வம் வழிபடல். இவையுயிர்க்கேழுபகாரம். அன்றியும் சத்தாங்கோபகாரம் - அன்னம், பானம், அம்பரம், மந்திரம், தாசபாலனம், காராமயத்திரிவய மோசனம், சவச்சேமம், அவை முறையே உணவு, பானம் உடை, இடம், அடிமை, காத்தல், சிறைநோய் மூன்றுந் தீர்த்தல், பிணமடக்கல் இவையுடற்கேழுபகாரம்.

தரங்கள்—(௩) முதல்தரம் இடைத்தரம், கடைத்தரம்.

தராபதிநிலை—(எ) அறம், பொருள் இன்பம், இம்மை, மறுமை, புகழ், மதிப்பு

தரிசனாவரணீயம்—(௯) சக்ஷுதரிசனாவரணீயம் அசக்ஷுதரிசனாவரணீயம், அவதிதரிசனாவரணீயம், கேவலதரிசனாவரணீயம், நித்ராதரிசனாவரணீயம், பிரசலாதரிசனாவரணீயம், நித்திரா நித்ரா தரிசனாவரணீயம், பிரசலா பிரசலா தரிசனாவரணீயம், ஸ்தியானகிரந்தி தரிசனாவரணீயம்,

தரு—(ரு) அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம்.

தருமநூல்—(கஅ) மநு, அத்திரி, ஔரிதம், விட்டுணு, யாஞ்ஞவர்

கியம், உசனம், ஆங்கீரசம், யமம், ஆபத்தம்பம், சமவர்த்தம் காத்தியாயனம்,பிரகற்பதி,பராசரம், வியாசம், சங்கலிதம், தக்கம் கௌதமம், சாதன்மம், வசிட்டம், இவற்றுட் சங்கிலிதம், பொது இவற்றுள் கிருதயுகத்தில், மநுஸ்மிருதியும் திரேதாயுகத்திற் கௌதமஸ் மிருதியும் துவாபரயுகத்திற் சங்கலிதஸ் மிருதியும் கலியுகத்திற் பராசரஸ்மிருதியு முக்கியமாயிருக்கும்.

தருமவகை— (உ) சிவதருமம் பரதருமம்.

தலையற்றநாள்— (ங) புனர்பூசம் விசாகம், பூரட்டாதி.

தலைவள்ளல்— (எ) சகரன், காரி, நளன், துந்துமாரி, நிருதி, செம்பியன், விராடன்.

தளை— (எ) நேரொன்றுசிரியத்தளை, நிரையொன்றுசிரியத்தளை வெண்சீர்வெண்டளை, இயற்சீர் வெண்டளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்ருவஞ்சித்தளை, கலித்தளை.

தற்கிழமை— (ஞ) பண்புத்தற்கிழமை, உறுப்புத்தற்கிழமை, ஒன்றன்கூட்டத்தற்கிழமை, பலவினீட்டத்தற்கிழமை, ஒன்று விகாரப்பட்டு மற்றொன்ருயதற்கிழமை.

தற்குறிப்பணிகள்— (சா) விரிபுலப் பொருட்டற்குறிப்பு, தொகுபுலப் பொருட்டற்குறிப்பு, உளபுலவேதுத்தற்குறிப்பு, இயல்புலவேதுத்தற்குறிப்பு. உளபுலப்பயன்றற்குறிப்பு, இல்புலப்பயன்றற்குறிப்பு.

தற்குறிப்பேற்றவணி— (உ) பெயர்பொருள் தற்குறிப்பேற்றம், பெயராதபொருள் தற்குறிப்பேற்றம்.

தன்மாத்திரை— (ஞ) சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்.

தன்மையணியின்வகை — (ச) பொருட்டன்மை, குணத்தன்மை, சாதித்தன்மை, தொழில் தன்மை.

# தா

தாடனம்— (அ) சங்கோசம், பக்கத்தம், பிரசுரிதம், முட்டி, கீலம், கர்த்தரிகை, சந்தங்கிசம், வித்தை.

தாண்டவம்—(ஞ) அற்புதத்தாண்டவம், அனவரதத் தாண்டவம், ஆனந்தத் தாண்டவம், பிரளய தாண்டவம், சங்காரதாண்டவம்.

தாதாத்மியம்— (ங) பிரமசதாதாத்மியம், சகசதாதாத்மியம், கர்மசதாதாத்மியம்.

தாது— (எ) இரதம். இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல்.

தாதுவின்பேதம் — (எ) ரசதாது ரத்ததாது, மாமிசதாது, மேதோதாது, அஸ்திதாது, மச்சதாது, சுக்கிலதாது.

தாபங்கள்— (ங) ஆத்தியான்மீகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம். இவையே தாபத்திரய மெனப்படும்.

தாமசபாவங்கள் — (ங) அதர்மம், அஞ்ஞானம், அநைசுவரியம்.

தாமதகுணசித்தி(அ) ஆகருடணம், அதிரிசியம், அஞ்சனம், வசியம், இரசவாதம், வயத்தம்பம், தம்பனம், மோகனம், இவற்றுள் தூரத்திலிருக்கும் பொருளைச் சமீபத்தில் வருவிப்பது ஆகருடணம், காணப்படும் பொருள்களைக் காணுமற் செய்விப்பது அதிரிசியம், காணப்படாமல் இருக்கும் பொருள்களை

நேரேகாணும்படி காட்டுவிப்பது அஞ்சனம், பகைவரையும் உறவாக்கிக்கொள்வது வசியம், செம்பு,பித்தளை,முதலிய உலோகங்களை மாற்றுயர்ந்த உலோகமாக்கிக்கொள்வது இரசவாதம், பாலியரை விருத்தர்கள் ஆகவும் விருத்தர்களைப் பாலியர்கள் ஆகவுஞ் செய்வது வயத்தம்பம், கட்டுப்படாதவற்றையுங் கட்டுக்குள்ளாகப்படுத்துவது தம்பனம், தன்னையாவரும் மோகிக்கச் செய்வது மோகனம்.

தாமதகுணம்— (கூ) பேருண்டி, நீதிகேடு. உறக்கம், மறதி, பொய், சோம்பு, ஒழுக்கம், வழுவுதல், கொலை, வஞ்சம்.

தாமரைவகை—(அ) செந்தாமரை, வெண்தாமரை, மேகநிறத்தாமரை, ஓரிலைத்தாமரை, கடற்றுமரை, கல்தாமரை, குளிர்த்தாமரை, நீர்க்குளிர்த்தாமரை.

தாயார்—(கு) பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய், பிங்கலநிகண்டில் பாராட்டுந்தாயை விடுத்து ஈன்றதாயென்பர், அலரியுமரசன்றேவி, குருவின்றேவி, அண்ணன்றேவி, தன்றேவியையீன்றாள், தன்னையீன்றாள்.

தாரணை—(கூ) நாமதாரணை, வச்சிரதாரணை, மாயாதாரணை, சித்திரதாரணை, செய்யுட்டாரணை, நிறைவு குறைவாகிய வெண்பொருட்டாரணை, சத்ததாரணை, வத்துதாரணை,சதுரங்கதாரணை.

தாழைவகை—(கூ) தாழை, செந்தாழை,மஞ்சள்தாழை, அனுசித்தாழை, கடல்தாழை, தழுதாழை.

தாழ்வுகள்—(ங) தன்னால் வருந்தாழ்வு, மனைவியால் வருந்தாழ்வு, பிறரால் வருந்தாழ்வு.

தாளம் — (ரு) சச்சற்புடம், சாசற்புடம், சட்பிதாபுத்திரிகம், சம்பத்துவேட்டம், உற்கடிதம், இவற்றுட் சச்சற்புடமாவது குரு உ – இலகு – க, புலுதம் - க, ம ம I மி ஆக மாத்திரை - அ, இஃதீசன் சத்தியோசாத முகத்திற்பிறந்தது பிரமமசாதி; சாசற்புடமாவது குரு - க, இலகு - உ, குரு - க, ம I I ம ஆகமாத்திரை - ௬, இஃதீசன் வாமமுகத்திற் பிறந்தது அரசசாதி; சட்பிதா புத்திரிகமாவது புலுதம்- க, இலகு - க - குரு - உ, இலகு-க, புலுதம் - க, மி I ம ம I மி ஆக மாத்திரை - கஉ. இஃதீசன் கோர முகத்திற் பிறந்தது வைசியாசாதி, சம்பத்து வேட்டமாவது புலுதம் - க, குரு - உ, புலுதம் - க, ம ம ம மி மி, ஆக மாத்திரை கஉ, இஃதீசன்றற்புருட முகத்திற் பிறந்தது வேளாளசாதி, உற்கடிதமாவது குரு ௩ மமம, ஆகமாத்திரை-௬, இஃதீசன் முகத்திற் பிறந்தது சங்கிரமசாதி.

தாளம்—(கூ)— அரிதாளம், அருமதாளம், சமதாளம், சயதாளம், சித்திரதாளம், துருவதாளம், நிவிர்ததாளம், படிமதாளம், விடதாளம் இவையே நவசந்திதாளம்.

தாளப்பகுதி — (ச) — கொட்டு. அசை, தூக்கு, அளவு, என்னை? 'கொட்டுமசையுந் -தூக்குமளவுமொட்டப் புணர்ப்பது பாணியாகும்' என்றாராகலின், அவற்றுள் கொட்டென்பது அரைமாத்திரை வடிவு - க; அசையென்பது ஒருமாத்திரை வடிவு - எ; தூக்கென்பது இரண்டு மாத்திரைவடிவு - உ; அளவென்பது மூன்று மாத்திரை வடிவு - ஃ;.

என்னை? "ககரங்கொட்டே யெகரமசையே - யுகரந்தூக்கே யளவேயாய்தம்" என்றாராகலின், கொட்டாவது அமுக்குதல் அசையாவதுதாக்கி யெழுதல், தூக்காவது தாக்கித் தூக்குதல், அளவாவது தாக்கிய வோசை நேரே நின்று மூன்று மாத்திரை பெறுமளவும் வருதல் எனக் கொள்க. அவை சச்சபுட முதலான பஞ்சதாளமும், அரை மாத்திரையுடைய ஏகதாள முதலாகப் பதினாறு மாத்திரை யுடைய, பார்வதி லோசன மீருகச் சொன்ன நாற்பத்தொரு தாளமும் ஆறன் மட்டம், எட்டன் மட்டம் என்பனவும் தாள வொரியல், தனிநிலை யொரியல் என்பனவும் ஒன்றன்பாணி முதலாக எண் கூத்துப்பாணியிறுதி யாகக் கிடந்த பதினொரு பாணி விகற்பங்களும், முதனடை வாரம் முதலாயினவும் இறுதி யாகக் கொள்க

தாளப்பகுதி —(எ)-- துருவம், மட்டியம், உருபகம், சம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம், இவற்றுள், துருவத்திற்குஇலகு-க, குரு - க துரிதம் - க, ம I ୦ இதற்குச் சுரம் சரிகம, கரிசரி, கரிசரிகம; மட்டியத்திற்கு இலகு-க, துரிதம்-க, இலகு-க, I ୦ I இதற்குச் சுரம், சரிகரி, சரி, சரிகம; உருபகத்திற்கு இலகு - க, துரிதம்- க, I ୦ இதற்குச் சுரம் சரிசரிகம; சம்பைக்கு இலகு - க, அநுதுரிதம்-க, துரிதம்-க, I,ሀ୦, இதற்குச் சுரம், ச, ரிக, சரி, சரி, கம; திரிபுடைக்கு, துரிதம் உ, அநுதுரிதம்-க,୦୦୦ሀ இதற்குச்சுரம் சரிகசரிகம; அடதாளத்திற்கு இலகு-க, துரிதம்-உ, இலகு-க, I୦୦I இதற்குச் சுரம் சரிகா, சாரிகா, மா, மா, ஏகதாளத்திற்கு இலகு-க, இதற்குச் சுரம், சரிகம; சம்பைக்குப் பிரமசாதி தவிர நான்கு சாதியுமுள, திரிபுடைக்கு மூன்று விராமமுமோரநு துரிதமுமாறு லொரேசாதி, இலகுவிருந்தாலைந்து சாதியுமுள, மற்றையைந்துதாளங்கட்குமைந்துசாதியுமுள, அவற்றையவ்வவசாதியேகதாளலகு, அக்கரங்களாலறியுமாறு,பிரமசாதியிலகுவிற்கு நான்கக்கரகாலம், அரசசாதியிலகுவிற்கு மூன்றக்கரகாலம், ஆறக்கரகாலமுமென்ப, வைசிய சாதி யிலகுவிற் சேழக்கரகாலம், சூத்திரசாதி யிலகுவிற் கைந்தக்கரகாலம், சங்கிரமசாதியிலகுவிற் கொன் பதக்கர காலம், எச்சாதியிலு மநுதுரிதமோ ரக்கர காலமுந் துரித மிரண்டக்கர காலமுமாம்.

தாளப்பிரமாணம் —(ய)— காலம், மார்க்கம், கிரியை, அங்கம், கிரகம், சாதி, கலை, இலயையதி, பிரததாரம், இவையே தாள தசப் பிரமாணமென்ப; இவற்றுட் காலப் பிரமாணம் -க௦- அவையாவன - கணம்,இலவம், காட்டை, நிமிடம், துடி,துரிதம், இலகு, குரு, புலுதம்,காகபதம்- இவற்றுட் கணம் தாமரை யிதழ் நூறடுக்கிய திலோரிதழிலூசி செலுத்துங்காலம், கணமெட்டுக் கொண்ட திலவம், இலவமெட்டுக்கொண்டது காட்டை, காட்டை யெட்டுக்கொண்டது நிமிடம், நிமிடமெட்டுக் கொண்டது துடி, துடியிரண்டுகொண்டது துரிதம் துரிதமிரண்டு கொண்டது லகு, இலகுஇரண்டு கொண்டது குரு, இலகு மூன்று கொண்டது புலுதம், குரு இரண்டு கொண்டது காகபதம். மார்க்கம்-சு-தக்கணம், வார்த்திகம், சித்திரம், சித்திரதரம் அர்த்தசித்திரம், அதிசித்திரம் இவற்றுள் எட்டுமாத்திரையோர் கலை யாகக் கொண்டது தக்கணம், நான்கு மாத்திரையோர் கலையாகக் கொண்டது வார்த்தி

கம், இரண்டு மாத்திரையோர் களையாகக் கொண்டது சித்திரம், ஒருமாத்திரை யோர்களை யாகக் கொண்டது சித்திரதரம். அரை மாத்திரையோர்களையா கக் கொண்டது அர்த்தசித்திரம், கான் மாத்திரையோர் களையா கக் கொண்டது அதி சித்திரம்; நொடியளவு மாத்திரை கிரியை-உ-மார்க்கம்,தேசிகம்,இவற்றுண் மார்க்கம்-அ, இவற்றுள் நிசத்தம் ச,சசத்தம்ச, நிசத்தமாவது-ஆ வாபம்' நிட்கிராமம், விட்சேபம், பிரவேசம், சசத்தமாவது-துரு வம், சம்மியம், தாளம், சன்னி பாதம்; தேசிகம்-அ-துருவகம், சர்ப்பிணி, கிருடியை, பதுமினி, விசர்ச்சிதை, விட்சிப்தம். பதாகை, பதிதம், இவற்றி னிலக்கியங்களை நூலானு ணர்க. அங்கம்-சு, அவையா வன,‿௦ம்ரீ' இவைமுறையே. பிறை, மதி, கணைவில், பாம்பு புள்ளடி, முறையே யிவற்றின் பெயர்-அநுதுரிதம். துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம் இவற்றினுற்பத்திகளும், பரியாய நாமங்களும், வன்னங்களும், அதிதேவதைகளும், மாத்திரை களும், அத்தாங்குலப் பிரமா ணங்களும், காதைப் பிரமாணங் களும் நூலாலுணர்க. கிரகம்-ச, அதீதம். அநாகதம், சமம். விட மம், இவற்றுட் குரன் முன்னுந் தாளம்பின்னும்வருவ வததீதம்,-தாளம் முன்னும் குரல் பின்னும் வருவது அநாகதம்-குரலுந் தாளமு மொத்துவரிற் சமம், குர லுந்தாளமு முன்னும் பின்னுங் கலந்து வருவது விடமம்; சாதி-ரு-சதுரசிரம், திரிசிரம், மிசிரம், கண்டம், சங்கீரணம் இவை முறையே பிரமவரச வைசிய சூத்திர சங்கிரமம், இவற்றை முற்கூறிய விலகு அக்கரகாலங் களாலறிவது. களை-ச-ஏககளை, துவிகளை, சதுர்க்களை இவற் றுளக் கரகாலமாயுங் கிரியை யோடும்வருவது ஏககளை,இதனை யிரட்டித்துக் கிரியையோடு வரு வது-துவிகளை, இதனையிரட்டித் துக் கிரியையோடு வருவது-சதுர்க்களை - இலயம்-ந-விளம் பம், மத்திமம், துரிதம், இவற்று ளக்கரகாலமாய்க் கிரியையோடு வருவது விளம்பம், இதனை இரட்டித்து வருவது-மத்தி பம், இதனையிரட்டித்துக் கிரியை யோடு வருவது-துரிதம், யதி-சு-சமம், விடமம்' மிருலங்கம், வேத மத்தியம், கோபுறலம்,சுரோதோ வகம், இவற்றுள் நொடங்கமாயி னுங் குற்றங்கமாயினும் ஒரே விதமாய் வருவது சமயதி, ௦௦II எல்லா வங்கமுங் கிரமமின்றிக் கலந்துவருவது விடமயதி, ம‿௦ முதலிலுங் கடையிலுங் குற்றங் கமு மிடையினெட்டங்கமும் வரு வது மிருதங்கயதி, ‿௦மப முதலி லுங்கடையிலு நெட்டங்கமு மிடையிற் குற்றங்கமும் வருவது வேத மத்தியதி, II,- முதலிலே நெட்டங்கமு மீற்றிலே குற்றங் கமுமாய் நேர்ந்து வருவது கோ புச்சயதி,மI௦‿முதலிலேகுற்றங் கமு மீற்றிலே நெட்டங்கமுமாய் வருவதுசுரோதோவகம்,-‿௦மம மற்றையவிலக்கணத்தாற் கண்டுணர்க.

தாளவகை — (ந) கைத்தாளம், பிரமதாளம், சில்லரித்தாளம்.

தாளிவகை.— (ரு) தாளி, கருந் தாளி, விடதாளி, பெருந்தாளி, தேவதாளி.

தானம்-ந- தலைப்படுதானம் இடைப்படுதானம், கடைப்படு தானம். அவை அறத்தானீட் டிய பொருளை முக்குற்றமற்ற நற் றவத்தோரைக் கொள்கெனப் பணிந்து ருறையிரந்து தம்முள்ள முவந்தீதல் தலைப்படுதானம், ஆதுலர், குருடர், மாதர் முதற் பிறர் சிறுமையைப்பற்றி மன மிரங்கி யீவதிடைப் படுதானம்;

புகழார்வங் கைமாறச்சங் கண்ணோட்டங் காரணங்கடைப்பாடிவற்றைப்பற்றி யீவது கடைப்படுதானம்.

தானம்-(ω)-உப்பு, எள், நெய், நெல், பசு, பூமி, பொன், வத்திரம், வெல்லம், வெள்ளி.

தானவகை(உ௬) துலாபுருடதானம், இரணியகருப்பதானம், பிரமாண்டதானம், இரணியகற்பதானம், அட்டோத்தர சகசிர கோதானம், இரணியவிடபதானம், இரணியா சுவாதானம், இரணிய கன்னிகா தானம், திக்குப்பாலக தானம், சுவர்ணரததானம், பஞ்சலாங்கலதானம், சுவர்ண பூதானம், கற்பகலதாதானம், இரணிய சத்தசாகரதானம், இரத்தினதேனுதானம், சுவர்ண கும்பதானம், சுவர்ண கணபதிதானம், விஷ்ணுவிம்பதானம், திலபதுமதானம், திலபருவததானம், திலதேனுதானம், இலக்குமிதானம், அன்னதானம், வித்தியாதானம், திலதானம்.

தானவர் — (௩௩) அசோமுகன், அந்தகன், அடிதானவன், அருணி, அரிட்டன், அறுதாபகன், இல்வலன், ஏகசக்ரன், கபிலன், புலோமன், சம்பரன், திவிமூர்த்தனன், அயக்கிரீவன், சங்கசிரன், விபாவசு, விருடபர்வன், விப்பிரசித்தி, வாதாபி, சுவர்ப்பானன், நமுசி, வக்தரயோதி, காலநாபன், திரியம்சன், சல்யன், நபன், நரகன், புலோமன் தாம்ரகேது கச்ருமன், விருபாட்சன், துர்ச்சயன், வைஸ்வானரன், தாரகன்.

ானை — ௬ — தேர், கரி, பரி, வாள், வில், வேல்.

# தி

திக்கு—(அ—)கிழக்குதென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு இவையே யட்டதிக்கு.

திக்கு (ω) — மேற்சொன்னவையன்றி மேலுங்கீழுங் கூட்டித் தசதிசையென்ப. கிழக்குக் கருடதிசை, தென்கிழக்குப் பூனைத்திசை, தெற்குச் சிங்கத்திசை, தென்மேற்குச் சுனகதிசை, மேற்கு நாகத்திசை, வடமேற் கெலித்திசை, வடக்கு யானைத்திசை, வடகிழக்கு முயற்றிசை, மேல் விசும்புத்திசை, கீழ் பாதாள திசை.

திக்குநாகம் (அ) —அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன்.

திக்குப்பாலகர்(அ)கிழக்காதி முறையே இந்திரன், அக்கினி யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், இவர்க்கு முறையே குறிகளாவன,-கொடி, புகைசியம், நாய், இடபம், கழுதை, யானை, காகம், இவையெண்டிசை யோனி என்ப.

திக்குப்பாலகர் ஆயுதங்கள்.(அ)வச்சிராயுதம், சத்தாயுதம், சூலாயுதம், கந்தாயுதம், பாலாயுதம், தாசாயுதம். கட்காயுதம், சந்திராயுதம்.

திக்குப்பாலகர்ஊர்தி- (அ) வெள்ளையானை, ஆட்டுக்கடா, எருமைக்கடா, தண்டிகை, முதலை, கலை, அசுவம், இடபம்.

திக்குப்பாலகர்குறி- (அ) இடி, புகைசியம் ஞாளி, இடபம், கழுதை, யானைகாகம்.

திக்குப்பாலகர்தேவிமார்-(அ) இந்திராணி, சுவாகை, காளி, தீர்க்கை, சாமனி, அஞ்சனை, சித்திரை, பார்ப்பதி.

திக்குயானைகள் (அ) கிழக்காதி முறையே, ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபௌமம், சுப்ரதீபம், இவையே அட்டதிக்கயம். இவற்றிற்கு முறையே பிடியானைகளாவன- அப்பிரமை, கபிலை, பிங்களை, அநுபமை, தாமிரபருணி, சுதந்தி, அஞ்சனை, அஞ்சனவதி.

திணை (உ) உயர்திணை, அஃறிணை, இவற்றுள் உயர்திணைமக்களுந் தேவரும் நரகருமாம். அஃறிணை மற்ற வுயிருள்ளனவு மில்லனவு மாகிய யாவுமாம்.

திணை (ரு) குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், இவற்றுள் மலைச்சார்பு குறிஞ்சி, நீரில்லாக் கடுநிலம் பாலை, காட்டுச்சார்பு முல்லை, வயற்சார்புமருதம், கடற்சார்பு நெய்தல்.

திணை (கஉ) வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண்டிணை, பொது, கைக்கிளை, பெருந்திணை.

திணைவகை (உ) அகத்திணை, புறத்திணை, இவற்றுள், அகத்திணையாவது கைக்கிளைத்திணை, முல்லைத்திணை, குறிஞ்சித்திணை, மருதத்திணை, நெய்தற்றிணை, பாலைத்திணை, பெருந்திணை, யென்னுமேழுமாம்; புறத்திணை யாவது வெட்சி, வாகை, வஞ்சி, உழிஞை, தும்பை, காஞ்சி, பாடாண்டிணை யென்னு மேழுமாம்.

திதி (கரு) பிரதமை - க, துவிதியை - உ, திரிதியை - ௩, சதுர்த்தி-௪, பஞ்சமி-ரு, சட்டி-சு, சத்தமி-எ, அட்டமி-அ, நவமி-கூ, தசமி-க0, ஏகாதசி-கக, துவாதசி-கஉ, திரயோதசி-க௩, சதுர்த்தசி-க௪, இவற்றிற் சுக்கில பக்கத்திற் சுத்தமென்றுங் கிருட்டின பக்கத்திற் பகுளமென்றுங் கூட்டுக; பதினைந்தாந் திதியாவது சுக்கிலபக்கத்திற்குப் பௌர்ணமி, கிருட்டிண பக்கத்திற்கு அமாவாசியை. சுக்கில பக்ஷம் சிநிவாலி என்றும், கிருஷ்ணபக்ஷம் குரு என்றும் பெயர் பெறும். இவற்றுள் பிரதமை, சஷ்டி, ஏகாதசி மூன்றும் நந்தையெனப்படும். துவிதியை, சப்தமி, துவாதசி மூன்றும் பத்திரையெனப்படும். திரிதியை, அஷ்டமி, திரயோதசி மூன்றும் சயையெனப்படும். சதுர்த்தி, நவமி, சதுர்த்தசி மூன்றும் இருத்தையெனப்படும். பஞ்சமி, தசமி, பௌர்ணமி மூன்றும் பூரணையெனப்படும். இவற்றுள் நந்தையும், பத்திரையும் சுபகாரியங்கள் செய்ய ஆகா.

திப்பிலிமூலம் — திப்பிலி, திப்பிலிமூலம் யானைத்திப்பிலி.

தியானம்— (௩) கடவுட்டியானம், மந்திரத்தியானம், கல்வித் தியானம்.

திரவிடம்-(ரு) திரவிடம், ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம்.

திரவியம்—(ரு) ஏலம், இலவங்கம் அதிமதுரம், கோஷ்டம், சண்பக மொட்டு இவை பஞ்சதிரவியமெனப்படும்.

திரவியங்கள்— (கூ) பிரிதிவி, சலம், அக்கினி, வாயு, ஆகாசம், காலம், திக்கு ஆத்மா, மனம்.

திரவியம் (ரு) மலைபடுதிரவியம், காடுபடுதிரவியம், நாடுபடு திரவியம், நகர்படுதிரவியம், கடல்

படுதிரவியம்; இவற்றுள் மலைபடு திரவியம் - மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம். காடுபடுதிரவியம்- இருல் தேன், அரக்கு, மயிற்பீலி, நாவி, நீர் படுதிரவியம்செந்நெல்,சிறுபயறு கரும்பு, வாழை, செவ்விளநீர். நகர்படுதிரவியம்-அரசன், பித்தன், மந்தி, யானை, கண்ணுடி. கடல்படுதிரவியம்-உப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்கோலே.

திரிதரவில்லாவிருக்கை (அ) பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தணிப்புடம், மண்டிலம், ஏகபாதம்.

திருக்குறளின் உரையாசிரியர்கள்- (௧0) தருமர், மணக்குடவர், தாமத்தர் பரிதி, திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், நச்சர், காளிங்கர், பரிமேலழகர்.

திருக்குறளின் பெயர்கள் — (௧௨) திருக்குறள், முப்பால், பொய்யாமொழி, வாயுறைவாழ்த்து, உத்தரவேதம், தெய்வநூல், திருவள்ளுவர், தமிழ்மறை, பொதுமறை, திருவள்ளுவப் பயன் பொருளுரை, முதுமொழி.

திருட்டாந்தப்போலி— (௧அ) சாத்திய விகலன், சாதகவிகலன், உபயவிகலன், ஆச்ரயவிகலன், அவ்யாப்தியபிதானன், விபரீதவியாத்தியபிதானன்; சாதனவியாவிருத்தன், சாத்தியாவியாவிருத்தன், உபயவியா விருத்தன், ஆச்ரயவிரத்தீனன், வியாவிருத்தியபிதானன், விபரீத வியாப்திய பிதானன், சந்தித்த சாத்தியன், சந்தித்தசாதனன், சந்தித்தவுபயன், சந்தித்த ஆச்ரயன், சந்தித்தசத்யாவியாவிருத்தன், சந்தித்த சாதனவியா விருத்தன்.

திருதராட்டிரன்மக்கள்— (௧00) துரியோதனன், துச்சாசனன், துர்த்தருடன், துன்முகன், சலந்தன் சகன்சமன், விந்தன், அனுவிந்தன், துருவாகன், சுபாகு, துட்பதருட்ணன், துட்டந்தன், சித்திரையோதி, துட்சிரமன், விம்சதி, விகருணன், சலசந்தி, சுலோசனன், சித்ரன், சித்திராசுவன், சாரு சித்திரன், சாரசன், துன்மருஷ்ணன், விவிட்சன், விகபசமன், பூரணநாமன், சுநாபன், நந்தன், உபநந்தன், சேநாபதி, சுடேணன், குண்டோதரன், மகோதரன், சித்திரத்துவம்சன், சித்திரன், சித்திரபாகு, அமித்திரசித்து, சித்திரபாணன், சித்திரவன்மி, சுவன்மி, துருவிமோகன், சித்திரசேனன், சித்திரகண்டன், சுசித்திரன், சித்திரவன்மதரன், அபராசிகன், பண்டிதன், விசாலாக்கன், மார்பரன், அசிதன், சயந்தன், சுவேச்சை, துர்ச்சயன், துருடஅஸ்தன், சுகஸ்தன், பாதவேகன், சுவரசேனன், ஆதித்தகேதன், பகாசி, நாகதந்தன், உக்கிரசாயி, கவசி, நிடங்கி, பாசி, தண்டதரன், தனுக்கிரகன், பீமதரன், பீமவேகன், பீமவாகு, அலோலகன், பீமகருமன், சுபாகன், பிவிக்கிராந்தன், அபயன், உருடிகருமன், துருடிரதன், அநாதி, உருஷியன், குண்டபேதி விராவி, தீர்க்கலோசனன், தீர்க்கவசன், தீர்க்கபசன், அதீர்க்கன், தீர்க்கன், தீர்க்கபாகன், மகாபாகு, விவியூடோரஸ்கன், கனத்துவசன், மகரகுண்டன், குண்டன், குண்டசன், அநசுவன், சித்திரகன், நுக்கிராயுதன், பாலகீர்த்தி, கந்தாயு, விரோசன், சகுண்டலன், விகடன்.

திருப்பதிகள்— (௧0அ) திருவரங்கம் பெரியகோவில், திருவுறையூர், திருத்தஞ்சைமாநகரம், திருவன்பில், திருக்கரம்பனூர், திருவெள்ளறை, திருப்புள்ளம், பூதங்குடி, திருப்பேர்நகர், திருவா

தனூர், திருவழுந்தூர், திருச்சிறு புலியூர், திருச்சேறை, தலைச் சங்கநாண்மதியம், திருக்குடந்தை, திருக்கண்டியூர், திருவிண்ணகரம், திருக்கண்ணபுரம் திருவாலி, திருநாகை, திருநறையூர், திருநந்திபுரவிண்ணகரம், திருவிந்தளூர், திருச்சித்திரகூடம், திருச்சிராமவிண்ணகரம், திருக்கூடலூர், திருக்கண்ணங்குடி, திருக்கண்ணமங்கை, திருக்கவித்தலம், திருவெள்ளியங்குடி, திருமணிமாடக்கோவில், திருவைகுந்தவிண்ணகரம், திருஅரிமேயவிண்ணகரம், திருத்தேவனூர்தொகை, திருவண்புருடோத்தமம், திருச்செம்பொன் கோயில் திருத்தெற்றியம்பலம், திருமணிக்கூடம், திருக்காவளம்பாடி, திருவெள்ளக்குளம். திருப்பார்த்தன் பள்ளி, திருமாலிருஞ்சோலைமலை, திருக்கோட்டியூர், திருமெய்யம், திருப்புல்லாணி, திருத்தண்காலூர், திருமோகூர், திருக்கூடல், ஸ்ரீவில்லிபுத்தூர், குருகூர், தொலைவில்லிமங்கலம், ஸ்ரீவைரமங்கை (வானமாமலை) திருப்பேரை, ஸ்ரீவைகுந்தம், திருப்புளிங்குடி, திருவரகுணமங்கை, திருக்குளந்தை, (பெருங்குளம்) திருக்குறுங்குடி, திருக்கோளூர், திருவனந்தபுரம், திருவண்பரிசாரம், திருகாட்கரை, திருமூழிக்களம், திருப்புலியூர், திருச்செங்குன்றூர், திருநாவாய், திருவல்லவாழ், திருவண்வண்டூர் திருவாட்டாறு, திருவிற்றுவக்கோடு, திருக்கடித்தானம், திருவாறன்விளை, திருவயிந்திரபுரம், திருக்கோவலூர், திருக்கச்சி-(அத்திகிரி) திருவட்டபுயங்கம், திருதிண்கா, திருவேளுக்கை, திருப்பாடகம், திருநீரகம், திருநிலாத்திங்கள்துண்டம், திருவூரகம், திருவெஃகா, திருக்காரகம், திருக்கார்வானம், திருக்கள்வனூர், திருப்பவளவண்ணம், பரமேச்சுரவிண்ணகரம், திருப்புட்குழி, திருநின்றவூர், திருவெவ்வுளூர், திருநீர்மலை, திருவிடவெந்தை, திருக்கடன்மல்லை, மாமல்லபுரம், திருவல்லிக்கேணி, திருக்கடிகை, திருவேங்கடம், (திருப்பதி) சிங்கவேள்குன்றம். (அகோபிலம்) திருவயோத்தி, திருநைமிசாரணியம், திருச்சாளக்கிராமம், திருவதரியாச்சிரமம், திருக்கங்கைக் கரைக் கண்டம், திருப்பிருதி, திருவடமதுரை, திருத்துவாரகை, திருவாய்ப்பாடி திருப்பாற்கடல், திருவைகுந்தபுரம்.

திருமகளிர்—(அ) தனலட்சுமி, தானியலட்சுமி, தைரியலட்சுமி, வீரலட்சுமி, வித்தியாலட்சுமி, கீர்த்திலட்சுமி, விசயலட்சுமி, இராச்சியலட்சுமி.

திருமாலவதாரம்—(ம) மச்சம், கூர்மம், வராகம், நாரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி. சிவசக்தியாகியும், சிவனடியவருட்சிறந்தவராயும் விளங்கும் நந்திருமால் இவற்றையெடுத்தற்குக்காரணம்யாதெனில்கூறுதும். வேதத்தைத் திருடிக் கடலிலொளித்த சோமுகாசுரனெனுமிராக்கதனைக் கொல்ல மச்சாவதாரம், கடலைக் கடையும் போதுமந்திரமலையைத்தாங்கக் கூர்மவதாரம் பூமியைப் பாயாக விரணியாக்கன் சுருட்டினதை விரிக்கவுமவனைக்கொல்லவும் வராகாவதாரம், இப் பழி வாங்கச் சருவதேவவணக்கம் விலக்கினவவன் றம்பி இரணியகசிபனைக்கொல்ல நரசிங்காவதாரம், இந் நான்கவதாரத்துக்குந் தந்தை தாயார் இல்லை. மரவலியை யடக்கக் காசிபனுந் திதியுந் தந்தை தாயாக வர்மனுததாரம் அரசராற் ருழ்த்தப்பட்ட பார்ப்பார் நிமித்த மவ்வரசரைக் கொல்லச் சமதக்கினியு மிரேணுதையுந் தந்தை தாயாகப் பரசுராமாவ

தாரம். இராவணன் முதலிய விராக்கதரைக் கொல்லத் தசரதனும் கௌசலையுந் தந்தை தாயாக விராமாவதாரம். பிரலம்பன் முதற் பல விராக்கதரைக் கொல்ல வசுதேவனு முரோகணியுந் தந்தை தாயாகப் பலபத்ர ராமாவதாரம். பாரதநடத்த வசுதேவனுந் தேவகியுந் தந்தை தாயாகக்கண்ணனவதாரம். அறத்தை நிலைபெறச் செய்யக் கற்கியவதாரம்.

திருமாலவதாரம் — (கடு) சனகன், சனந்தனன், சனுதன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, யாகபதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன்.

திருமாலாடல்— (சு) அல்லியம், குடம், மல், மரக்கால், அஞ்சன வண்ணனுடிய வாடலுள் என்ற சிலப்பதிகாரச் செய்யுளில், அஞ்சன வண்ணனுடிய வாடல் பத்துள் என்று அடியார்க்கு நல்லாரும், அங்ஙனே அரும் பதவுரை ஆசிரியரும் உரைத்தலால் பத்தென்று விளங்குகின்றது. அவற்றை வந்துழிக் காண்க.

திருமாலாயுதம்—(ரு) சக்கரம், தனுசு, வாள், தண்டு, சங்கம்.

திருவள்ளுவரின் வேறுபெயர்கள்— (கo) நாயனுர், தேவர், முதற்பாவலர், தெய்வப்புலவர், நான்முகனர், மாதானுபங்கி, செந்நாப்போதார், பெருநாவலர், பொய்யில் புலவர், புலவர்.

திருவாசகவைப்புத்தலங்கள்-(கஉ) கல்லாடம், பஞ்சப்பள்ளி, நந்தம்பாடி, வேலம்புத்தூர், தர்ப்பணம், சாந்தம்புத்தூர், மொக்கணி, பூவலம், பட்டமங்கலம், ஓரியூர், பாண்டூர், மந்திரமாமலை.

திருவிசைப்பாபெற்ற திருவூர்கள்— (அ) திருவிடைக்கழி, திருக்களந்தையாதிதேச்சுரம், கீழ்க்கோட்டூர் மணியம்பலம். திருமுகத்தலை, திரைலோக்யசுந்தரம், கங்கைகொண்ட சோளேச்சுரம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சுரம்.

திறம்— (கஉ) நேர்திறம், ஏனைய வந்துழிக் காண்க. இத் திறத்தைச் சாடவமென்பர் வடநூலார்.

திறவகை — (சு) தாரப்பண்டிறம், பையுள், காஞ்சி, படுமலை இவை விரியான் நூற்றுமூன்ருகும்.

திணைவகை—(ரு) கருந்திணை, செந்திணை, வெண்டிணை, செருக்குத்திணை, பெருந்திணை.

## தீ

தீ—(க) உயிரிலுள்ள தீ, உதரத்துள்ள தீ, சினத்திலெழுந் தீ. அன்றியும், வேதாக்கினி (உ) காருகபத்தியம், தக்கணுக்கினியம், ஆகவனீயம்.

தீக்கணத்தின்பெயர்— (ச) அந்தரகணம், வாயுகணம், சூரியகணம், அக்கினிகணம்.

தீக்கணப்பயன்—(ச) அந்தரகணம் வேறு தேசத்திற் செலுத்தலும், வாயுகணம் செல்வத்தைப்போக்கலும், சூரியகணம். சூனியஞ் செய்தலும், தீக்கணம் நோய் செய்தலுமாகிய பயனைத் தரும்.

தீக்குணம்—(கo) பொய்சொல்லல், கோட் சொல்லல், கோபித்துச் சொல்லல், பயனில சொல்லல் இந்நான்கும்வாக்கின் றீக்குணம். களவாடப் போதல், வறிதே தொழில் செயல், கொலைசெயல், இம்மூன்றும் காயத் தீக்குணம்.

கொலை நினைக்கை, காமப்பற்று, ஆசை இம் மூன்றும் மனத் தீக் குணம்.

தீட்சைகள் — (கூ) நயனதிட்சை, பரிசதீட்சை, மானசதிட்சை, வாசகதீட்சை, சாத்திரதிட்சை, யோகதிட்சை, அவுத்திரி தீட்சை, ஞானதீட்சை, கிரியா தீட்சை.

தீமை விளைக்கும் தேவதைகள் — (கஅ) தந்தாக்கிருட்டி, உக்தி, பரிவர்த்தகன், அங்கயுக், சகுனி, கண்டபிராதருது, கற்பகனன், சசியக்னன், நியோசிகை, விரோதினி, சுவயம் ஹாரிகை, பிராமணி, ருதுஹாரிகை, ஸ்மிருதி ஹாரிகை, பீசாபகாரிணி, வித்வேடணி, தந்தாக்கிருஷ்டி, விசல்பை, கலகை, காலசிஹ்வன், பரிவர்த்தினி, அவிக்னன், மேகலை, க்ஷுத்ரகன், சோதகை, கிராஹகை, தமப்பிரசாதகன், சோதகன், கிருகன், அர்த்த ஹாரி, வீர்யஹாரி, குசஹாரிணி, பிரசண்டன், வாதருபை, அருபை, அபகர்ஷை.

தீமை விளைவிப்பன —(ச) காலம், நீட்டித்தல், மறதி, சோம்பல், மிகுந்த தூக்கம்.

தீய நோய்கள்—(உச) குட்டம், அவிருசிகம், சகந்தரம், பிரமேயம், கயம், குன்மம், விக்கல், மட்டிகம், அச்சரம், காசம், சுவாசம், ஆசனக்கடுப்பு, மகோதரம், சூலை, அவமிசுரம், மூலம், பித்தம், கண்டமாலை, இட்சம், கபம், சோகை, அவிரோசகம், வாதசன்னி, நஞ்சு.

தீயின்நா — (எ) இரண்ணியை, கனகை, இரத்தை, கிருட்டினை, சுப்பிரவை, அதிரத்தை, வெகுரூபை. தீயின்நா நிறம் (எ) வெளுப்பு, பொன்மை, புகை கறுப்பு, மிகுவெளுப்பு, மிகு சிவப்பு, பச்சை. தீயின் நீர உணவு (எ) சமிதை, நெய், குள நெல், பொரி, எள், கடுகு, அன்னம்.

தீர்த்தங்கரர் வகை — (௩) ஆதி தீர்த்தங்கரர், மத்திய காலதீர்த்தங்கரர், பவிஷ்யத்காலதீர்த்தங்கரர்.

தீர்த்தவகை — (ருஉ) கங்கை, யமுனை, சரசுவதி, கௌதமை, நருமதை, காவிரி, பொருநை, குமரி, ஆன்பொருந்தம், மணி, கன்னிகை, மாணிக்க கங்கை, வைகை, கோதாவரி, பிரமதீர்த்தம், குருக்கடீர்த்தம், கோகன்னம், சித்தவாசம், மதுவனம், சோமம், விசிவதீர்த்தம், விரசை, மகாகாளம், கனகலம், வைதரணி, சித்திநதி, வியாத தீர்த்தம், பிருது, துங்கம், கவசிகம், கனகம், நந்தை, தேசாச்சுவமேதம், மாதுங்கம், சுவாமி தீர்த்தம், சுழுமுனை, சிந்து, புண்டரீகம், குபேரதுங்கம், பஞ்சநதம், பாவநாசம், சொன்னவதி, பிலக்காவதானம், காலசற்பி, மானசவாவி, கேதாரம், அசுவம், கிட்டிணவேணி, மாகாளம், ஒக்கிசபிருட்டம், தன்மம், புருடை, சந்திரம், சாளக்கிராமம். இவையே விதக்கப்பட்ட புண்ணிய தீர்த்தங்களாம்.

தீவக அணியின் வகை—(௧0) முதனிலைக் குணத்தீவகம், முதனிலைத்தொழில்தீவகம், முதனிலைச் சாதித்தீவகம், முதனிலைப் பொருள் தீவகம், இடைநிலைக் குணத்தீவகம், இடைநிலைத் தொழில் தீவகம், இடைநிலைச் சாதித்தீவகம், இடைநிலைப் பொருள் தீவகம், கடைநிலைத் தொழில் தீவகம், கடைநிலைப் பொருள் தீவகம்.

தீவினைகள்— (பாதகங்கள்) (கச) கோவதை, காலத்தில்உபநயனம்

அடையாதிருத்தல், களவு, கடன் தீர்க்காதிருத்தல், ஆகி தாக்கினியின்றியிருத்தல், விற்கக்கூடாத பொருளை விற்றல், முத்தோன் மணஞ்செய்யாத முன் மணஞ்செய்துகொள்ளுதல், பொருள்கொடுத்து வேதாத்யயனம் அடைதல், பொருள் பெற்று வேதாத்யயனங் கூறல், பரதாரகமனம், அதிக வட்டி வாங்கல், உப்புண்டாக்கல், பெண்கொலை, இகழத்தக்க பொருள்களால் உயிர் வாழ்தல், கடவுள் இல்லையென்றல், விரதலோபம், பிள்ளைகளை விற்றல், தனதான்ய பசுக்களைக் களவு செய்தல், வேள்விசெய்ய அருகரல்லாதவர்கட்கு வேள்விசெய்வித்தல், தாய் தந்தை குமாரரை விட்டுவிடல், சோலை முதலிய வைகளைவிற்றுவிடல், கன்னியர் மேல்குற்றங் கூறல், கட்குடித்த பெண்களைச்சேர்தல், மகனை நீக்கிவிடல், பந்துக்களை விட்டுவிடல், சமைத்தற்பொருட்டு மரங்களை வெட்டுதல், பெண்களைக் கொண்டுவாழ்கைக்குவழிதேடிக் கொள்ளல், சூதாடுதல், தன்னை விற்றல், இழிந்தவனிடம் வேலை பார்த்தல், நீசனோடு நட்புக் கொள்ளுதல், ஆச்சிரமம் இன்றியிருத்தல், பிறர் உணவைக் கொண்டுவாழ்தல், பெண்டு விற்றல்.

தீவு-(எ) நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு இவ்வெழுவகைப்பொருளு மவ்வத்தீவின் மிக்கனவாகையா லிவற்றுற் பெயர் பெற்றன.

## து

துக்கம்—(௩)அத்தியாத்மிதுக்கம், அதிதெய்வ துக்கம், அதிபூத துக்கம்.

துத்தி—(௬)துத்தி, கொடித்துத்தி கருந்துத்தி, செந்துத்தி, மலைத்துத்தி, வெண்துத்தி.

தும்பைத்திணை—(உ௪)தும்பை, தும்பையரவம், தானைமறம், யானைமறம்' குதிரைமறம், தார்நிலை, தேர்மறம், பாண்பாட்டு, இருவருந்தபுநிலை, எருமைமறம், ஏமவெருமை, நூழில், நூழிலாட்டு முன்தேர்க்குரவை, பின்தேர்க்குரவை, பேய்க்குரவை, களிற்றுடனிலை, ஒள்வாளமலை, தானைநிலை, வெருவருநிலை, சிருங்காரநிலை, உவகைக்கலும்ச்சி, தன்னை வேட்டல், தொகைநிலை.

தும்பைவகை—(௯) சிறுதும்பை, பெருந்தும்பை, கௌதும்பை, பேய்த்துபை, கருந்தும்பை, செந்தும்பை, காசித்தும்பை, மஞ்சட் காசித்தும்பை சிவப்புக் காசித்தும்பை.

துரககதி—(௫)மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி.

துவரைவகை — (௪) துவரை, கருந்துவரை, வெண்துவரை, பேய்த்துவரை.

துவர்ப்பு—(௯) ஆசியம், இரதி, அரதி, சோகம், அர்ச்சம், குர்ச்சை.

துவர்வகைகள்—(௧0) நாவல், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு, மாந்தளிர்.

துளசிவகை—(எ) தேவதுளசி, திருத்துளசி, கருந்துளசி, சிவப்புத் துளசி, காட்டுத்துளசி, நாய்த் துளசி, கல்துளசி.

துள்ளலோசை-(௩)ஏந்திசைத்துள்ளல், அகவற்றுள்ளல், பிரிந்திசைத்துள்ளல்.

துறவறத்தின்துறை—(ச) சரியை, கிரியை, யோகம், ஞானம்என்னு மிவைகளே. நாகம் தோலுரித் தாற்போல அகப்பற்றும் புறப் பற்று மறுத்து இந்திரிய வச மறுத்து, முற்றத்துறத்தலை யுடைய துறவறத்துறையெனச் சித்தாந்த மெய்நூலாரன்றிச் சிலப்பதிகாரமுரகாண் காதைக் கணுமுரைத்துள்ளார் அடியார்க்கு நல்லார்.

துன்பங்கள் —(உ) தெய்வத்தால் வருவது, மனிதரால்வருவது.

## தூ

தூக்கு—(எ) செந்தூக்கு, மதலைத் தூக்கு, துணிபுத்தூக்கு, கோயிற் றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற் றூக்கு, நெடுந்தூக்கு, இவற்றுள் ஒரு சீர்செந்தூக்கு, இருசீர்மத லைத்தூக்கு, முச்சீர் துணிபுத் தூக்கு, நாற்சீற் கோயிற்றூக்கு, ஐஞ்சீர் நிவப்புத்தூக்கு, அறுசீர் கழாற்றூக்கு, எழுசீர் நெடுந் தூக்கு, எனக் கொள்க.

தூங்கலோசை—(ங) ஏந்திசைத் தூங்கல், அகவற்றூங்கல், பிரிந் திசைத்தூங்கல்.

தூங்கிசைவண்ணம்—(உ0) குறில கவற்றூங்கிசைவண்ணம், நெடி லகவற்றூங்கிசைவண்ணம், வலி யகவற்றூங்கிசைவண்ணம், மெலி யகவற்றூங்கிசைவண்ணம், இடை யகவற்றூங்கிசைவண்ணம், குறிலொழுகற்றூங்கிசைவண் ணம், நெடிலொழுகற்றூங்கிசை வண்ணம், வலியொழுகற்றூங்கி சைவண்ணம், மெலியொழுகற் றூங்கிசைவண்ணம், இடையொ ழுகற்றூங்கிசைவண்ணம், குறில்வல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில்வல்லிசைத் தூங்கிசைவண்ணம், வலிவல்லி சைத்தூங்கிசைவண்ணம், மெலிவல்லிசைத் தூங்கிசைவண் ணம், இடைவல்லிசைத் தூங்கி சைவண்ணம், குறில்மெல்லி சைத் தூங்கிசைவண்ணம், நெடின்மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலிமெல்லிசைத் தூங்கிசைவண்ணம், மெலிமெல் லிசைத்தூங்கிசை வண்ணம், இடைமெல்லிசைத்தூங்கிசை வண்ணம்.

தூதுவளை—(உ) தூதுவளை, வெண் தூதுவளை.

தூலசரீரம்—(உ) சமஷ்டி, வியஷ்டி.

தூபம்—(ரு) குந்தருக்கம், குடன், அகில், சந்தனம், கருஞ்சீதாரி.

## தெ

தெய்வலோகம்—(சு) மகாராசிக லோகம், திரயத்ரிம்சத்துலோகம், யாமலோகம், துடிதலோகம், நிரு மாணரதிலோகம், பரநிருமித வசவிருத்திலோகம். (பௌத்தம்)

தெய்வக்கல்கள்—(அ) நஞ்சை நீக் குங்கல், வினைகளைப் போக்குங் கல், சேர்ந்தவர்களைத் தேவராக் குங்கல், வெட்டுப்பட்ட உடலைப் பொருத்துங்கல், கணைகளைத் துரத்திக்காக்குங்கல், புதைத்த பொருளைக்காட்டுங்கல், பெருந் துன்பங்களைநீக்குங்கல், வேந் தர்க்குவெற்றியைவிளைக்குங்கல்.

தென்னைவகை—(ரு) தென்னை, அடுக்கிளநீர்த்தென்னை, கெவுளி பாத்திரத்தென்னை, பெருந் தென்னை, நக்குவாரித்தென்னை.

## தே

தேகஅவஸ்தை—(சு) சிசு, கௌ மாரம், பௌகண்டம், கிசோரம், யௌவனம், சரை.

தேக்குவகை—(௪) தேக்கு, சிறு தேக்கு, வெந்தேக்கு, கொழுக் கட்டைத்தேக்கு.

தேசிக்குரியகால் — (உ௪) கீற்று, கடிசரி, மண்டலம், வர்த்தனே கரணம், ஆலீடம், குஞ்சிப்பு, கட்டுப்புரியும், களியம், உள்ளா ளம், கட்டுதல், கம்பித்தல், ஊர் தல்,நடுக்கல், வாங்குதல், அப்பு தல், அனுக்குதல், வாசிப்பு, குத்துதல், நெளிதல், மாறுக் கால், இட்டுப்புகுதல், சுற்றிவாங் குதல், உடற்பரிவு.

தேயம்— (ருகூ) அங்கம், அருணம், அவந்தி, ஆந்திரம், இலாடம், யவனம், ஒட்டியம்,கருசம்,கலிங் கம், கன்னடம், கன்னுடம், காசம், காசிமீரம், காந்தாரம், காம்போசம், கிராடம், குருகு, குடகம், குந்தளம், குரு, குலிந் தம், கூர்ச்சரம், கேகயம், கேர ளம், கொங்கணம், கொல்லம், கோசலம், சகம், சவ்வீரம், சால வம், சிங்களம், சிந்து, சீனம், சூரசேனம், சோழம், சோனகம், திராவிடம், துளுவம், தெங்க ணம், நிடதம், நேபாளம், பாஞ் சாலம், பப்பரம், பல்லவம், பாண்டியம், புலிந்தம், போடம், மகதம், மச்சம், மராடம், மலே யாளம், மாளவம், யுகந்தரம், வங்கம், வங்காளம், விதர்ப்பம்.

தேயுவின்தத்துவங்கள்—(ரு) பசி, தாகம், சோம்பல், நித்திரை, காந்தி.

தேவகணிகையர்—(௪) மேனகை, அரம்பை, ஊர்வசி, திலோத் தமை.

தேவதாருவகை—(௩) தேவதாரு, சரளேத்தேவதாரு, சுணேத்தேவ தாரு.

தேவர்கள் — (௪) பவனர், வியந்த ரர், சோதிடர், கற்பவாசிகள்.

தேவராடல்—(கக)கொடுகொட்டி, பாண்டரங்கம், குடை, துடி, அல்லியம், மல், குடம், பாவை, மரக்கால், பேடி, கடயம். இவற் றுள் கொடுகொட்டியாவது- தேவர்புரமெரிய வேண்டுதலால் வடவையெரியைத் தலேயிலே யுடையபெரியவம்புஏவல்கேட்ட வளவிலே அப்புரத்திலவுணர் வெந்து விழுந்த வெண்பலிக் குவையாகிய பாரதியரங்கத் திலே யுமா பிராட்டியார் ஒரு கூற்றினராய் நின்று பாணி தூக் குச் சீரென்னும் தாளங்களேச் செலுத்தத் தேவர் யாரினும் மிக் கவனும் எம்மையாட்கொள் வான் புதுச்சந்நிதியொரு பெருங் கோயிலுறை வீற்றிருந்தருளு மெந்தை கந்தவேளின் றந்தை யாய் விளங்கும் இறைவன் சயா னந்தத்தாற் கைகொட்டி நின்று ஆடியதாம். திரிபுரந் தீமடுத் தெரியக் கண்டும் இரங்காது கைகொட்டி நின்று ஆடுதலிற் கொடுமையுடைத் தாதலேக் கிக்கொடுகொட்டி என்று பெயர் கூறுப. கொடுங்கொட்டி என் பது கொடுகொட்டியென விகார மாயிற்றென்பர் ஆசிரியர் நச்சி னர்கினியரும்; இதற்குறுப்பு நான்கு. என்னே? "கொட்டிகொ டுவிடையோ டுடிற்றதற் குறுப் பொட்டிய நான்காமெனல்" என்ருராகலின்.

உ—பாண்டரங்கமாவது —வா னேராகிய தேரில் நான்மறைக் கடும்பரி பூட்டி நெடுப்புற மறைத்துவார் துகின் முடித்துக் கூர்முட்பிடித்துத் தேர்முன் னின்ற திசைமுகன் பாரதியைப் பிரிந்த பரிவானமுங்க வதுதபுப் பான் பாரதிவடிவாய இறைவன் அவற்கு மலநீற்றும் வெண்ணீற் றை யணிந்து ஆடியதாம். அது ஆறங்கமுடைத்து என்னே? பாண்டரங்க முக்கணனுடிற்ற

யாற்றுப்படை, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, குடைமங்கலம், வாண்மங்கலம், மண்ணுமங்கலம், ஓம்படை, புறநிலைவாழ்த்து, கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்ந்தனர் பரவல், பழிச்சினர் பணிதல், கைக்கிளை, பெருந்திணை, புலவி பொருளாகத் தோன்றிய பாடாண்பாட்டு, கடவுண்மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்தபக்கம், கடவுண் மாட்டு மானிடப்பெண்டிர் நயந்தபக்கம், குழவிக்கட்டோன்றிய காமப் பகுதி, வரின் கட் டோன்றிய காமப்பகுதி.

பாடாண்பகுதியுட்டிணை — (கஅ) கொடுப்போரேத்திக் கொடார் அர்ப்பழித்தல், வாணிகவென்றி, மல்வென்றி, உழவன்வென்றி, ஏறுகோள் வென்றி, கோழி வென்றி, தகர்வென்றி, யானை வென்றி, பூழ்வென்றி, சிவல் வென்றி, கிளிவென்றி, பூவை வென்றி, குதிரைவென்றி, தேர் வென்றி, யாழ்வென்றி, சூது வென்றி, ஆடல் வென்றி, பாடல் வென்றி, பிடிவென்றி.

பாடாணவகை — (கச) கற்கடக பாடாணம், கோளகபாடாணம், சூதபாடாணம், அரிதார பாடாணம், கெந்தகபாடாணம், வீர பாடாணம், வைக்கிராந்த பாடாணம், தாலபாடாணம், முர்த பாடாணம், சிர்பந்தபாடாணம், தொட்டிப்பாடாணம், குதிரைப் பற்பாடாணம், சங்கபாடாணம், கௌரிபாடாணம், துத்தபாடாணம், பலன்றுருகபாடாணம், காந்தபாடாணம், இலிங்கபாடாணம், சரகண்டபாடாணம், தாளகபாடாணம், மனோசிலைப் பாடாணம், அவுபற்பாடாணம், சாலாங்கபாடாணம், கற்பரி பாடாணம், கற்பாடாணம், அஞ்சனபாடாணம், கச்சாலபாடாணம், சீதாங்க பாடாணம், இலாமதப்பாடாணம், கார்முகிற்பாடாணம், அப்பிரகம், வெள்ளைப் பாடாணம். (இவை விளைவுப் பாடாணம்) தொட்டிப்பாடாணம், சிலாமுகிப்பாடாணம், மிருதார்சிங்கிப்பாடாணம், தீமுருகற் பாடாணம், கருமுகிற்பாடாணம், சாதிலிங்கபாடாணம், வெள்ளைப் பாடாணம், கௌரி பாடாணம், சவ்வீரம், கோழித்தலைக்கெந்தி, வாணக்கெந்தி அரிதாரம், பவளப்புற்றுப்பாடாணம், கோடாசூரிப்பாடாணம், பஞ்சபட்சிப் பாடாணம், குங்குமபாடாணம், இரத்தபாடாணம், துத்தபாடாணம், துருசுப்பாடாணம், இரசித பாடாணம், சூதபாடாணம், நீல பாடாணம், கெந்தகபாடாணம், சோரபாடாணம், காகபாடாணம், இலவனபாடாணம், நாக பாடாணம், இந்திரபாடாணம், அயத்தொட்டிப்பாடாணம், சுரக்கொந்திப்பாடாணம், எலிப்பற் பாடாணம், வெண்முகிற்பாடாணம்.

பாடுந்திறம் — (௩) வசைபாடுந்திறம், இசைபாடுந்திறம், சமுத்தி பாடுந்திறம்.

பாண்டவர்கள் — (௫) தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன்.

பாடை—(கஅ) அங்கம், அருணம்; கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திரவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம்.

பாணிவிகற்பம் — (கக) ஒன்றன் பாணி முதலாக எண்கூத்துப் பாணியீருக வுள்ளனவாம்.

பாண்டிநாட்டில் உள்ள தலங்கள்— (கச) திருவாலவாய். (மதுரை)

திருவாப்பனூர் திருப்பரங்குன்றம், திருவேடகம், கொடுங்குன்றம், திருப்புத்தூர், திருப்புனவாயில், இராமேச்சுவரம், திருவாடானை, திருக்கானப்பேர், திருப்பூவணம், திருச்சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி.

பாண்டிநாட்டுப் பாளையங்கள் — (எஉ) பாஞ்சாலங்குறிச்சி, எட்டையாபுரம், நாகலாபுரம், ஏழாயிரம்பண்ணை, காடல்குடி, குளத்தூர், மேல்மாந்தை, ஆற்றங்கரை, கொல்லப்பட்டி, கோலார்பட்டி, கடம்பூர், மணியாச்சி, தலைவன்கோட்டை, நெற்கட்டுஞ்சேவல், சொக்கம்பட்டி, ஊற்றுமலை, சேற்றூர், சிவகிரி, சிங்கம்பட்டி, அழகாபுரி, ஊர்க்காடு, சுரண்டை, சந்தையூர், எழுமலை, இரசக்கனூர், கோட்டையூர், மருங்காபுரி, மன்னார்கோட்டை, பாவாலி, இலக்கையனூர், முல்லையூர், கடவூர், இடையக்கோட்டை, நிலக்கோட்டை, தேவாரம், இராமகிரி, கல்போது, கன்னிவாடி, தொட்டப்பநாயக்கனூர், கம்பம், காசையூர், வாராப்பூர், தோகைமலை, படதூர், ஆய்குடி, சமுத்தூர், விருப்பாட்சி, படமாத்தூர், கண்டவநாயக்கனூர், காமநாயக்கனூர், தும்பிச்சிநாயக்கனூர், நத்தம், வெள்ளிக்குன்றம், மலையப்பட்டி, வடகரை, அம்மையநாயக்கனூர், போடிநாயக்கனூர், சக்கந்தி, மதவானையூர், சோசலைப்பட்டி, வீரமலை, பெரியகுளம், குருவிக்குளம், ஆத்திப்பட்டி, இளசை, மதுவார்பட்டி, கோம்பை, கூடலூர், கவுண்டன்பட்டி, குமரவாடி, உதயப்பனூர், கொல்லகொண்டான்.

பாண்டியர் வழிமுறை—(எகூ) குலசேகரபாண்டியன், மலையத்துவசபாண்டியன், சுந்தரபாண்டியன், வீரபாண்டியன், உக்ரகுமாரன், அபிடேகபாண்டியன், இராசசேகரபாண்டியன், குலோத்துங்க பாண்டியன், அநந்தகுணபாண்டியன், குணபூடண பாண்டியன், வரகுணபாண்டியன், இராசராசபாண்டியன், இராசகம்பீரபாண்டியன், சித்திரவிரதபாண்டியன், சித்திரபூடணபாண்டியன், சித்திரத்துவசபாண்டியன், சித்திரசேனபாண்டியன், சித்திரவிக்கிரமபாண்டியன், இராசமார்த்தாண்டபாண்டியன், இராசசூடாமணிபாண்டியன், இராசசுந்தரபாண்டியன், இராசகுலோத்தமபாண்டியன், இராசசீர்க்கீசகம்பீரபாண்டியன், இராசகம்பீரபாண்டியன், பாண்டியர்தீபவம்சபாண்டியன், புரந்தரசிந்தபாண்டியன், பாண்டியவம்சதுரந்தரபாண்டியன், சென்னிரேஸ்வரபாண்டியன், பாதசேகரபாண்டியன், வெற்குணபாண்டியன், இராசசார்த்தூலபாண்டியன், இராசகுலோத்தமபாண்டியன், அயோதனபாண்டியன், இராசகுஞ்சரபாண்டியன், பிரவீரராசபயங்கரபாண்டியன், சேரகுலசேனபாண்டியன், சத்துருஞ்சயபாண்டியன், வீரவுத்தண்டபாண்டியன், வீரபராக்கிரமபாண்டியன், பிரதாபமார்த்தாண்டபாண்டியன், விக்கிரமகஞ்சுகபாண்டியன், சமரசேகரகோலாகலபாண்டின், அதுலவிக்கிரமபாண்டியன், அதுலகீர்த்திபாண்டியன், வம்சசேகரபாண்டியன், பிரதாபசூரியபாண்டியன், வம்சத்துவசபாண்டியன், இரிபுமர்த்தன பாண்டியன், சோழவம்சாந்தக பாண்டியன், குலசூடாமணி பாண்டியன், இராசசூடாமணி பாண்டியன், வம்சசிரோமணிபாண்டியன், பாண்டீச்சுரபாண்டியன், குலத்துவசபாண்டியன், வம்சவிபூடணபாண்டியன், குலேசபாண்

டியன், அரிமர்த்தனபாண்டியன், சகநாதபாண்டியன், வீரவாகு பாண்டியன், விக்கிரமபாண்டியன், பராக்கிரமபாகுபாண்டியன், துற்மத்தபாண்டியன், காருண்யபாண்டியன், சருவசாதனபாண்டியன், சார்த்தமபாண்டியன், நாகரீகபாண்டியன், செங்கோனிலேயிட்டபாண்டியன், வித்யாவிநோதகொடுங்கோற்பாண்டியன்.

பாண்டுநோய்— (ஞ) வாதபாண்டு, பித்தபாண்டு, சிலேட்டுமபாண்டு, முக்குற்றபாண்டு, நச்சுப்பாண்டு.

பாதகம் — (ஞ) கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குருநிந்தை, இவையே பஞ்சமாபாதகம்.

பாதகம் — (௩) தூலம், சூக்குமம், அதிசூக்குமம் இவை முறையே பாதகம், அதிபாதகம், மகாபாதகமென்றுஞ் சொல்லப்படும்.

பாதகம்—(எ) சித்தசமுன்னதி, அருத்த லோபம், காமம், வைடம்மியம், அசனப்பிரியம், கோபம், அருட்டனம், இவையே சத்தவிசனம். இவை முறையே அகங்காரம், உலோபம், காமம், பகை, போசனப்பிரியம், காய்தல், சோம்பல், இவையேழுந் தலைமையான பாதகமெனப்படும்.

பாதம்—வேதாந்தம்— (உ) விஷயி வடிவபாதம்.

பாதம்—(ஞ) சமநிலை, உற்கடிதம், சஞ்சாரம், காஞ்சிதம், குஞ்சிதம்.

பாதுகாக்கப்படவேண்டியவர் – (ஞ) தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான்.

பாதுகை (மிதியடி) — (ஞ) மரப்பாதுகை, தந்தப்பாதுகை, வெள்ளிப் பாதுகை, பொன்பாதுகை, தோற் பாதுகை.

பாபகர்மம் — (௩) உத்கிருஷ்டம், மத்திமம், சாமானியம்.

பாயிரங்கூறத்தக்கவர் -- (௪) தன்னாசிரியன், தன்னொடு கற்றோன், தன்மாணாக்கன். தன்னூற்கு உரையெழுதியவன்.

பாலை—(எ) இசையைக் காண்க.

பாலைவகை—(௬) கனுப்பாலை. குளப்பாலை, வெட்பாலை, கொடிப்பாலை, நாய்ப்பாலை, திருநாமப்பாலை.

பாலைவகை— (௪) ஆயப்பாலை, சதுரப்பாலை, திரிகோணப்பாலை, வட்டப்பாலை.

பாலைப்பண்ணின்றிறம்—(ஞ) தக்கராகம், நேர்திறம், காந்தாரபஞ்சமம், சோமராகம், காந்தாரம், என்னை? "தக்கராக நேர்திறங் காந்தார பஞ்சமமே - துக்கழி சோமவிராகமே, மிக்க திறற்காந்தார மென்றைந்தும்பாலைத் திறமென்றார்-பூந்தா ரகத்தியனார் போந்து" என்றாராகலின்.

பாலையாழ்த்திறம் — (ஞ) அராகம், ஆசான், உறுப்பு, குறுங்கலி, நேர்திறம். பாலை யாழ்த்திறன் வகை - உ௬ - அந்தாளி, தக்கராகம், பாடை, அந்தி, மன்றல், நேர்திறம், வராடி, பெரிய வராடி, சாயரி, பஞ்சமம், திராடம், அழுங்கு, தநாசி, சோமராகம், மேகராகம், துக்கராகம், கொல்லிவராடி, காந்தாரம், சிகண்டி, தேசாக்கரி, சுருதிகாந்தாரம்.

பால் — (௧௪) கைக்கிளைத்திணை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை,

வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காசி, பாடாண்டிணை.

பால்—(இ) ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல.

பால்வகை — (சு) பசுவின்பால், எருமைப்பால், வெள்ளாட்டுப் பால், செம்மறியாட்டுப்பால், கழுதைப்பால், முலைப்பால்.

பாவபுண்ணியவழக்கம்— (ங)செய்தல், செய்வித்தல், உடன்படல்.

பாவனை—(ங) பிராமிபாவனை, அவ்வியத்தபாவனை, உருவ பாவனை, இவற்றின் விரிவுகளைக் கூர்ம புராண விருத்தியுரைக்கட் காண்க.

பாவனை — (ங) கண்டபாவனை காணுதபாவனை, கேட்டபாவனை.

பாவினம்— (ங) தாழிசை, துறை, விருத்தம்.

பாவியல்பு — (சு) சாதி, நிலம், நிறம், நாள், கோள், இவிசி.

பாவியற்குரிய அடிகள் — வெண்பாவிற்குரிய அடி, ஆசிரியப் பாவிற்குரிய அடி, கலிப்பாவிற் குரிய அடி, வஞ்சிப்பாவிற்குரிய அடி.

பாவுறுப்பு — (சு) எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை.

பாஷாணம் — (க) சாதிலிங்கம், மனோசிலை, காந்தம், தாரம் கெந்தி, இரசகற்பூரம், வெள்ளைப் பாஷாணம், கௌரிபாஷாணம், தொட்டிபாஷாணம்.

# பி

பிசாசங்கள்— (உ) கண்ணுக்குத் தெரிவன, தெரியாதன.

பிசின்வகை — (க0) விளாம்பிசின், வெளிச்சிப்பிசின், முருங்கைப் பிசின், கருவேலம் பிசின் தென்னம்பிசின், வேப்பம்பிசின், ஆவிரைப்பிசின், மாம்பிசின், இச்சிப்பிசின், ஆலம்பிசின்.

பிணி—(ங) வாதம், பித்தம், சிலேட்டுமம்.

பித்தங்கள்—(சஉ) ஆவுருபித்தம், ஆம்லபித்தம், உன்மாதபித்தம், தமந்தபித்தம், வாதபித்தம், வன்னிபித்தம், சுரோணிதபித்தம், விகாரபித்தம், விரணபித்தம், உரத்தபித்தவாதம், இரத்த பித்தம், காசபித்தம், சுவாசபித்தம், சிலேட்டுமபித்தம், கரும்பித்தம், கரப்பான்பித்தம், அசீரண பித்தம், அருசிபித்தம், எரிபித்தம், அழல்பித்தம், துடிபித்தம், விஷபித்தம், அதிசாரபித்தம், மூலபித்தம், முதிர்பித்தம், கண்ட பித்தம், ஓடுபித்தம், மூடுபித்தம், நடுக்குபித்தம், கபாலபித்தம், சர்த்திபித்தம், தாகபித்தம், விக்கல்பித்தம், க்ஷயபித்தம், திமிர் பித்தம், வலிபித்தம், சீதபித்தம், கிருமிபித்தம், அசாத்தியபித்தம், மார்க்கபித்தம், மருத்தீடுபித்தம்.

பிரகரணங்கள்—(அ) தத்துவப்பிர காசிகை, தத்துவ சங்கிரகம், தத்துவத்திரய நிருபணம், போக காரிகை, மோட்சகாரிகை, நாத காரிகை, இரத்தினத்திரயம்.

பிரகிருதிவகை — (ங) மாயை, அவித்தை, தமப்பிரதானப் பிர கிருதி.

பிரஞ்ஞை—(உ)ஸ்திதப்பிரஞ்ஞை, அஸ்திதப்பிரஞ்ஞை.

பிரண்டைவகை— (எ) பிரண்டை, களிப்பிரண்டை, நாகப் பிரண்டை, முப்பிரண்டை, புளி

யம்பிரண்டை, சிவப்புப் புளியம் பிரண்டை, மணிப்பிரண்டை;

பிரத்தியங்கம் — (கசு) மார்பு, கழுத்து, தனம், தோள், கொப் பூழ், வயிறு, குய்யம், கண், மூக்கு, காது, நெற்றி, கால், விரல், தொடை, முழங்கால், கணைக் கால்.

பிரபஞ்சம் — (உ) பாகியப்பிரபஞ் சம், ஆந்தரப்பிரபஞ்சம்.

பிரபஞ்சம்—(௩) தூலம், சூக்குமம், காரணம்.

பிரபந்தம்—(கக) அவையாவன- சாதகம், திதிநிலை, வாரநிலை, நாண்மீனிலை, யோகநிலை, கரண நிலை, ஓரைநிலை, கிரகநிலை, இவ் வேழ் வகையுறுப்புக்கணிலையை யுஞ், சோதிட நூலால், நன் குணர்ந்தவற்றையமைத் தவ ற் ருற் றலைவற்குறுவன கூறுவது, மற்றும் யுகாதியாண்டு முதலிய வுங் கொள்க. இப் பிரபந்தம் தொண்ணூற்றுறும் அகலக்கவி யெனவும், வித்தாரக்கவியென வும் பெயர் பெறும்.

௧. பிள்ளைக்கவி - இதனிலக் கணத்தைத் தெளிவுறக் கூறுங் கால்; ஆண்பாற் பிள்ளைத்தமிழ் பெண்பாற் பிள்ளைத் தமிழ் என விருவகைத்து. இவற்றுள் இரண்டா மாதத்திற் காப்புக் கூறுதலும், ஐந்தா மாதத்திற் செங்கீரை கூறுதலும், ஆரு மாதத்திற் சொற்பயில்வு கூறுத லும் ஏழா மாதத்தில் அமுதூட் டலும், எட்டா மாதத்திற்ருலாட் டுக் கூறுதலும், ஒன்பதாமாதத் திற் சப்பாணி கூறுதலும், பத் தத்தொடான்றின்முத்த மொழி தலும், பன்னிரண்டா மாதத்தில் வாரானை கிள த்த லும், பதி னெட்டா மாதத்திற் சந்திரனை யழைத்தலும், இரண்டாமாண் டிற் சிறுபறை கொட்டலும், மூன்ருமாண்டிற் சிற்றில் சிதைத் தலும், நான்காமாண்டிற் சிறு தேருருட்டலும், பத்தாமாண்டிற் பூணணிதலும், பன்னிரண்டாம் ஆண்டில் கச்சிளேடு உடை வாளை விரும்பத் தரித்தலு மென்றுசொல்லப்பட்டவும்பிறவு முடைத்து. பெண்பாற் பிள் ளைத் தமிழாவது அம்புலி யிறுதி யாய நின்ற பருவங்களுடன் மூன்ரும் ஆண்டிற்ருன் விளை யாடும் பாவைக்கு மணம் பேசு தலும், ஐந்தாம் ஆண்டுமுதல் ஒன்பதாம் ஆண்டுகாறும் மன் மதனையொத்த புருடனைப்பெறத் தவஞ்செய்தலும், குளிர்ந்தநீராட லும், பதுமை வைத்து விளை யாடலும், அம்மனையாடலும், கழங்காடலும், பந்தாடலும், சிறு சோறடுதலும், சிற்றிலிழைத் தலும், ஊசலாடலும் என்று சொல்லப்பட்ட இவற்றுள் ஏற் பனகூறப்படுமென்க. இஃதன்றி மூன்ருமாத முதலாகவு முறைக் கம்படுமென்பர் வெண்பாபாப் பாட்டியற்காரர் காப்பு, செங் கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் இவற்றை முறையே அகவல் விருத்தத் தாற் பப்பத்தாகக் கூறுவதாண் பாற் பிள்ளைக்கவி, இவ்வுறுப்பி னுட்கடை மூன்ரெழித்துக் கழங்கு, அம்மனை, ஊசல் என் பவற்றைக் கூட்டி மேற் சொல் லியவாறு கூறுவது பெண்பாற் பிள்ளைக்கவியாம், இங்ஙனமே முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், திருப்போரூர்ச்சுப்பிரமணி யர்பிள்ளைத்தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், புதுச் சந்நிதிக்கந்தர் பிள்ளைத்தமிழ், திருஞானசம்பந்தமூர்த்தி நாய ஞர் பிள்ளைத்தமிழ் சேக்கிழார் பிள்ளைத்தமிழ் முதலிய ஆண் பாற் பிள்ளைத்தமிழ் நூல்களி னும், மீனுட்சியம்மை, பிள்ளைத் தமிழ், அமுதாம்பிகையம்மை பிள் ளைத்தமிழ், கொடியிடை நாயகி

பிள்ளைத்தமிழ், வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ், முதலிய பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களிலுங் கூறப்பட்டமையறிக.

உ. பரணி - போர் முகத்தாயிரங்களிற்றி யானையைக் கொன்ற வீரனைத் தலைமகனாகக் கொண்டு கடவுள் வாழ்த்துங் கடை திறப்பும், பாலைநிலமுங் காளிகோயிலும், பேய்களோடு காளியும் காளியோடு பேய்களுஞ் சொல்லத் தான் சொல்லக் கருதிய தலைவன் கீர்த்தி விளங்கலுமவன் வழியாகப் புறப்பொருள்தோன்ற வெம்போர் வழங்க விரும்பலு மென்றிவையெல்லா மிருசீரடி முச்சீரடியொழித் தொழிந்த மற்றையவடியாக ஈரடிப்பஃறொழிசையாற் பாடுவது. இவற்றை யிலக்கியங்களாவமைக்கப்பட்ட கலிங்கத்துப் பரணி, மோகவதைப்பரணி, அஞ்ஞவதைப் பரணி, அண்டத்துப் பரணி, வீரபத்திரப் பரணி முதலிய நூல்களாற்றெளிக.

௩. கலம்பகம் - ஒருபோகும், வெண்பாவும், கலித்துறையு முதற்கலி யுறுப்பாக முற்கூறப் பெற்றுப் புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல், என்னுமிப் பதினெட்டுறுப்புக்களுமியைய, மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை யென்னு மிவற்றுலிடையே வெண்பா, கலித்துறை விரவ அந்தாதித் தொடையான் முற்றுறக் கூறுங்காற் றேவர்க்கு நூறும், அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், வைசியர்க்கைம்பதும், சூத்திரர்க்கு முப்பதுமாகப் பாடுவது. இவ்விலக்கணங்களமையத் தில்லைக்கலம்பகம், மறைசைக்கலம்பகம், மதுரைக் கலம்பகம், காசிக்கலம்பகம், அருணைக்கலம்பகம், கதிர்காமக்கலம்பகம், கச்சிக் கலம்பகம், வெங்கைக் கலம்பகம், புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம் முதலிய செய்யப்பட்டிருத்தல் காண்க.

௪. அகப்பொருட்கோவை - இருவகைப்பட்ட முதற்பொருளும் பதினான்கு வகைப்பட்ட கருப்பொருளும் பத்து வகைப்பட்ட வுறுப்புக்களும் பொருந்திக் கைக்கிளை முதலுற்ற வன்புடைக் காமப் பகுதியவாங் களவொழுக்கத் திணையுங் கற்பொழுக்கத்திணையுங் கூறுதலேயெல்லையாகக் கட்டளைக் கலித்துறை நானூற்றுற்றிணை முதலாகத் துறையிருகக் கூறப்பட்ட பன்னிரண்டகப் பாட்டுறுப்பும் வழுவின்றித் தோன்றப் பாடுவது. இது வெண்பா, அகவல், கலி, வஞ்சி, வண்ணம் இவற்றுனும் வழங்கப்படும். இவற்றிற்குதாரணமாகத் திருக்கோவையார், தஞ்சைவாணன்கோவை, வெங்கைக் கோவை, கோடீசுரக் கோவை, ஒரு துறைக் கோவை, அம்பிகாபதி கோவை, திருவாரூர்க் கோவை, காழிக் கோவை முதலியன விருத்தல் காண்க.

௫. ஐந்திணைச்செய்யுள்-புணர்தன் முதலியவைந்துரிப் பொருளும் விளங்கக் குறிஞ்சி முதலியவைந்திணையினையுங் கூறுப.

௬. வருக்கக்கோவை—அகர முதலாகிய வெழுத்து வருக்கமொழிக்கு முதலாமெழுத்து முறையே காரிகைத்துறைப் பாட்டாகப் பாடுவது.

எ. மும்மணிக்கோவை-ஆசிரியப்பாவும், வெண்பாவும், நேரசையு நிரையசையுங் கொண்டெழுத் தெண்ணிப் பாடிக் கலித்துறையு முறையே தொகை முப்பதுபெற வடுக்கி யந்தாதித் தொடையாற் பாடுவது. சிதம்பர மும்மணிக்கோவை, திருவொற்றியூர் மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக் கோவை முதலியன வமைந் திருத்த லறிக.

அ. அங்கமாலை - ஆண்மகனுக்கும் பெண்மகளுக்கு மிக் கனவெடுத்துக் கூறும் அவயவங்களை வெண்பாவா லாயினும் வெளி விருத்தத்தா லாயினும் பாதாதிகேசங் கேசாதிபாத முறை பிறழாது தொடர்புறப் பாடுவது.

கூ அட்டமங்கலம்-கடவுளைப் பாடி அக் கடவுள் காக்கவென வாசிரிய விருத்தமெட்டி லந்தாதித்துக் கூறுவது.

க0. அநுராகமாலை - தலைவன் கனவின்க ணொருத்தியைக் கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றினிமையுறப் புணர்ந்ததைத் தன் னுயிர்ப் பாங்கற் குரைத்ததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது.

கக. இரட்டைமணிமாலை - முறையானே வெண்பாவுங்கலித் துறையு மிருபஃ தந்தாதித் தொடையான் வருவது. நேரிசை வெண்பாப்பத்தும், ஆசிரிய விருத்தம் பத்து மந்தாதித் தொடையாற் பாடுவது. மூத்த நாயனார் இரட்டை மணிமாலை, மீனாட்சியம்மை யிரட்டை மணிமாலை முதலியன இலக்கியமாயுள்ளன.

கஉ. இணைமணிமாலை-வெண்பாவுமகவலும் வெண்பாவுங் கலித்துறையுமாக விரண்டிரண்டாக விணைத்து வெண்பாவகவலிணை மணிமாலை, வெண்பாக் கலித்துறையிணை மணிமாலை என நூறு நூறு அந்தாதித் தொடை நான்காலும் பாடுவது.

கஙு. நவமணிமாலை-வெண்பா முதலாக வேறு பட்டபாவும் பாவினமுகமாக வொன்பது செய்யுளந்தாதித்துப் பாடுவது. பிட்சாடன நவமணி மாலை யிதற்கிலக் கியமா யுள்ளது.

கச. நான்மணிமாலை - வெண்பாவுங் கலித்துறையும் விருத்தமு மகவலுமந்தாதித் தொடையாக நாற்பது பாடுவது. கோயினான் மணிமாலை, நால்வர் நான்மணிமாலை, திருவாரூர் நான்மணிமாலை முதலியன விதற்கிலக் கியங்கள்.

கரு. நாமமாலை-அகவலடியுங் கலியடியும் வந்துமயங்கிய வஞ்சிப்பாவா லாண்மகனைப் புகழ்ந்து பாடுவது.

கசு. பலசந்தமாலை - பப்பத்துச் செய்யுளொவ்வோர் சந்தமாக நூறு செய்யுட் கூறுவது.

கஎ. பன்மணிமாலை - மேற்சொல்லிய கலம்பகத்துள் வருமொருபோகுமம்மானையு மூசலுமின்றியேனை யுறுப்புக்களெல்லா மமைய வவ்வாறு கூறுவது. இதையேகலம்பகமாலையென்ப.

கஅ. மணிமாலை-எப்பொருண் மேலும் வெண்பா விருபதுங் கலித்துறை நாற்பதும் விரவிவருவது.

கக. புகழ்ச்சிமாலை-அகவலடியுங் கலியடியும் வந்து மயங்கிய வஞ்சிப்பாவான் மாதர்களினது சீர்மையைக் கூறுவது.

உ0. பெருமகிழ்ச்சி மாலை-தலைவியினழகு குணமாக்கஞ் சிறப்பினைக் கூறுவது.

உக. வருக்கமாலை - மொழிக்கு முதலாம் வருக்க வெழுத்தினுக் கொவ்வோர் செய்யுட் கூறுவது.

உஉ. மெய்க்கீர்த்திமாலை சொற்சீரடியென்னும் கட்டுரைச் செய்யுளாற் குல முறையிற் செய்த கீர்த்தியைக் கூறுவது.

உங. காப்புமாலை - தெய்வங் காத்தலாக மூன்றுசெய்யுளா னும், ஐந்து செய்யுளானும், ஏழுசெய்யுளானும் பாடுவது.

உச. வேனின்மாலை—இளவே னிலையு முதிர் வேனிலையுஞ் சிறப் பித்துப் பாடுவது.

உரு. வசந்தமாலை - தென்றலை வருணித்துப் பாடுவது.

உசு. தாரகைமாலை – அருந்த திக் கற்பின் மகளிர்க்குள்ள வியற்கைக் குணங்களை வகுப் பாற் கூறுவது. தூசிப் படை யினணியைப் புகழ்ந்த வகுப் பென்பாருமுளர்.

உஎ. உற்பவமாலை - திருமால் பிறப்புப் பத்தனையு மாசிரிய விருத்தத்தாற் கூறுவது.

உஅ. தானைமாலை—அகவலோ சையிற் பிறழாதாசிரியப் பா வான் முன்னரெடுத்துச் செல் லுங் கொடிப் படையைக் கூறு வது.

உகூ. மும்மணிமாலை-வெண்பா வுங் கலித்துறையு மகவலு மந்தா தித் தொடையான் முப்பது பாடு வது.

௩0. தண்டகமாலை-வெண்பா வான் முந்நூறு செய்யுட் கூறு வது. இது வெண்புணர்ச்சி மாலையெனவும் படும்.

௩க. வீரவெட்சிமாலை—சுத்த வீரன், மாற்றூரிற் சென்று பசு நிரை கோடற்கு வெட்சிப் பூ மாலை சூடி யவ்வண்ணம் போய் நிரைகவர்ந்து வரினவனுக்கு முன்பு தசாங்கம் வைத்துப் போய்வந்த வெற்றி பாடுவது.

௩உ. வெற்றிக்கரந்தைமஞ்சரி, —பகைவர்கொண்ட தந்நிரை— மீட்போர் கரந்தைப் பூமாலை சூடிப்போய் மீட்பதைக் கூறு வது.

௩௩. போர்க்கெழுவஞ்சி,— மாற்றூர்மேற் போர்குறித்துப் போகின்ற வயவேந்தர் வஞ்சிப் பூமாலை சூடிப்புறப்படும் படை யெழுச்சிச் சிறப்பை யாசிரியப் பாவாற் கூறுவது.

௩ச. வரலாற்றுவஞ்சி,—குல முறை பிறப்பு முதலிய மேம் பாட்டின் பல சிறப்பையுங் கீர்த்தியையும் வஞ்சிப்பாவாற் கூறுவது.

௩ரு. செருக்களவஞ்சி,— போர்க்களத்திலே யட்டமனித ருடலையும் யானைகுதிரையுடலை யும் நாயும்பேயும் பிசாசமுங் கழு கும் பருந்துங் காகமுந் தின்று களித்தாரவாரமாயிருக்க, பூத மும்பேயும் பாடியாட விங்ஙன மிருந்த சிறப்புப்பாடுவது. இதையே பறந்தலைச் சிறப்புப் பாட்டுமென்ப.

௩சு. காஞ்சிமாலை—மாற்று ரூர்ப்புறத்துக் காஞ்சிப் பூமாலை சூடியூன்றலைக் கூறுவது.

௩எ. நொச்சிமாலை—புறத் தூன்றிய மாற்றூர்க் கோடலன்றி நொச்சிப் பூமாலை சூடித் தன் மதில் காக்குந் திறங்கூறுவது.

௩அ. உழிஞைமாலை—மாற்றூ ரார் புறஞ்சூழ உழிஞைப்பூ மாலை சூடிப்படைவளைப்பதைக் கூறுவது.

௩கூ. தும்பைமாலை—மாற்று ரோடு தும்பைப் பூமாலை சூடிப் பொருதலைக் கூறுவது.

௪0. வாகைமாலை—மாற்ருரை வென்று புகழ்படைத்து வாகை மாலை சூடுவதை யாசிரியப்பா வாற் கூறுவது.

௪௧. வாதோரண மஞ்சரி—கொலைபுரி மதயானையை வயப்படுத்தி யடக்கினவர்கட்கு மெதிர்பொரு களிற்றைவெட்டி யடக்கினவர்கட்கும் பற்றிப் பிடித்துச் சேர்ந்தவர்கட்கும் வீரப்பாட்டின் சிறப்பை வஞ்சிப் பாவாற் றெடுத்துப் பாடுவது.

௪௨. எண்செய்யுள்—பாட்டுடைத் தலைவன தூரினையும் பெயரினையும்பத்து முதலாயிர மளவும் பாடியெண்ணுற் பெயர் பெறுவது.

௪௩. தொகைநிலைச் செய்யுள் -நெடிலடிச் செய்யுளாற் றெகுத்தது நெடுந்தொகையும், குறளடிச் செய்யுளாற் றெகுத்தது குறுந்தொகையும், கலிப்பாவாற் றெகுத்தது கலித்தொகையும் போல்வன.

௪௪. ஒலியலந்தாதி—பதினறு கலையோரடியாகவைத் திங்ஙன நாலடிக்கறுபத்து நாலு கலை வகுத்துப் பலசந்தமாக வண்ண மூங் கலைவைப்புந் தவருமலந் தாதித்து முப்பது செய்யுள்பாடுவது. சிறுபான்மை யெட்டுக் கலையானும் வரப்பெறும், அன்றியும் வெண்பா வகவல் கலித்துறை யாகிய இம்மூன்றையும் பப்பத்தாக வந்தாதித்துப் பாடுவதுமாம். ஒட்டக்கூத்தரால் இவ் விலக்கணங்களும் பெயருமமையச் செய்யப்பட்ட வந்தாதி யிதற்குதாரணமாம்.

௪௫. பதிற்றந்தாதி—பத்து வெண்பா பத்துக் கலித்துறை பொருட்டன்மை தோன்ற வந்தாதித்துப் பாடுவது.

௪௬. நூற்றந்தாதி — நூறு வெண்பாவினுலேனும் நூறு கலித்துறையினுலேனு மந்தாதித் தொடையாற் கூறுவது. அருணகிரியந்தாதி, கந்தரந்தாதி, திருக்கருவை வெண்பாவந்தாதி, திருக்கருவைக் கலித்துறையந்தாதி, பொன்வண்ணத் தந்தாதி, அற்புதத்திருவந்தாதி, புமமலையந்தாதி, அபிராமியந்தாதி, மறையைந்தாதி, கல்வளையந்தாதி, கைலைபாதி காளத்திபாதி வெண்பாவந்தாதி, கம்பரந்தாதி, மருதூரந்தாதி, பந்தனந்தாதி முதலியன உதாரணங்களாயுள்ளன.

௪௭. உலா —இளமைப் பருவ முற்ற தலைமகனைக் குலங்குடிப் பிறப்பு மங்கலம் பரம்பரை யிவற்ருனின்ற னென்பது தோன்றத் தலைமையாய் மாதர் நெருங்கிய வீதியிடத்தவன் பவனிவரப் பேதை முதலிய வேழு பருவப் பெண்களுங் கண்டு தொழுததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது. திருக்கைலையுலா, கச்சியேகம்பருலா, காழியுலாவைக் காண்க.

௪௮. உலாமடல்-கனவிலொரு பெண்ணைக் கண்டு கலவியின்ப நுகர்ந்தோன் விழித்தபின்னவள் பொருட்டு மடலூர்வேனென்பதைக் கலி வெண்பாவான் முற்றுவிப்பது.

௪௯. வளமடல் —அறம் பொருளின்பமரிகிய வம்முக் கூறுபாட்டின் பயனையெள்ளி மங்கையர் திறத்துறுங்காமவின்பத்தினையே பயனெனக் கொண்டு பாட்டுடைத் தலைமகனியற் பெயர்க்குத் தக்கதை யெதுகையாக நாட்டியுரைத்த வெதுகை படத் தனிச் சொலின்றியின்னிசைக் கலிவெண்பாவாற் றலைமகனிரந்து குறைபெருது மடலேறு

வதாயீரடி யெதுகைவரப் பாடுவது.

௯0. ஒருபா வொருபஃது—அகவலும் வெண்பாவுங் கலித்துறையு மாயவிவற்றி லொன்றனு லந்தாதித் தொடையாற் பத்துப் பாடுவது.

௯௧. இருபா விருபஃது—பத்துவெண்பாவும் பத்தகவலு மந்தாதித் தொடை யானிரு பதிணைந்து வருவது. சித்தாந்த சாத்திரம் பதினுன்கனு ளொன்றிதற்கிலக்கியமாகவுள்ளது.

௯௨. ஆற்றுப்படை—அகவற் பாவால் விறலி, பாணர், கூத்தர், பொருநரிந் நால்வரு ளொருவர் பரிசிற்குப் போவாரைப் பரிசு பெற்று வருவாராற்றிடைக் கண்டு தலைவன் கீர்த்தியுங் கொடையுங் கொற்றமுஞ் சொல்வது. பத்துப் பாட்டுள் முதலாவது பாட்டால் நக்கீரனுராற் சொல்லப்பட்டு முந்நூற்றுப் பதினேழடிகளையுடையதாய் முருகவேளது படை வீடாறனையும் நிரம்பப் பாராட்டிக் கூருநிற்குந் திருமுருகாற்றுப்படை, இரண்டாவது பாட்டாய பொருநராற்றுப்படை, சிறுபாணுற்றுப்படை, பெரும்பாணுற்றுப்படை, கூத்தராற்றுப்படை, தணிகையாற்றுப்படை முதலியன விதற்கிலக்கியங்களாம்.

௯௩. கண்படைநிலை-அரசருமரசரைப் போல்வாரு மவைக்கணெடிது வைகியவழி மருத்துவரு மமைச்சரு முதலியோரவர்க்குக் கண்டுயில் கோடலைக் கருதிக் கூறுவது.

௯௪. துயிலெடைநிலை-தன் வலியாற்பாசறைக் கண்ணெருமனக்கவற்சி யின்றித் துயின்ற வரசர்க்கு நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் துயிலெழுப் புதலாகப் பாடுவது.

௯௫. பெயரின்னிசை—பாட்டுடைத் தலைவன் பெயரினைச் சார, இன்னிசை வெண்பாவாற் றெண்ணூறேனும் எழுபதேனும் ஐம்பதேனும் பாடுவது.

௯௬. ஊரின்னிசை—பாட்டுடைத் தலைவனூரினைச் சார வின்னிசைவெண்பாவாற்றெண்ணூறேனு மெழுபதேனு மைம்பதேனும் பாடுவது.

௯௭. பெயர்நேரிசை—பாட்டுடைத் தலைவன் பெயரினைச் சார நேரிசை வெண்பாவாற் றெண்ணூறேனு மெழுபதேனு மைம்பதேனும் பாடுவது.

௯௮ ஊர்நேரிசை—பாட்டுடைத் தலைவனூரினைச்சார நேரிசை வெண்பாவாற் றெண்ணூறேனு மெழுபதேனு மைம்பதேனும் பாடுவது.

௯௯. ஊர்வெண்பா — வெண்பாவாலூரைச் சிறப்பித்துப் பத்துச் செய்யுள் கூறுவது.

௱. விளக்குநிலை—வேலும் வேற்றலையும் விலங்கா தோங்கியவாறு போலக் கோலொடு விளக்கு மொன்றுபட்டோங்குமாறோங்குவதாகக் கூறுவது.

௱௧. புறநிலை —நீ வணங்குந் தெய்வ நின்னைப் பாதுகாப்ப நின்வழிவழி மிகுவதாகவெனக் கூறுவது.

௱௨. கடைநிலை— சான்றோர் சேணிடை வருதலாற் பிறந்த வருத்தந்தீர வாயில் காக்கின்றவனுக் கென் வரவினைத் தலைவற்கிசையெனக் கடைக்கணின்று கூறுவது.

௱௩. கையறுநிலை — கணவனேடு மனைவி கழிந்துழி யவர்கட்

பட்ட வழிவுப் பொருளெல்லாம் பிறர்க் கறிவுறுத்தித் தாமிறந்து படாதொழிந்த வாயத்தாரும் பரிசில் பெறும் விறலியருந் தனிப்படருமுந்த செயலறுநிலையைக் கூறுவது.

கச. தசாங்கப்பத்து—நேரிசை வெண்பாவா லரசன் படைத்த தசாங்கத்தினைப் பத்துச் செய்யுளாற் கூறுவது.

கரு. தசாங்கத்தயல்-அரசன் தசாங்கத்தினை யாசிரிய விருத்தம் பத்தினுற் பாடுவது.

கசு. அரசன் விருத்தம்,—பத்துக் கலித்துறையு முப்பது விருத்தமுங் கலித்துறையு முப்பது விருத்தமுங் கலித்தாழிசையுமாகிய விவற்ருல் மலை, கடல் நாட்டு வருணனையு நில வருணனையும் வாண்மங்கலமுந் தோண்மங்கலமும்பாடி முடிப்பது, இது முடி புனைந்த வேந்தர்க்காம்.

கஎ. நயனப்பத்து—கண்ணினைப் பத்துச் செய்யுளாற் கூறுவது.

கஅ. பயோதரப்பத்து—முலையினைப் பத்துச் செய்யுளாற் கூறுவது.

கக. பாதாதிகேசம்-கலிவெண்பாவா லடிமுதன் முடியளவுங் கூறுவது.

எ0. கேசாதிபாதம் — கலிவெண்பாவான் முடிமுத லடியளவுங் கூறுவது.

எக. அலங்கார பஞ்சகம்—வெண்பா, கலித்துறை, அகவல், ஆசிரிய விருத்தம், சந்தவிருத்தமிவற்றையே மாறி மாறி நூறு செய்யுளாகவந்தாதித்துப் பாடுவது.

எஉ. கைக்கிளை-ஒரு தலைக் காமத்தினை யைந்துவிருத்தத்தாற் கூறுவது அன்றி வெண்பா முப்பத்திரண்டு செய்யுளாற் கூறுவதுமாம்.

எங. மங்கலவள்ளை - உயர் குலத் துதித்த மடவரலை வெண்பா வொன்பானுலும் வகுப்பொன்பானுலும் பாடுவது.

எச. தூது — ஆண்பாலும் பெண்பாலுமவரவர் காதல் பாணன் முதலிய வுயர்திணையோடுங் கிள்ளை முதலியவஃறிணையோடுஞ் சொல்லித்தூது போய் வாவெனக் கலிவெண்பாவாற் கூறுவது. நெஞ்சு விடுதூது, கிள்ளைவிடுதூது, கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது முதலியன விலக்கியமாம்.

எரு. நாற்பது —காலமுமிடமும் பொருளுமாகிய விவற்று ளொன்றனை நாற்பது வெண்பாவாற் கூறுவது. கார்நாற்பத, களவழி நாற்பது, இன்னுநாற்பது, இனியவை நாற்பது முதலியவற்றைக் காண்க.

எசு. குழமகன்-கலிவெண்பாவான் மாதர்கடங்கையிற் கண்ட விளமைத்தன்மையுடைய குழமகனைப்புகழ்ந்து கூறல்.

எஎ. தாண்டகம்-இருபத்தேழெழுத்து முதலாக வுயர்ந்த வெழுத்தடியினவா யெழுத்துங் குருவு மிலகுவுமொத்து வந்தன அளவியற்ருண்டகமெனவும். எழுத்தொவ்வாது மெழுத்தல கொவ்வாதும் வந்தன அளவழித் தாண்டகமெனவும் படும்.

எஅ. பதிகம்,-ஒரு பொருளைக் குறித்துப் பத்துச்செய்யுளாற் கூறுவது.

எக. சதகம் - அகப்பொருளொன்றன் மேலாதல் புறப்பொருளொன்றன் மேலாதல்

கற்பித்து நூறுசெய்யுள் கூறுவது. அறப்பளீசுரசதகம். குமரேசர் சதகம், வைராக்கியசதகம் முதலியன காண்க.

௮௦. செவியறிவுறூஉ-பொங்குதலின்றிப் புரையோர் நாப்பண் விறல்கடனெனவவையடக்கியற் பொருளுற வெண்பா முதலுமாசிரிய மிறுதியுமான மருட்பாவாற் கூறுவது.

௮௧. வாயுறைவாழ்த்து-வேம்புங் கடுவும் போல்வனவாகிய வெஞ்சொற்கண் முன்னர்த்தாங்கக் கூடாவாயினும் பின்னர்ப் பெரிதும் பயன்றருமென மெய்ப்பொருளுற வெண்பா முதலுமாசிரிய மிறுதியுமான மருட்பாவாற் கூறுவது.

௮௨. புறநிலை வாழ்த்து-வழிபடுதெய்வ நிற்புறங் காப்பப் பழிதீர் செல்வமோடொருகாலைக்கொருகாற் சிறந்து பொலிவாயென வெண்பா முதலு மாசிரிய மிறுதியுமான மருட்பாவாற் பாடுவது.

௮௩. பவனிக்காதல்-உலாக்காட்சியாலெய்திய காமமிகுதியாலவை பிறரொடு முரைத்து வருந்துவது.

௮௪. குறத்திப்பாட்டு - தலைவன் பவனி வரவு, மகளிர் காமுறுதல், மோகினிவரவு, உலா ப்போந்த தலைவனைக் கண்டு, மயங்கல், திங்கள் தென்றல் முதலிய உபாலம் பனம், பாங்கி யுற்றதென்னென வினவல், தலைவி பாங்கியோடுற்றது கூறல் பாங்கி தலைவனைப் பழித்துக் கூறல், தலைவி தலைவனைப் புகழ்ந்து கூறல், தலைவி பாங்கியைத் தூதுவேண்டல், தலைவி பாங்கியோடு தலைவனடையாளங் கூறல், குறத்திவரவு, தலைவி குறத்தியை மலைவள முதலிய வினவல், குறத்திமலைவள நாட்டுவள முதலிய கூறல், தலைவன் றலவளங் கிளைவள முதலிய கூறல், குறி சொல்லி வந்தமைகூறல், தலைவி குறி வினவல், குறத்தி தெய்வம் பராவல், குறி தேர்ந்து நல்வரவு கூறல், தலைவி பரிசிலுதவி விடுத்தல், குறவன்வரவு, புள்வரவு கூறல், கண்ணிகுத்தல், புட்படுத்தல், குறத்தியைக் காமுற்றுத்தேடல், குறவன் பாங்கனொடு குறத்தி யடையாளங் கூறல், குறவன் குறத்தியைக் கண்ணுறல், குறவனணி முதலிய கண்டையுற்று வினவலுமாண்டாண்டு குறத்தி விடைகூறலுமாகக் கூறல், பெரும்பான்மையு மிவ்வகை யுறுப்புக்களால் அகவல், வெண்பா, தரவு கொச்சகம், கலித்துறை கழிநெடில் விருத்தம், கலிவிருத், தம் இச்செய்யுளிடைக்கிடைச் சிந்து முதலிய நாடகத்தமிழாற் பாடுவது.

௮௫. உழத்திப்பாட்டு-கடவுள் வணக்க முறையே மூத்தபள்ளி யிளையபள்ளி குடும்பன் வரவோடவன் பெருமை கூறல், முறையேயவர் வரலாறு, நாட்டு வளம் குயிற்கூக் கேட்டல், மழைவேண்டிக் கடவுட்பரவல், மழைக்குறி யோர்தல், ஆற்றின் வரவு, அதன் சிறப்புக்காண்டலிவற்றிற் கிடையிடை யகப்பொருட்டுறையுங்கூறிப் பண்ணைத்தலைவன் வரவு, பள்ளிகளிருவர் முறையீடு, இளையாளையவனுரைப்பல், பள்ளன் வெளிப்படல், பண்ணைச்செயல் வினவல், அவனது கூறல், ஆயரை வருவித்தல், அவர்வரல், அவர் பெருமைகூறல், மூத்தபள்ளி முறையீடு, குடும்பன் கிடையிலிருந்தான்போல் வரல், அவனைத்தொழுவின் மாட்டல், அவன் புலம்பல், மூத்தபள்ளி

யடிசில் கொடுவரல், அவனவ ளொடுகூறல், அவனவளை மன்னித்தல் கேட்க வேண்டல், அவன் மறுத்தல், அவன்சூளுறல், அவளவனை மீட்கவேண்டிப் பண்ணைத்தலைவனைப் பரவல், விழிமுதலிய வளங்கூறல், உழவருழல், காளைவெருளல், அது பள்ளத்துப்பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவனெழுந்து வித்தல், அதைப்பண்ணைத் தலைவர்க்கறிவித்தல், நாற்று நடல், விளைந்த பின் செப்பஞ் செயல், நெல்லளத்தல், மூத்த பள்ளி முறையீடு, பள்ளிகளு ளொருவர்க்கொருவ ரேசலென விவ்வுறுப்புக்களுறப் பாட்டுடைத்தலைவன் பெருமையாங் காங்குத் தோன்றச் சிந்தும் விருத்தமும் விரவிவர விவற்றுற் பாடுவது.

அசு. ஊசல்-ஆசிரிய விருத்தத்தானுதல், கலித்தாழிசையானுதல், சுற்றத்தோடும் பொலிவதாக ஆடிருசல், ஆடாமோ வூசலென்றிறக் கூறுவது.

அஎ. எழுகூற்றிருக்கை - ஏழரையாக்கக் குறுமக்கண் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியால் வழுவாமையா லொன்று முதலாக வேழிறுதியாக முறையானே பாடுவது.

அஅ. கடிகைவெண்பா-தேவரிடத்து மரசரிடத்தும் நிகழுங் காரியங்கடிகை யளவிற்றேன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் கூறுவது.

அகூ. சின்னப்பூ - நேரிசை வெண்பாவாலரசனது சின்னமாகிய தசாங்கத்தினைச் சிறப்பித்து விரித்து நூறு, தொண்ணூறு, எழுபது, ஐம்பது, முப்பது என்னுமெண்படக் கூறுவது.

கூ0. விருத்தவிலக்கணம் — வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடை, இவ்வொன்பதினையும் பப்பத்து விருத்தத்தாலொன்பது வகையாற் பாடுவது.

கூக. முதுகாஞ்சி - இளமை கழிந்தறிவுமிக்கோரிளமை கழியாத வறிவின் மாக்கட்குக் கூறுவதாம்.

கூஉ. இயன்மொழி வாழ்த்து- இக்குடிப் பிறந்தோர்க்கெல்லா மிக்குணமியல்பென்று மவற்றை நீயுமியல்பாக வுடையையென்று முன்னேர்போல் நீயுமியல்பாக வீயென்று முயர்ந்தோரவனை வாழ்த்துவதாகக் கூறுவது.

கூஙு. பெருமங்கலம் - நாடோறுந்தான் மேற்கொள்கின்ற சிறைசெய்தன் முதலிய செற்றங்களைக் கைவிட்டுச் சிறை விடுதன் முதலிய சிறந்ததொழில்கள் பிறந்ததற்குக் காரணமான நாளிடத்து நிகழும் வெள்ளணியைக் கூறுவது.

கூச பெருங்காப்பியம்-தெய்வ வணக்கமுஞ் செயப்படுபொருளு மிவற்றிற்கியைய வாழ்த்து முன்னுளதாய் அறம் பொருளின்பம் வீடென்னும் நாற்பொருளும் பயக்கு நெறியுடைத்தாய் நிகரில்லாத் தலைவனை யுடைத்தாய், மலையுங் கடலுநாடு நகரமும் பருவமுமிருசுடர்த் தோற்றமுமென்றிவற்றின் வளங் கூறுதலும் மணமும் முடிகவித்தலும் பொழில் விளையாட்டும் நீர்விளையாட்டும் உண்டாட்டும் மகப்பேறும் புலவியுங் கலவியுமென்றிவற்றைப் புகழ்தலும்; மந்திரமுந் தூதுஞ் செலவும் போரும் வென்றியு மென்றிவற்

றைத் தொடர்ந்து கூறலுமாகிய விவை முறையேதொடர்வுறச் சருக்கமிலம்பகம் பரிச்சேத மென்னும் பகுதியையுடைத் தாய், வீரமுதலிய சுவையு மவற்றை விளக்குங்கருத்து விளங்கக்கற்றோரா னியற்றப் படுவதாம். சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி, சூடாமணி, கந்தபுராணம், தணிகைப்புராணம், கூர்மபுராணம், முதலியன காண்க.

௬௬. சிறுகாப்பியம், - அறம் பொருளின்பம் வீடென்னு நான் கனுளொன்றும் பலவுங் குறைந் தேனைய வுறுப்புக்கண் மேற் கூறியவா றியல்வது, உலாமடல் முதலியனவாம்.

பிரமங்கள் — (ரு) மந்திரப்பிரமம், கிரியாப்பிரமம், தத்துவப்பிரமம், பிசப்பிரமம், முகப்பிரமம்.

பிரமசரியத்திற்கு விலக்கப்பட்டன (அ) தரிசனம், பரிசனம், விளையாட்டு, கீர்த்தனம், குய்யபாஷணம், சங்கற்பம், நிச்சயம், சேர்க்கை.

பிரமத்தின் ரூபம்—(௩) சகளம், சகளநிட்களம், நிட்களம்.

பிரமவித்துக்கள் — (௪) பிரஹ்ம வித்வரன், பிரஹ்மவித்து, பிரஹ் மவித்வரியான், பிரஹ்மவித்வ ரிஷ்டன்.

பிரமாணங்கள் — (௪) பிரத்தியட்சம், அநுமானம், உவமானம், சத்தம்.

பிரமாணங்கள் — (௬) பிரத்தியட்சம், அநுமானம், உவமானம், சத்தம், அருத்தாபத்தி, அநுபலப்தியென்பன.

பிரமிய நோய்—(உக) வாதப் பிரமியம், பித்தப் பிரமியம், சிலேட்டுமப் பிரமியம், வாதபித்தப் பிரமியம், பித்த சிலேட்டுமப் பிரமியம், தொந்தப்பிரமியம், கட்டிப் பிரமியம், சலப்பிரமியம், தந்திப் பிரமியம், இரத்தப்பிரமியம், சீப் பிரமியம், ஒழுக்குப் பிரமியம், அரித்திராப்பிரமியம், மூத்திரக் கிரிச்சரப்பிரமியம், கரப்பான் பிரமியம், கற்பிரமியம், தந்துப் பிரமியம், நீச்சுப்பிரமியம், மலினப் பிரமியம், மதுப்பிரமியம், விரணப்பிரமியம்.

பிரஹ்மம் — (௩) விராட்டு, இரணியகருப்பன், ஈசுவரன்.

பிரஹ்மம்—(உ) சப்தப் பிரஹ்மம், பரப்பிரஹ்மம்.

பிரம்மலோகம் — (பௌத்தமதம்) (௨0) பிரம்ம காயிகலோகம் பிரம்ம புரோகிதலோகம், மகாப் பிரம்மலோகம், பரீத்தாப லோகம், அப்பிரமாணுப லோகம், ஆபாஸ்வர லோகம், பரீத்த சுப லோகம், அப்பிராமண சுபலோகம், சுபகிருஸ்நலோகம், பிரகத் பலலோகம், அசம்ஞுயாயத்துவ லோகம், அப்பிரக லோகம் அதபலோகம், சுதர் சலோகம், சுதர்சிலோகம், அகநிஷ்டலோகம், ஆகாசானந்தியாய தன லோகம், அகிஞ்சநயாய தன லோகம், நைவசம்ஜ்யாய தன லோகம்.

பிரளயம்—(ரு) நித்தியப்பிரளயம், நைமித்திகப்பிரளயம், திகப்பிரளயம், மகாப்பிரளயம், ஆத்தியந்திரப்பிரளயம்.

பிராணுயாமம்—(௩) பூரகம், கும்பகம், இரேசகம்.

பிராந்தி (மயக்கம்)—(உ) சோபாதிகப் பிராந்தி, நிருபாதிகப் பிராந்தி.

பிராரத்தம் — (௩) இச்சை, அநிச்சை, பரவிச்சை.

பிரிந்திசை வண்ணம்—(உ0) குறில கவற் பிரிந்திசைவண்ணம், நெடிலகவற் பிரிந்திசைவண்ணம், வலியகவற் பிரிந்திசை வண்ணம், மெலியகவற் பிரிந்திசைவண்ணம், இடையகவற் பிரிந்திசைவண்ணம், குறிலொழுகற் பிரிந்திசைவண்ணம், நெடிலொழுகற் பிரிந்திசைவண்ணம், வலியொழுகற் பிரிந்திசை வண்ணம், மெலியொழுகற் பிரிந்திசைவண்ணம், இடையொழுகற் பிரிந்திசைவண்ணம் குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடில் வல்லிசைப் பிரிந்திசைவண்ணம், வலி வல்லிசைப் பிரிந்திசைவண்ணம், மெலிவல்லிசைப் பிரிந்திசை வண்ணம் இடைவல்லிசைப் பிரிந்திசை வண்ணம், குறின் மெல்லிசைப் பிரிந்திசைவண்ணம், நெடின் மெல்லிசைப் பிரிந்திசைவண்ணம், வலிமெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், மெலிமெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடைமெல்லிசைப் பிரிந்திசை வண்ணம்.

பிரிவு-சு-பரத்தையிற் பிரிவு, ஓதற் பிரிவு, காவற் பிரிவு, தூதிற் பிரிவு, துணைவயிற் பிரிவு, பொருள் வயிற் பிரிவு.

பிருதிவியின் தத்துவங்கள் — (ரு) எலும்பு, மாமிசம், நரம்பு, தோல் உரோமம்.

பிறப்பு(எ)தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் இவற்றின் யோனிபேதமெண்பத்துநான்கு நூறாயிரம். அவையாவன, தேவர்பதினன்குநூறாயிரம்; மக்களொன்பது நூறாயிரம்-விலங்கு பத்து நூறாயிரம், புள்பத்து நூறாயிரம், ஊர்வன பதினொரு நூறாயிரம், நீர்வாழ்வன பத்துநூறாயிரம், தாவரமிருபதுநூறாயிரம், அன்றி, தேவர்பதினறு நூறாயிரமெனவுந் தாவரம் பதினெட்டு நூறாயிரமெனவுங் கூறுப.

பின்வருநிலையணி—(உ) சொற்பின் வருநிலை, பொருட்பின் வருநிலை.

பின்வரு விளக்கணிகள் — (ங) சொற்பின்வருவிளக்கு, பொருட்பின் வருவிளக்கு, சொற்பொருட்பின்வருவிளக்கு.

# பீ

பீர்க்குவகை—(ரு) பீர்க்கு, பேய்ப்பீர்க்கு, பெரும் பீர்க்கு, மெழுகு பீர்க்கு, மெழுகுபேய்ப் பீர்க்கு.

# பு

புகையிலைவகை —(சு) கசப்புப் புகையிலை, காரப்புகையிலை, புகையிலை, சுருட்டுப் புகையிலை, நிலப்புகையிலை, காட்டுப்புகையிலை.

புகைவகை—(சு) சுருட்டு, பீடி, சிகரெட்டு, கஞ்சா, அபின், ஊமத்தையிலை.

புங்குவகை — (உ) கொடிப்புங்கு; மணிப்புங்கு.

புடம் - உ–சூரியபுடம், அக்கினி புடம்.

புடல்வகை — (உ) பெரும்புடல், பன்றிப் புடல், பேய்ப்புடல்

புட்பம் (அ) - புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, நீலோற்பலம், அலரி, செந்தாமரை இவை அட்டபுட்பம் எனப்படும்.

புணர்ச்சி—(உ) களவுப்புணர்ச்சி கற்புப்புணர்ச்சி,

புணர்ச்சி—(உ) உள்ளப்புணர்ச்சி, மெய்யுறுபுணர்ச்சி.

புணர்ச்சிகள் (இலக்கணம்)—(உ) வேற்றுமைப்புணர்ச்சி, அல்வழிப் புணர்ச்சி.

புணர்நிலையணியின் வகை —(உ) வினைப்புணர்நிலை, பண்புப் புணர்நிலை.

புண்ணியகர்மம்—(௩) உத்கிருஷ்டம், மத்திமம், சாமானியம்.

புண்ணியத்தோற்றம்-(௪) தவம், ஒழுக்கம், கொடை, கல்வி.

புண்ணியம் - (௪) தானம், கல்வி, தவம், ஒழுக்கம்.

புண்ணியம் - (எ) நகங்கிருதி, தானம், விரதம், சினேகம், நயபோசனம், கமை, உற்சாகம்.

புண்ணியம் - (கூ) எதிர்கொளல், பணிதல், ஆசனத்திருத்தல், தாள்கழுவல், அருச்சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட்டல், புகழ்தல் அமுதமேந்தல் இவை துறந்தோர்க்குச் செய்வனவாம்.

புத்தர்-(உஎ) தண்ணகாரர், மேதங்கரர், சுரணங்கரர், தீபங்கரர், கௌண்டின்னியர், மங்களர், சுமங்களர், இரேவதர், சோபிதர், அநோமதர்சி, பதுமர், நாரதர், பதுமோத்தரர், சுமேதர், சுஜாதர் பிரியதர்சி, அர்த்ததர்சி, தருமதர்சி சித்தார்த்தர், திஷ்யர், புஷ்யர், விபச்சித், சிகி, விருஷபர், ககுந்தர், கோவகாமர், கசியபர், இவர்கள் கௌதம புத்தருக்கு முன்னிருந்தவர்கள்.

புத்தன் பெயர்கள்—(௪0) அகளங்கன், அண்ணல், அரசுநிழலில் இருந்தோன், சினன், ததாகதன், ஆதிதேவன், சினந்தவிர்ந்தோன், வரன், அறிவன், அருங்கலைநாயகன், அருணெறி சுரக்குஞ் செல்வன், அறவன், அனந்த லோசனன். ஆதி, உலகசயன், எண்ணில் கண்ணனுடையோன், ஏகதேவன் சைனன் சாக்கியன், சாந்தன், சினவரன், தருமராசன், பகவன், பார்மிசையோன், பிடகன் புங்கவன், புண்ணிய முதல்வன், புண்ணியமூர்த்தி, புனிதன், பூமிசை நடந்தோன், போதி வேந்தன், மாயாதேவி சுதன், மாரசயன், முக்குற்றங் கழந்தோன், முத்தன், முனி, முனிந்தசினன், முனீந்திரன், முனிவன், மூர்த்தி, வாமன், விநாயகன்.

புரம்-(௩) இருப்புமதில், வெள்ளி மதில், பொன்மதில் இவையே முப்புரம்.

புராணம் - (கஅ) (க) பிரம்மம். (உ) பதுமம். (௩) வைணவம். (௪) சைவம். (ரு) பாகவதம். (சு) நாரதீயம். (எ) மார்க்கண்டேயம். (அ) ஆக்கினேயம் (கூ) பவிடியம் (ய) பிரமகைவர்த்தம். (கக) இலிங்கம். (கஉ) வராகம். (க௩) காந்தம். (க௪) வாமனம். (கரு) கூர்மம். (கசு) மற்சம். (கஎ) காருடம். (கஅ) வாயவியம்.

இவற்றுள் சைவம், மார்க்கண்டேயம், பவிடியம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மற்சம், வாயவியம் என்னுமிப் பத்துஞ் சிவபுராணங்களாம். வைணவம், பாகவதம், நாரதீயம், காருடம் என்னுமிந் நான்கும் விஷ்ணு புராணங்களாம். பிரமம், பதுமம் என்னுமிரண்டும் பிரமபுராணங்களாம் ஆக்கினேயம் என்னுமொன்று அக்கினி புராணம். பிரமகைவர்த்தம் என்னு

மொன்று சூரியபுராணமாம். யோகிகளுக்கு ஞானம் உபதே சிக்குஞ் சிவபெருமான் வெளி பளிங்கு வடிவினராயும் எங்கு முறங்காது பிராமணுதிபராயும் அருட்செய்கை யுடையராயும் விளங்கலால் சிவ புராணங்கள் பத்தும் சுக ஞானங்களுக்கு இடமாயதும், வெண்ணிற முடையதுமாய சாத்விககுண புராணங்களாம். விட்டுணுசரிய ரும் சேஷசயனஞ் செய்வோ ரும், பத்தரை மோகிப்பவரும் பிரமாதம் வஞ்சன முதலியவு டையரும் மருட்செய்கை யுடை யருமாதலால் விட்டுணுபுராணங் கள் நான்கும் உதாசீனரூபமும் கூடகிருத்திய சமர்த்தமும், நித் திரை, சோம்பு, பிரமாதவஞ்ச னங்களும் கருநிறமுடைய தாம தகுண புராணங்களாம். பிரமா செந்நிறமுடையராய், சஞ்சல ரூபியாய் விளங்கலால் பிரமபுரா ணங்கள் இரண்டுஞ் சிவந்த நிறமுடையதும் துக்கத்துக்கிட மாயதும் சஞ்சலரூப முடையது மாகிய இராசத குணபுராணங்க ளாம். அக்கினிதேவனும் சூரிய மூர்த்தியும் முக் குண வடிவின ராய்த் தோன்றலால் அக்கினி புராணமுஞ் சூரியபுராணமும் திரிகுண யுக்தங்களாம். பிரம புராணம் பிராமியம் எனவும் பெயர் பெறும்; பதினுயிரங் கிரந்தங்களையுடைத்து. பதும புராணம் பாத்மம் என்றுஞ் சொல்லப்படும் ஐம்பத்தையா யிரங் கிரந்தமுடையது. வை ணவபுராணம் விஷ்ணுபுரா ணம், விண்டுபுராணம் எனவும் பெயர் ஆருயிரங் கிரந்தங்களை யுடையது. சைவபுராணம் வாயு புராணம் எனவும் பெயர். இரு பத்து நாலாயிரங் கிரந்தங்கள் கொண்டது. பாகவதமானது, இதிகாச பாகவதம், புராண பாகவதம், சங்கிதா பாகவதம், உபசங்கிதா பாகவதம், விட் டுணு ரகசிய பாகவதம், விட்டு ணுயாமள பாகவதம், கௌதம சங்கிதா பாகவதம், தேவி பாகவதம் என எண்பகுப்பின தாயிருத்தலான் அவற்றுள் சுகர் பாகவதமே புராண பாகவத மாம். சிலர் தேவி பாகவதமே யஃதென்றுங் கூறுவர். அஃது பதினெண்ணுயிரங் கிரந்த முடைத்து. நாரதீய புராணம் இருபத்தையாயிரங் கிரந்த முடையது. மார்க்கண்டேய புராணம் முப்பத்தீராயிரங் கிரந்தமுடையது. ஆக்கினேய புராணம் எண்ணுயிரங் கிரந்த முடையது. பவிடிய புராணம் பவிஷ்யத் எனவும் பெயர் பெறும், முப்பத்தோராயிரங் கிரந்தமுடையது. பிரமகைவர்த்த புராணம் பன்னீராயிரங் கிரந்தமுடையது. இலிங்கபுரா ணம் பதிேேனாராயிரங் கிரந்த முடையது. வராகபுராணம் இரு பத்து நாலாயிரம் கிரந்தமுடை யது. கந்தபுராணம் ஓரிலக்க முடையது. வாமன புராணம் பதினுலாயிரங் கிரந்தமுடை யது. கூர்மபுராணம், கௌர்மம், தத்துவ சாகரம் எனவும் பெயர் பெறும் ஆருயிரங் கிரந்தங்களை யுடையது. மச்சபுராணம் மத்ஸ யம் என்றுஞ் சொல்லப்படும் பதி ணுலாயிரங் கிரந்தங்களையுடை யது. காருட புராணம் ஆருயிரங் கிரந்தமுடையது. வாயவிய புராணம், பிராமம், பிரமாண்டம் எனவும் பெயர் பெறும் பன்னீ ராயிரங் கிரந்தமுடையது. இவைகள் வேதாகமங்களின் சாரங்கள் இன்னவென்று நியா யப் பிரமாணங்களால் தேற்றி விளக்குதலால் உபாங்கம் என வும், உபப்பிருங்கணம் எனவும், யாவரானுங் கொள்ளப்படுவது டன் முதல்வனுல் அருளப் பட்டமை பற்றிச் சுத்த வித்தை

யெனவும், பழைய வரலாற்று முறைகளை யுணர்த்தலால் புராணங்கள் எனவும் சொல்லப் படும். புராணம் பதினெட்டிற் குங் கிரந்தத் தொகை நாலிலக் கத் தெண்ணுயிரமாகும். இவை களின் ஏனைய வரலாற்றிலக் கணங்களை யெல்லாங் கூர்மபுரா ணம் இந்திரத் துய்ம்மன் முத்தி யடைந்த அத்தியாயத்தில் "பிரமநற்பதுமம்" என்னுந் திரு விருத்தத்து விசேடவுரைக்கண் கண்டுதெளிக. உபபுராணங்கள் முன் காட்டப்பட்டன.

புராணலக்கணம் - (ரு) உலகத் தோற்றம், ஒடுக்கம், முனிவர், அரசர், மரபு, அவர் சரிதம், மநுவந்தரம்.

புராணலக்கணம் - (ய) சர்க்கம், விசர்க்கம் விருத்தி, இரட்சை, மநுவந்தரம், வமிசம், வமிசாநுச ரிதம், சங்கிதை, ஏது, ஆசிரியம்.

புரி - (எ) அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந் திகை, துவாரகை.

புரி—(அ) ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம், அந்தக் கரண சதுஷ்டயம், பிராணுதி பஞ்சகம், பூதபஞ்சகம், அவித்தை, காமம் மூவித கர்மம் அல்லது வாசனை.

புருடார்த்தம்-(ச) அறம், பொருள் இன்பம், வீடு.

புலத்தவர் - (ரு) பிதிரர், தெய்வம். விருந்து, சுற்றத்தவர், தான். (உ-ம்) "தென்புலத்தார் தெய் வம் விருந்தொக்கருனென்ருங்- கைம்புலத்தாரேம்பறலை"

புலமை—(ரு) பாடற்புலமை, படித் தற்புலமை, வாதுவெல்புலமை, நூற்குரைசெய்புலமை, ஓதுவித் தற் புலமை.

புலமையோர்-(ச) - கவி, கமகன், வாதி, வாக்கி, இவருள் ஆசு, மதுரம், சித்திரம், வித்தார மென்னு நாற் கவிகளைப் பாடு வோன் கவி;-அரும்பொருளைச் செம்பொருணடையாகக் காட்டி விவகரிப்போன் கமகன்; - கார ணமு மேற்கோளு மெடுத்துக் காட்டிப் பிறன்கோண் மறுத் துத் தன்மத நிறுத்துபவன் வாதி;- அறம், பொருள், இன்பம், வீடெனு நாற்றிறங்களைக் கேட்கக் கேட்க விரித்துக் கூறு வோன் வாக்கி.

புலவர் தொழில்—(ங) ஓதல், ஓது வித்தல், நூல் செய்தல்.

புலன் - (ரு) சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

புல்லுருவிகள்—(கங) அத்திமேற் புல்லுருவி, அரசின் மேற்புல் லுருவி, ஆத்திமேற்புல்லுருவி, ஆலின்மேற் புல்லுருவி, ஆவரை மேற்புல்லுருவி, உசிலின்மேற் புல்லுருவி, உடையின்மேற் புல் லுருவி, கள்ளிமேற் புல்லுருவி, காஞ்சிரைமேற் புல்லுருவி, மருதுமேற்புல்லுருவி, வாகை மேற்புல்லுருவி, வேம்பின்மேற் புல்லுருவி, வேலாமேற்புல்லு ருவி.

புல்வகை — (கரு) அறுகம்புல், இராவணன் மீசைப்புல், ஒட்டுப் புல், காவட்டம்புல், சுக்குநாறிப் புல், தரகம்புல், நஞ்சுப்புல், நான்முகப்புல், பீனிசப்புல், பூனைப்புல், மத்தங் காய்ப்புல், முசுறுப்புல், முயற்புல், குதிரை வாலிப்புல், சோதிப்புல்.

புளிப்புச் சரக்குவகை—(உக) சத் சித்சாரம், எரிகாலெண்ணெய், கடற்சுண்ணம், பழம் புளி, காடி, ஊன்சதை, புளிமாங்காய், சங்குசதை, வெண்காரம், துருசு, சுகந்தி, சிலை, புளியரணை, வீரம்,

விந்து, இந்துப்பு, புளியாரை, படிகாரம், மஞ்சட் கருவு, பனங் கள்ளு, ஏமநிமிளை.

புளியம்பிரண்டை வகை—(உ) புளி யம்பிரண்டை, சிவப்புப்புளியம் பிரண்டை.

புறச்சமயம் (சு) தருக்கம், மீமாஞ் சை, ஏகான்மவாதம், சாங்கி யம், யோகம், பாஞ்சராத்திரம்.

புறத்திலக்கணம் (உ) - பதம், புணர்ச்சி. இஃது எழுத்திலக் கண வகையினொன்று.

புறத்திலக்கணம்-(ய) விபூதி ருத் திராக்கம் என்னுஞ் சிவ சின்னங் களைத் தரித்தல், குருவை வழிபடல், சிவபெருமானைத் தோத்திரஞ்செய்தல், சிவநாமங் களை யுச்சரித்தல், சிவபெருமா னைப் பூசை செய்தல், சிவதரு மங்களைச் செய்தல், சிவபுரா ணங்களைக் கேட்டல், சிவாலய தரிசனஞ் செய்தல், சிவனடியா ரிடத்தன்றிப் போசனம் பண் ணுமை, சிவனடியார்களுக்குக் கொடுத்தல் என்பனவாம். உட லிலக்கணமும் பத்து. அவையா வன-சிவபெருமானுடைய பெரு மையைப் பேசுந்தோறும், சிந் திக்குந்தோறும் கண்டம் விம்மு தல். நாத்துடித்தல், உதடு துடித் தல், சரீரநடுங்குதல், உரோமஞ் சிலிர்த்தல், குறுவேர்வை கொள் ளல், நாக்குத் தழுதழுத்தல், ஆனந்தக் கண்ணீர் சொரிதல், வாய்விட்டழுதல், பரவசமாய்த் தன்னை அயர்த்தல், என்பவை களாம்.

புறப்புறச்சமயம்-(சு) உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசா ரம், மாத்மிகம், வைபாடிகம். ஆருகதம்.

புறப்பொருட்டிணை—(எ) வெட்சித் திணை, வஞ்சித்திணை, உழி ஞைத்திணை, தும்பைத்திணை. வாகைத்திணை, காஞ்சித்திணை, பாடாண்டிணை.

புறப்பொருள்வகை - (அ)-பசுக்க வர்தல், நிரைமீட்டல், பகைமேற் செல்லல், பகை முன்னெதிருன் றல், தன்னரண்காத்தல், பகை யரண் வளைத்தல், பொருதல். போர் வெல்லல்.

புனைவிலி புகழ்ச்சியணி—(ரு) ஒப்பு மைப் புனைவிலிபுகழ்ச்சி, பொ துப்புனைவிலிபுகழ்ச்சி, சிறப்புப் புனைவிலிபுகழ்ச்சி, காரணப் புனை விலிபுகழ்ச்சி, காரியப்புனைவிலி புகழ்ச்சி.

புன்னைவகை—(உ) புன்னை, சுர புன்னை.

# பூ

பூ - (ரு) கொடிப்பூ, கோட்டுப்பூ நீர்ப்பூ, புதற்பூ; நிலப்பூ என ஒன்றுகூட்டி ஐந்தென்பாரு முளர்.

பூசணிவகை—(சு) பூசணி, கோ டைப்பூசணி, சருக்கரைப் பூசணி, நிலப்பூசணி, பெரும் பூசணி, தருப்பூசணி.

பூசைகள்—(ரு) தியான பூசை, விக்கிரகபூசை, புராணபூசை, திருவடிபூசை, தோத்திரபூசை.

பூண்டுவகை — (கo) அமலைப் பூண்டு, கணப்பூண்டு, கல்லுரு விப்பூண்டு, கீரிப்பூண்டு. கோ புரப்பூண்டு, பூனைப்பூண்டு, கோ மிக்காற்பூண்டு, தீமுறிப்பூன்டு, தேங்காய்ப்பூண்டு.

பூதம் - (ரு) வேதாளம், பிரம்ம ரக்ஷஸ், இருளன், மாடன், கருப் பன்.

பூதம் - (ரு)-நிலம். நீர், தீ, காற்று, விசும்பு.

பூமி - (கஉ) - சைவீபூமி, பிரம்ம பூமி. வைஷ்ணவபூமி, ஐந்திர பூமி, பசுபூமி, பூதபூமி, ஆசுர பூமி, பைசாசபூமி, ராக்ஷஸபூமி, வாயுபூமி, வருண பூமி, ஆக் நேயபூமி.

பூவகை—(எ) இலவங்கப்பூ, மனோ ரஞ்சிதப்பூ, குங்குமப்பூ, சிறு நாகப்பூ, செண்பகப்பூ, ரோ ஜாப்பூ, மதனகாமப்பூ

பூவரசு —(ங) பூவரசு, மலைப்பூ வரசு, செடிப்பூவரசு.

பூஜை - (உ) - பாஹ்யபூஜை, அந் தரபூஜை.

# பெ

பெண்கள் பருவம் - (ச) வாலை, தருணி, பிரவிடை, விருத்தை.

பெண்கை—(அ)-கடகம், சுகதுண் டம், காங்கூலம், பிறைக்கை, அராளம், பக்கம், தாம்பிரசூடம், மான்றலை.

பெண்பாற் கூற்றுக் கைக்கிளை— (கo) காண்டல், நயத்தல், உட் கோள், மெலிதல், மெலிவொடு வைகல், காண்டல், வலித்தல், பகன்முனிவுரைத்தல், இரவுநீடு பருவரல், கனவினரற்றல். நெஞ்சொடு மெலிதல்.

பெண்பாற்பிள்ளைத்தமிழ் - (ய) காப்பு, செங்கீரை, தால், சப் பாணி, முத்தம், வாரானை, அம் புலி, அம்மானை,நீராடல், ஊசல்.

பெண்கள்வகை—(ரு) தெய்வசாதி மக்கட்சாதி, இராக்கதசாதி, பூதசாதி, விலங்குசாதி.

பெண்வகை -(ச) பதுமினி, சித் தினி, சங்கினி, அத்தினி.

பெண்வழிச் செல்வோரால் செய்ய முடியாதன - (உ) நண்பர்கட்கு உதவி, அறம்.

பெயர்—(உ) முதற்பெயர், சினைப், பெயர்.

பெயர்— (எ) உயர்திணையியற் பெயர், அஃறிணையியற் பெயர், உயர்திணைச் சாதி யொருமை, அஃறிணைச் சாதியொருமை, உயர்திணைச் சாதிப் பன்மை, அஃறிணைச் சாதிப் பன்மை, பொதுப் பெயர்.

பெயர்ச்சொல்— (உ) இடுகுறிப் பெயர், காரணப் பெயர்.

பெயர்ப்பகுபதம்—(சு) பொருட் பெயர், இடப் பெயர், காலப் பெயர், சினைப் பெயர், குணப் பெயர், தொழிற் பெயர்.

பெரியோரியல்பு - (எ) - அறம் பொருள், இன்பம், அன்பு, புகழ் மதிப்பு, பொறுமை.

பெருங்கல விலக்கணம் - (எ) கோட்டின தளவு பன்னிரு சாண், வணரளவுசாண், பத் தரளவு பன்னிருசாண் இப்பெற் றிக் கேட்ட ஆணி, திவவு, உந்தி ஆயிரங் கோற்றொடுப்பு.

பெருங்காப்பியம் -(ரு) - சிந்தா மணி, சிலப்பதிகாரம், மணி மேகலை, வளையாபதி, குண்டல கேசி.

பெருந்தானம், - (அ) நெஞ்சு, மிடறு, நா,மூக்கு, அண்ணுக்கு, உதடு பல், தலை.

பெருந்திணை பெண்பாற் கூற்றுக் கைக்கிளை— (கக) வேட்கை முந்துறுத்தல், பின்னிலை முய றல், பிரிவிடை யாற்றல், வர வெதிர்ந்திருத்தல், வாராமைக் கழிதல், இரவுத் தலைச் சேறல்,

இல்லவை நகுதல், புலவியுட் புலம்பல், பொழுது கண்டிரங்கல், பாத்தையை ஏசல், கண்டு கண் சிவத்தல், காதலிற் களித்தல், கொண்டகம் புகுதல், கூட்டத்துக் குழைதல், ஊடலுணெகிழ்தல், உரை கேட்டு நயத்தல், பாடகச் சீறடி பணிந்த பினிரங்கல், பள்ளி மிசைத் தொடர்தல், செல்கென விடுத்தல்.

பெருமிதம்—(ச) கல்வி, தறுகண், இசை, கொடை.

பெருமைக்கு ஏதுவாகிய தர்மம்—(கூ) செல்வம், அபிசனம், குடும்பம், அழகு, தவம், நூற்பயிற்சி தேசசு, பிரபாவம், பலம், பௌருஷம், புத்தி, யோகம்.

பெரும்பண்ணின் வகை - பாலையாழ், செந்து, மண்டலியாழ், பௌரி, மருதயாழ், தேவதாளி, நிருபதுங்கராகம், நாகராகம், குறிஞ்சியாழ், ஆசாரி, சாயவேளர், கொல்லி, கின்னராகம், செவ்வழி, மௌசாளி, சீராகம், சந்தி.

பெரும்பாடு (நோய்)—(ச)வாதப் பெரும்பாடு, பித்தப் பெரும்பாடு சிலேட்டுமப் பெரும்பாடு, தொந்தப் பெரும்பாடு.

பெருவயிறு—(உஉ) (மகோதரம் உஉ) வாதமகோ தரம், பித்தமகோதரம், சிலேட்டும மகோதரம், வாத சிலேட்டும மகோதரம், பித்த சிலேட்டும மகோதரம், தொந்த மகோதரம், கல் மகோதரம், வில்மகோதரம், வழுவை மகோதரம், நழுவை மகோதரம், நீராம்பல் மகோதரம், ஊராம்பல் மகோதரம், வெபுப்புபாவை மகோதரம், குலேமுட்டி மகோதரம், கீழ்க் கவிசை மகோதரம், மேற் கவிசை மகோதரம், பக்கக் கவிசை மகோதரம், பழுக் கவிசை மகோதரம், பெருவயிற்று மகோதரம், சூல் மகோதரம், வல்லி மகோதரம், நச்சு மகோதரம், பாண்டு மகோதரம் சோபை மகோதரம், காமாலை மகோதரம், குன்ம மகோதரம், உதர மகோதரம், கூர்ம மகோதரம், பிலிகை மகோதரம், சுர மகோதரம், சல மகோதரம், மாமிச மகோதரம்.

பெறற்கரும்பேறு—(உ0) ஆயுள், ஆரோக்கியம், ஐசுவரியம், ஆண்மை, பலம். சீர்த்தி, மேன்மை, தெளிவு, காந்தி, சௌபாக்கியம், தாட்சணியம், தயை, பொறுமை, சத்தி, நீதி, பிரமதேசசு, உதாரம், காம்பீர்யம், ஞானம், விஞ்ஞானம்.

# பே

பேடியிலக்கண வகை (உகு)- நச்சுப் பேசல், நல்லிசையோர்தல், அச்சுமாறல், ஆண் பெண்ணுதல், ஒருகை வீசி நடத்தல், தலையிலொருகை வைத்தல், எதிர்ந்தோரைக் கண்டுவிலகல் எதிர்ந்தோர் மேற் செல்லுதல், பார்வை வேறுபடுதல், பிறருக்கு நடுநடுங்கிச் சுழன்று திரிதல், பிறரைக் கண்டு நகைத்தல், நாணுதல், பலநாடகஞ் செய்தல், பக்கம்பார்த்தல், பதுங்கித் திரிதல், காரணமில்லாமற் பலவற்றைக் கோபங்கொண்டு பேசல், தன் முலையைத் தானே வருத்தல், அசக்கல், அழுதல், சோர்ந்தருவருத்தல், குறுக்கிக் கூட்டிப் பார்த்தல், இடையிலொருகைவைத்தல். அதனை வாங்கல், இரங்கிப் பேசல், எல்லெல்லென்று பாடுதல்.

பேதம்-(௩) சுகதபேதம், சுசாதி பேதம், விசாதிபேதம்; அவை யாவன - மரத்துக் கிலையரும்பு பூ காய்கனி முதலிய சுகத பேதம். மரத்துக்கு மறுமரஞ் சுசாதி பேதம். மரத்துக்குக் கல் விசாதிபேதம்.

பேதன மூலிகை — (அ) கோழிய வரை, தரைப் பசளை, வட்டத் துத்தி, சங்கஞ்செடி, மாவிலிங் கம் நீர்மேல் நெருப்பு, சிந்தில், பாதிரி.

பேராயம் - (அ) கரணத்தியல்வர், கருமாதிகாரர், கனகச் சுற்றம், கடை காப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், இவுளிமறவர். இவை எண் பேராய மெனப்படும்.

பேறு - (௧௬) - புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை. வாழ்நாள்.

# பொ

பொடுதலைவகை — (௩) சிறு பொடுதலை, பெரும் பொடுதலை, செம்பொடுதலை.

பொதுப்பாயிரம் -(ஐ)நூல்வரலாறு, ஆசிரியனிலக்கணம், நுவலுந் திறன், கொள்வோன்றிறன், கோடன் மரபு.

பொதுவியற்றிணை—(௧௨) போந் தை, வேம்பு, ஆர், உன்ன நிலை, ஏழகநிலை, கழனிலை, கற்காண்டல், கற்கோணிலை, கன்னீர்ப்படுகல், கன்னடுதல், கன்முறைப் பழிச்சல், இற் கொண்டுபுகுதல்.

பொரிகள் — (௩) அரிசிப்பொரி, சோளப்பொரி, நெற்பொரி.

பொருட்பாலின் இயல்கள் - (௩) அரசியல், அங்கவியல், ஒழி பியல்.

பொருளாராய்ச்சிவகை(அ)திணை பால் செய்யுள், நிலம், காலம், வழு,வழக்கு, இடம், இவற்றுள் திணையிரண்டு. பால் பதினான்கு, செய்யுளறுவகை, நிலன், நால் வகை. காலம் பன்னிரண்டு, வழு பதினான்கு, வழக்கிருவகை.

பொருளின் பொதுத்தொழிற்பண்பு- (௯) தோன்றல், மறைதல், வளர்தல், சுருங்கல், நீங்கல், அடைதல், நடுங்கல், இசைத் தல், ஈதல்.

பொருள் - (௨)கல்விப் பொருள், செல்வப் பொருள்.

பொருள்(௪)-அறம், பொருள், இன் பம், வீடு.

பொருள் - (அ)வேர், கிழங்கு பட்டை, பிசின், இலை, பூ, கனி, வித்து. இவையே எண் பொரு ளெனப்படும்.

பொருள் - (௯)பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம். இவை தருக்கத்திற்கொண்ட பிரமேயப், பொருள்கள்.

பொருள்கள்-(௩) பதி. பசு, பாசம்.

பொருள்கோள் - (௯) நிரனிறை, சுண்ண மொழிமாற்று, அடிமறி மாற்று, அடிமொழி மாற்று, அளைமறிபாப்பு, விற்பூட்டு, யாற் றுப்புனல், தாப்பிசை, கொண்டு கூட்டு.

பொருள் வகை - (ச) நாடகம், பிரகரணப் பிரகரணம், பிரகரணம் அங்கம்.

பொருள்வயிற் பிரிவு - (உ0) வாட்டங் கூறல், பிரிவு நினைவுரைத்தல், ஆற்றாது புலம்பல், ஆற்றுமைகூறல், திணைபெயர்த்துரைத்தல், பொருத்தமறிந்துரைத்தல், பிரிந்தமைகூறல், இரவுறு துயரத்திற் கிரங்கியுரைத்தல், இகழ்ச்சி நினைந்தழிதல், உருவு வெளிப்பட்டு நிற்றல், நெஞ்சோடு நேர்தல், நெஞ்சொடு புலத்தல், நெஞ்சோடுமறுத்தல், நாளெண்ணி வருந்தல், எதிர்வரவுகண்டிரங்கியுரைத்தல், பருவங்கண்டிரங்கல், முகிலொடு கூறல் தேர்வரவுகூறல், இளைய ரெதிர்கோடல், உண்மகிழ்ந்துரைத்தல்.—(திரு - ர்)

பொழுது - (உ) காலை. மாலை.

பொழுது - (ஏ) மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு இலவயே. அத்தமயகால முதலொவ்வொன்று பப்பத்து நாழிகையாக முறையேகொள்க. இவற்றைச் சிறுபொழுதென்பர். கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னு மாறினையும். இவை பெரும்பொழுதென்பர்.

பொறி — (ஙு) மனம், வாக்கு, காயம்.

பொறி - (ரு) மெய். வாய், கண், மூக்கு, செவி.

பொறிக்காட்சி வகை — (சு) சையோகம், சையுத்த சமவாயம், சையுத்த சமவேத சமவாயம். சமவாயம், சமவேத சமவாயம், விசேடண விசேடிய பாவம், இவற்றுள்:

க. சையோகம் ஆவது யாதொரு பொழுது கடம் விடயமாயிருக்கிற ஞானமான துண்டாக நின்றதப்பொழுது கண் இந்திரியம், கடம், விடயம் இந்த விரண்டினுடைய கூட்டுறவு இது பிரிந்திருக்கிற வத்துக்களினுடைய சம்பந்தமாகையாலே சையோகமெனப் பெயராயிற்று. சையுத்த சமவாயமாவது யாதொரு பொழுது கண்ணுலே கடத்திலேயிருக்கிற உருவமானது அறியப்படுகின்றதோ அப்பொழுதே கண் இந்திரியம் கடத்தையடைந்திருக்கிற நிலாரூபம் விடயம் இவைகளினுடைய சம்பந்தம். சையுத்த சமவேத சமவாயமாவது யாதொரு பொழுது கண்ணுலே கடத்தையடைந்திருக்கிற உருவத்திலேயிருக்கின்ற ருபத்துவமானது அறியப்படுகின்றது. அப்பொழுது கண் இந்திரியம் உருவத்துவம் விடயம் இவைகளினுடைய சம்பந்தம் சமவாயமாவது — எக்காலத்திற் சோத்திரேந்திரியத்தினுலே சத்தமானது அறியப்படுகிறதோ அப்போது சோத்திரம் இந்திரியம் சத்தம் விடயம் இவைகளினுடைய சம்பந்தமாம். சமவேதசமவாயமாவதுஎக்காலத்தில் சோத்திரத்திலே சத்தத்தின்றன்மை காணப்படுகின்றதோஅப்போது சோத்திரம் இந்திரியம், சத்தத்துவ சாமானியம் விடயம் இவைகளினுடைய சம்பந்தஞ் சோத்தரத்திலே சமவேகமாயிருக்கிற சத்தத்திலே சத்தத்துவஞ் சமவாய சம்பந்தமாயிருக்கையினுலென வறிக. விசேடண விசேடிய பாவமாவது எக்காலத்திற் கண்ணுடனே கூடியிருக்கிற பூமியிலே கடத்தினுடைய சுபாவமான தறியப்படுகின்றது. அஃதாவது இந்தப் பூமியிற் கடமில்லையென்றுல் அப்போது கண்ணுடனே கூடியிருக்கிற பூமிவிசேடணம், கடாபாவம்

விசேடியம், கடாபாவத்தை யுடையது, பூதலம் என்றபோது கண்ணுடனே கூடின பூமி விசேடியம். கடாபாவம் விசேடணம்; இதன் விரிவை யெல்லாம் பௌட்கராகமத்திற் காண்க.

பொன் இலக்கணம் - (ரு) புடத்திற்கு நிற்றல், ஆணிக்குறல், நின்றுருகல், கனங்காட்டல், கம்பிக்கு வருதல்.

பொன் வகை - (௪) ஆடகம், கிளிச்சிறை, சாதருபம், சாம்பூநதம்.

பொன்னுலகப் பொருள்கள் - (ரு) சங்கநிதி, பதுமநிதி, கற்பகதரு, காமதேனு. தேவாமிர்தம்

# போ

போககரணம் - (௬௪) ஆலிங்கனம் - ரு, அதரபானம் - கக, அமிர்தநிலை கசு, நகக்குறி,- அ, பற்குறி- அ, குரல் - அ, தாடனம் - அ. இதனை "ஆலிங்கன மைந்தும் மிதழ்ப் பானம்பதினொன்று மமிர்தம் பதினறு முகிரெழுதுங்குறி யெட்டுங், கோலம்புனை தந்தக் குறி யெட்டுங் குரலெட்டுங் குவி தாடன மிருநான் கொடு கூடுங் கலவிக்கே" என்னுஞ்செய்யுளா னறிக. விரிவுகள் மதனுகமத்தும், கந்தபுராணம், 'இந்திர புரிப் படலத்தும், பார்க்கவபுராணம் இந்திரன் சாபம் பெற்ற படலத்தும், பிறவற்றும் உரைக்கப்பட்டமை காண்க.

போகபூமி —(௬)- ஆதியரி வஞ்சம், நல்லரி வஞ்சம், ஏமத வஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவம், உத்தர குருவம்.

போகம் - (அ) பெண், ஆடை, அணிகலன், போசனம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி.

போதப்பிரகாரம் — (௩) உத்தேசம், இலக்கணம், பரீட்சை. அவையாவன - தான் விவகரிக்கும் பொருளைப் பெயர் மாத்திரங் கூறலுத்தேசம், அப்பொருளின் சிறப்புத் தன்மை கூறலிலக்கணம், அப்பொருளிலிவ்விலக்கணமுண்டோ வின்றோவெனப் பார்த்தல், பரீட்சை.

போது - (௨) பகல், இரவு.

போர்வகை — (௨) படைக்கலப் போர், மற்போர்.

# ம

மகளிரான் மலர் மரம் -(௧௦)- மகிழ மரஞ் சுவைக்க, ஏழிலம் பாலை மரம் நட்புற, பாதிரிமரம் நிந்திக்க, முல்லைக்கொடி நகைக்க, புன்னையாட, குராவணைக்க, அசோகுதைக்க, குருக்கத்தி பாட, மரா பார்க்க, சண்பகம் நிழல்படத் தளிர்த்துப் பூப்பனவாம்.

மகாயஞ்ஞம் - (ரு) தேவயஞ்ஞம், இருஷியஞ்ஞம், பிதிர்யஞ்ஞம், மானுஷயஞ்ஞம், பூதயஞ்ஞம்.

மகாவாக்கியங்கள் - (௪) அகம் பிரஹ்மாஸ்மி, தத்துவமசி, பிரஞ்ஞானம் பிரமம், அயமாத்மா பிரமம்.

மக்கட் பிறப்பு - (௩) ஆண் பெண், அலி.

மக்களின் வகை - (௬) அவுரசன் க்ஷேத்திரசன், தத்தன், குறித்திமன், கூடசன், அபவிந்தா.

மக்களின் வகை வேறு - (௬) கானீனன், சகோடகன், தத்தன், கிறித்திமன், பவனற்பவன், அயந்தத்தன், சவுந்திரன்.

மங்கலச் சொல் - (௨௨) திரு, யானை, தேர், பரி, கடல், மலை, மணி, பூ, புகழ், சீர், மதி, நீர், எழுத்து, பொன், ஆரணம், சொல், புயல், நிலம், கங்கை, உலகம், பரிதி, அமிழ்தம், இவைகளும் இவற்றின் பரியாயப் பெயரும், பிறவு மாம்.

மங்கலம் - (அ) சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல்; இவையே யட்டசுபமென உரைக்கப்படும்.

மங்கலம் - (௨௪) முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், சிங்காசனம், கடல் என்பன அரசர்க்குரிய மங்கலப் பொருள்களாம்.

மங்களாசரணை - (௩) வாழ்த்து, வணக்கம், செயப்படுபொருள்.

மஞ்சள் வகை - (௬) விரலிமஞ்சள், கிழங்கு மஞ்சள், சருகு மஞ்சள், மரமஞ்சள், கஸ்தூரி மஞ்சள், குளிக்கு மஞ்சள்.

மனஞ்சிறப்புரைத்தல் - (௯) மணமுரசு கூறல், மகிழ்ந்துரைத்தல், வழிபாடு கூறல், வாழ்க்கை நலங்கூறல், காதல் கட்டுரைத்தல், கற்பறிவித்தல், கற்புப் பயப்புரைத்தல், மருவுதலுரைத்தல், கலவியின்பங்கூறல். (திரு-ர்)

மடக்கணியின் வகை — (௪௪) முதலடி முதன்மடக்கு, இரண்டாமடி முதன்மடக்கு, மூன்றுமடி முதன் மடக்கு, ஈற்றடி முதன் மடக்கு, முதலடியும் இரண்டாமடியுமுதன் மடக்கு, முதலடியு மூன்றுமடியும் முதன்மடக்கு, முதலடியும் ஈற்றடியும் முதன் மடக்கு, மூன்றுமடியும் நான்காமடியும் முதன்மடக்கு, இரண்டாமடியும் மூன்றுமடியும் முதன் மடக்கு, இரண்டாமடியும் ஈற்றடியும் முதன் மடக்கு, ஈற்றடியொழித்து ஏனை மூன்றடியும் முதன் மடக்கு, முதலயலடியொழிந்துஏனை மூன்றடியுமுதன் மடக்கு, முதலடி யொழித்து ஏனை மூன்றடி முதன்மடக்கு.

மடக்கின் வேறுபாடுகள் - (௧௨) ஓருயிர் மடக்கு, குற்றுயிரான் வந்த மடக்கு, நெட்டுயிரான் வந்த மடக்கு, ககரவிகற்பத்தான் வந்த மடக்கு, தகரவிகற்பத்தான் வந்த மடக்கு, ஈரெழுத்தான் வந்த மடக்கு, மூன்றெழுத்தால் வருவது, நான்கெழுத்துக்களால் வருவது, ஒற்றெழுத்தின்றி வருவது, வல்லினத்தால் வருவது, மெல்லினத்தால் வருவது, இடையினத்தால் வருவது.

மடற்றிறம் - (௯) ஆற்றுதுரைத்தல், உலகின்மேல்வைத்துரைத்தல், தன்துணிபுரைத்தல், மடலேறும் வகையுரைத்தல், அருளரிதெனவிலக்கல், மொழிநடையெழுதலரிதென விலக்கல், அவயமெழுதலரிதெனவிலக்கல், உடம்படாது விலக்கல், உடம்பட்டு விலக்கல். (திரு—ர்)

மணப்பொருத்தம் - (௧0) தினம், கணம், மாகேந்திரம், ஸ்திரீ தீர்க்கம், யோனி, ராசி, ராசியதிபதி, வசியம், ரச்சு, வேதை. இவை தசப்பொருத்தம் என்று கூறப்படும்.

மணம் - (அ) பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தரு

வம், ஆசுரம், இராக்கதம், பைசாசம்; இவற்றுட் பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது பிரமமணம்; தலைமகனினத்தார் வேண்டத் தலைமகளினத்தாருட்பட்டவளைத் தீமுன்னர்க் கொடுப்பது பிரசாபத்தியமணம். ஒன்றிரண்டு பசுவுமெருதும்வாங்கிக்கொண்டு கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பதாரிடமணம்; வேள்வியால் வந்த கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது தெய்வமணம்; கொடுப்பாருங் கேட்பாருமின்றியிருவருந்தனியிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடுவது காந்தருவமணம்; பெண்ணுக்குப் பொன் பூட்டிச் சுற்றத்தார்க்குப் பொன் வேண்டுவன கொடுத்துக் கொள்வ தசுரமணம்; பெண்ணும் பெண்ணினத்தாருமுடன் படாமல் வலிதிற்கொள்வ திராக்கதமணம், துயின்றாளைச் சென்று கூடுவது பைசாச மணம்.

மணி - (க) கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரதகம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம். இவை நவமணிகள் எனப்படும். வைரம் எல்லாவற்றினும் சிறந்ததாம். கோமேதகமும் பவழமும் எல்லாவற்றினும் தாழ்ந்தனவாம். மரகதமும் மாணிக்கமும் முத்தும் தலையாய மணிகளாம். இந்திர நீலமும், வைடூரியமும் இடையாய மணிகளாம்.

மண்டலம் - (ந)அக்கினி மண்டலம், ஆதித்த மண்டலம், சந்திர மண்டலம்.

மண்டலம் - (ஞ) - பூமண்டலம், ஜலமண்டலம், அக்கினி மண்டலம், வாயு மண்டலம், ஆகாச மண்டலம்.

மண்டலம் — (எ) வாயு மண்டலம். வருண மண்டலம், சந்திர மண்டலம், சூரிய மண்டலம், நட்சத்திர மண்டலம், அக்கினி மண்டலம், திரிசங்கு மண்டலம்.

மதநீர் — (எ) கன்னமிரண்டு, கண்ணிரண்டு, கரத்துவாரமிரண்டு, கோசம் ஒன்று, என்னும் ஏழிடத்திலிருந்து யானைக்குத் தோன்று மதநீர்.

மதம் - (எ) உடன்படல், மறுத்தல், தாஅனுட்டித்தனுதுநிறுப்பு, பிறர்தம்மத மேற்கொண்டு களைவு, இருவர் மாறுகொளொரு தலைதுணிவு, பிறநூற் குற்றங் காட்டல், பிறிதொடுபடான் தன் மதங்கொளல்.

மதம் - (அ) குலம், ரூபம், இளமை, கல்வி, செல்வம், மேன்மை, சகாயம், சகசம். (இவைகளாலாவது).

மதுரை - (ந) வடமதுரை, தென் மதுரை, மானுமதுரை, (வானர மதுரை).

மதியுடம்படுத்தல் – (கo) - பாங்கியிடைச் சேறல், குறையுறத் துணிதல், வேழம் வினுதல், கலைமான்வினுதல், வழிவினுதல், பதி வினுதல், பெயர் வினுதல், மொழி பெறுது கூறல், கருத்தறிவித்தல், இடைவினுதல். (திரு—ர்)

மத்தியகால தீர்த்தங்கரர் - (உச) ருடபர், அசிதர், சம்பவர், அபிநந்தனர், சுமதி, பத்மப்பிரப, சுபார்சுவ, சந்திரப் பிரப, புட்பதந்த, சீதள சிரேயாம்ச, வாஸுபூச்ய, விமல, அநந்த, தர்ம, சாந்தி, குந்துநாத; அர, மல்லி, முனுஸுவிரத, நமி, நேமி, பார்சுவ, வர்த்தமானர். இவர்கள் வர்த்தமான தீர்த்தங்கரர் எனவும் வழங்கப்பெறுவர்.

மத்துவ மடங்கள் - (க) வியாச ராய மடம், சுமதீந்த்ர மடம், பத்மநாப தீர்த்த மடம், மாதவ தீர்த்தமடம், அட்சோப்யதீர்த்த மடம், சத்யபூர்ணாசாரியர் மடம்.

மத்துவாசாரிய வழிமுறையும் மடங்களும் — (சக) நாராயணன், நான்முகன், சனகசனந்தநாதிகள், துர்வாசர், கருடவாகன தீர்த்தர், கைவல்யநாததீர்த்தர், ஞானீச தீர்த்தர், பரதீர்த்தர், சத்யப்ரஞ்ஞ தீர்த்தர், பிராஞ்ஞ தீர்த்தர், அச்யுதபிரேட்ச தீர்த்தர், ஆநந்த தீர்த்தாசாரியர், ஆநந்த தீர்த்தர், பத்மநாப தீர்த்தர், நரகரி தீர்த்தர், மாதவ தீர்த்தர், அட்சோப்ய தீர்த்தர், சய தீர்த்தர், வித்யாதிராச தீர்த்தர், கவீந்திர தீர்த்தர், வாகீச தீர்த்தர், இராமசந்திர தீர்த்தர், வித்தியாநிதி தீர்த்தர், இரகுநாத தீர்த்தர், இரகுவர்ய தீர்த்தர், இரகூத்தம தீர்த்தர், வேத வியாச தீர்த்தர், வித்யாதிபதி தீர்த்தர், வித்யாதீச தீர்த்தர், வேதநிதி தீர்த்தர், சத்தியவிருத தீர்த்தர், சத்யநிதி தீர்த்தர், சத்யநாத தீர்த்தர், சத்யாபிநவ தீர்த்தர், சத்யபூரண தீர்த்தர், சத்விசய தீர்த்தர், சத்தியப்பிரிய தீர்த்தர், சத்யபோத தீர்த்தர், சத்யசந்த தீர்த்தர், சத்யவர தீர்த்தர், சத்யதர்ம தீர்த்தர், சத்யசங்கல்ப தீர்த்தர், சத்ய சந்துஷ்ட தீர்த்தர், சத்யநாரா யண தீர்த்தர், சத்யகாம தீர்த்தர், சத்தியேஷ்ட தீர்த்தர், சத்ய பராக்ரம தீர்த்தர், சத்ய விரத தீர்த்தர், சத்யதிர தீர்த்தர்.

மத்திமதான வகை - (ரு) ஆதுலர், அந்தகர், அவயவ மிழந்தவர், பற்றுக்கோடில்லாதவர், பெண்கள் என்பார்க்குக்கொடுத்தல்.

மநுக்கள் - (கச) சுவாயம்பு மநு, சுவரோசிஷ மநு, உத்தமன், தாமதன், ரைவதன், சாக்ஷுஷ மநு, வைவச்சுதன் சாவர்ணி மநு, தட்சாசாவர்ணி மநு. பிரம்ம சாவர்ணி தர்ம சாவர்ணி மநு, ருத்ரசாவர்ணி மநு; தேவசாவர்ணிமநு, திர சாவர்ணி மநு.

மந்திரமுடிகள் — (எ) நம் சுவாகா, வஷ்ட, வௌஷ்ட, சுத, உம், பட்.

மயக்கம் - (உ) - வேற்றுநிலை மெய்ம்மயக்கம், உடனிலை மெய்ம்மயக்கம்.

மயங்கிசை வண்ணம் — (உ0) குறிலகவன் மயங்கிசை வண்ணம், நெடிலகவன் மயங்கிசை வண்ணம், வலியகவன் மயங்கிசை வண்ணம், மெலியகவன் மயங்கிசை வண்ணம், இடையகவன் மயங்கிசை வண்ணம், குறிலொழுகன் மயங்கிசை வண்ணம், நெடிலொழுகன் மயங்கிசைவண்ணம், வலியொழுகன் மயங்கிசை வண்ணம், மெலியொழுகன் மயங்கிசை வண்ணம் இடையொழுகன் மயங்கிசை வண்ணம், குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம், நெடில் வல்லிசை மயங்கிசை வண்ணம், வலிவல்லிசை மயங்கிசை வண்ணம், மெலிவல்லிசை மயங்கிசை வண்ணம், இடைவல்லிசை மயங்கிசை வண்ணம், குறின் மெல்லிசை மயங்கிசை வண்ணம், நெடின் மெல்லிசை மயங்கிசை வண்ணம், வலிமெல்லிசை மயங்கிசை வண்ணம், மெலி மெல்லிசை மயங்கிசை வண்ணம், இடைமெல்லிசை மயங்கிசை வண்ணம்.

மரகதக்குணம் - (அ) நெய்த்தல், மயிற்கழுத்தொத்தல், பசுமை யாதல், பொன்மை, அதனுட் பசுத்தல், வக்கி பாய்தல், பொன்வண்டின் வயிறுபோலி ருத்தல், தெளிதல்.

மரகதக்குற்றம் - (அ) கருகல், வெள்ளை, கல், மணல், கீற்று, பரிவு, தார், சாயையிறுகல்.

மரபறியாத அடியார்கள் — (கூ) எறிபத்த நாயனுர், குலச்சிறை நாயனுர், பெருமிழலைக்குறும்ப நாயனுர். தண்டியடிகணுயனுர், கணல்புல்ல நாயனுர், காரி நாயனுர்.

மரபறியாத அடியார்கள் — (எ) பொய்யடிமையில்லாத புலவர், பத்தராய்ப்பணிவார், பரம னேயே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலு மடிசார்ந்தார்.

மரபு - (உ) தந்தை வழி, தாய்வழி.

மருட்கை - (ச) புதுமை, பெருமை சிறுமை, ஆக்கம்.

மருட்பா - (ச) புறநிலை வாழ்த்து மருட்பா, கைக்கிளை மருட்பா, வாயுறை வாழ்த்து மருட்பா, செவியறிவுறூஉ மருட்பா.

மருதயாழ்த் திறன் வகை - (கசு) தக்கேசி, கொல்லி, ஆரியகுச்சரி நாகதொனி, சாதாளி, இந்த ளம், தமிழ் வேளாளர் கொல்லி, காந்தாரம், சுார்ந்தபஞ்சமம், பாக்கழி, தத்தள பஞ்சமம் மாதுங்க ராகம், கௌசிகம், சீகாமரம் சாங்கிமம்.

மருதமர வகை - (ச) மருதமரம், கருமருதமரம், பிள்ளைமருதமரம், விடமருதமரம்.

மருதோன்றி — (ஙு) கருமரு தோன்றி, வெண்மரு தோன்றி, செம்மரு தோன்றி,

மருத்துக்கள் — (எ) கிழக்குத் தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ் மேல், பல யோனியுயிர்.

மருத்துவ ஆராய்ச்சிக்கு இடம் - (அ) நாடி, முகம், மலம், மூத் திரம், கண், நா, உடல், தொனி.

மருத்துவ முறைப் பாகுபாடு - (ச) உற்றவன், தீர்ப்பான், மருந்து, உடன்செல்வோன்.

மருந்துக்காய் - (ச) தாணிக்காய், மாச்சக்காய், மாசிக்காய், கடுக் காய்.

மருந்து - (ஙு) சல்லிய காணி, சந்தான கரணி, மிருதசஞ்சீ வினி.

மருந்துவகைகள் - (அ) சீரகம் கருஞ்சீரகம், சுக்கு, மிளகு, திப்பிலி, இந்துப்பு, பெருங்காயம், ஓமம்.

மருந்துவகை வேர்கள் — (கஅ) கொடிவேலி, எருக்கு, நொச்சி, முருங்கை, மாவிலிங்கம், சங்கங் குப்பி, தழுதாழை, குமிழ், பாதிரி, வில்வம், கண்டங்கத்திரி, கறி, முள்ளி, சிற்றுமல்லி, பேராமல்லி, வேர்க்கொம்பு, காந்தை, தூதுளை, நன்னரி.

மலடு - (உ) பெண்மலடு, ஆண் மலடு.

மலம் - (ஙு) ஆணவம், மாயை, காமியம்.

மலர்கள் - (அ) புன்னை, வெள் ளெருக்கு, சண்பகம், நந்தியா வர்த்தம், பாதிரி, கருங்குவளை, அலரி, செந்தாமரை.

மலர்க் குணங்கள் - (அ) - கொல் லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய் மை, தவம், அன்பு.

மலை - (எ) கைலை, இமயம், மந்தி ரம், விந்தம், நிடதம், எமகூடம்; நீலகிரி; அன்றிக் கந்தமாதனங் கூட்டியெட்டெனவும்படும்.

மலைக்கிழங்கு வகை - (ரு) வள்ளிக் கிழங்கு, செவ்வள்ளிக் கிழங்கு, முள்ளு வள்ளிக்கிழங்கு, பனிக் கிழங்கு, கன்னிக்கிழங்கு.

மலைக்கொடி வகை - (உரு) இண்டங் கொடி, செவ்விண்டங் கொடி, நுரையிண்டங் கொடி, வெண்கண்டங்கத்திரிக் கொடி, கட்டுக் கொடி, பெருங்கட்டுக் கொடி, கருங்கட்டுக் கொடி, செங்கழற்சிக் கொடி, கொடி யத்தி, புல்லுருவிக் கொடி, உப்பிலாங் கொடி, வைசலாங் கொடி, ஓடாங் கொடி, கருடக் கொடி, மலைவெற்றிலைக் கொடி, தெல்லுக் கொடி, கொடி முன்னை, திராளங்கொடி, முசுட்டைக் கொடி, வள்ளிக் கொடி, அடப் பங்கொடி, வஞ்சிக்கொடி, கருஞ் சீந்திற்கொடி.

மலைச்செடி வகை - (கூக) அழு கண்ணிச்செடி, தொழுகண்ணிச் செடி, கெவுரியச்சஞ்செடி, குத்துவல்லாரைச் செடி, கரு வூமத்தைச்செடி, ஏலக்காய்ச் செடி, உள்ளொட்டிச் செடி, பிர வொட்டிச்செடி, கருங்கரிப்பான் செடி, தாகோளி,மலைக்காளான், வெண் கிலுகிலுப்பைச் செடி, வெள்ளையாவரைச் செடி, ஆள் வாடை தட்டிச் செடி, உப்பி டாலிச்செடி, கானல்மிளகாய்ச் செடி, குடைமேற்குடைச் செடி, சுண்டைச் செடி, மலைச்செந் தொட்டி குறிஞ்சாச்செடி, செங் கொடு வேலிச்செடி, கருங்கொடு வேலிச்செடி, பேய்ச் சுண்டைச் செடி, சுணைத்துளசிச் செடி, நாகதாளிச் செடி, கிரந்திநாய கச்செடி, நேத்திர நாயகச்செடி, குறிஞ்சிச்செடி, கருநாயுருவிச் செடி, மலைப்பச்சைச் செடி, மேதைச் செடி, மகா மேதைச் செடி, கற்றுமரைச்செடி,

மலைநாட்டிலுள்ள சிவாலயம் - (க)- திருவஞ்சைக்களம்.

மலைபடு திரவியம் - (ரு) அகில், குங்குமம், கோட்டம், தக்கோலம், மிளகு.

மலைப்புல் — (எ) தரகம்புல், காவட்டம் புல், மாந்தப்புல், பீநசப்புல், நஞ்சுப்புல், சோதிப் புல், காமாட்சிப்புல்.

மலைப் பூண்டு வகை - (ச) கீரிப் பூண்டு, கோழிக்காற் பூண்டு, தீமுறிப் பூண்டு, கல்லுருவிப் பூண்டு.

மலைமரங்கள் - (ரு) - குலிமரம், மலையத்தி மரம் மரம், மலையாளி, ஏரழிஞ்சில், இரங்கழிஞ்சில், அகில் மரம்; கல்லால மரம், இரும்பக மரம், உகாமரம், இனிப்பெலுமிச்சை மரம், எருக்கிலைமரம், செங்கிளு வை, அசோகு மரம், அச்சமரம், ஆலிமரம், கருத்தாளிமரம், இரு வாட்சி மரம், கருங்குவாட்சி மரம், கோங்கிலவ மரம், ஈரு வல்லி மரம், உதிரிமாரி மரம், ஊக்கிணு மரம், காட்டெலு மிச்சை மரம், நாங்கில் மரம், துளசிமரம், மஞ்சட்கடப்ப மரம், செங்கடம்ப மரம், அனிச்சை மரம் ஆச்சை மரம், ஆயிலிய மரம், பேயாலமரம், ஆட்டுலா மரம், நாரை மரம், கருங்காலி மரம், வேங்கை மரம், தேக்கு மரம், எழுமுள்மரம், கத்தூரிநாறி மரம், கருந்துவரை மரம், காஞ் சிரைமரம்; குருந்து மரம், கானல் மாமரம், கானல் வாழைமரம், குங்கிலிய மரம், கூந்தற்கமுகு மரம், கூமாமரம், செண்பக மரம், சீந்தன மரம், சுணைப்புங்கு மரம், மலைப்பருத்தி மரம், மலைப் பூவரசு மரம், தேவதாரு மரம், பெருங்காய நாறிமரம், கரு நெல்லி மரம், மலைநொச்சி மரம், விருகமரம், தேற்று மரம்.

மலைவுகள் — (ச) இடமலைவு, கால மலைவு, கலைமலைவு, உலக மலைவு, நியாய மலைவு ஆகமமலைவு.

மல்லிகைகள்-(௩) குடமல்லிகை ஊசிமல்லிகை, நாகமல்லிகை.

மறத்துறை வகை—(௭) வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி உழிஞை, நொச்சி, தும்பை.

மனத்தின் நாசம்—(௨) சொருப நாசம், அருபநாசம்.

மனோநாசாதி—(௩) மனோநாசம், வாசனுட்சயம், தத்துவநாசம்.

மன்றங்கள் — (௯) தீயோரை ஊமையாக்கும் மன்றம், கள்ளர்களைக் காட்டும் மன்றம், பலவடிவங்களை உண்டாக்கும் மன்றம், கலையறிவுகளை உணர்த்தும் மன்றம், ஐயங்களைத் தெளிவிக்கும் மன்றம், பொன்னுலகவாழ்வைத் தரும் மன்றம். ஒன்பான் வகை அணிகலன்களை உதவும் மன்றம், அமுதத்தை விளைக்கும் மன்றம், வடிவினை மறைக்கும் மன்றம், மழைபொழியச் செய்யும் மன்றம், இராப்பகல்களை மாற்றும் மன்றம்.

மன்மதன்கணை — (௫) வனசம், சூதம், அசோகு, முல்லை, நீலம். இவற்றின் பெயர் முறையே உன்மத்தம், மதனம் சம்மோகம், சந்தாபம், வசிகரணம். இவைசெய்யுமவத்தை - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம். மோகம், மரணம், அவையாவன —சுப்பிரயோகம் சொல்லு நினைவும்; விப்பிரயோகம்வெய்துயிர்த்திரங்கல்; சோகம் வெதுப்புந் துய்ப்பன தெவிட்டலும்; மோகம் அழுங்கலு மொழிபல பிதற்றலும்;

க்கமும்.

—(௮ கரணத்தியல்வோர், கடைகாப்போர், நகர மக்கள், படைத்தலைவர், சுற்றத்தார், இவுளிமறவர், யானை விரர், கருமவதிகாரர்.

மஹாராஜாக்கள்—(௧௬) அங்கன், அம்பரீஷன், இரந்திதேவன், சசிபிந்து, சிபி, சுகோத்ரன், திலீபன், பரதன். பகீரதன், பிருது, நிருகன், மாந்தாதா, மருத்து, யயாதி, கயன், இராமன், இவர்கள் சோடச மகாராஜாக்கள் எனப்படுவர்.

# மா

மாணிக்கசாதி — (௪) பதுமம், நீலம், விந்தம், படிதம்.

மாணாக்கர் மூவர்—(௩) முதன்மாணாக்கர், இடை மாணாக்கர், கடைமாணாக்கர்.

மாதம்—(௧௨) சைத்திரம், வைசாகம், சேட்டம், ஆஷாடம், சிராவணம், பாத்திரபதம், ஆசுவீசம் கார்த்திகம், மார்க்கசிரகம், புசியம், மாகம், பாற்குணம். இவை முறையே சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி. இவற்றிற்கு முறையே யுரிய நட்சத்திரம்—சித்திரை, விசாகம், மூலம், உத்திராடம், அவிட்டம், பூரட்டாதி, அசுவினி, கார்த்திகை, மிருகசீரிடம், பூசம், மகம், உத்திரம்.

மாதர்கள்—(௭) அபிராமி, மகேச்சுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி, இவர்க்கு முறையே வாகனம்—அன்னம், இடபம், மயில், கருடன், சீயம், யானை, பேய், முறையே யாயுதம் — மறை, பிநாகம், வேல், ஆழி, கலப்பை, வச்சிரம், சூலம்.

மாதளை வகை —(௬) சிவப்பு மாதளை, வெண் மாதளை, கொமட்டி மாதளை, புளிப்பு மாதளை, இனிப்புக் கொடி மாதளை, புளிப்புக்கொடிமாதளை.

மாந்த நோய்கள்—(அ) கணமாந்தம், சுழிமாந்தம், செரியாமாந்தம், பெருமாந்தம், போர்மாந்தம், மலடிமாந்தம், வலிமாந்தம், வாதமாந்தம்

மாயை-(க) சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை.

மாயை—(இ) தமம், மாயை, மோகம், அவித்தை, அநிர்தம்; அவையாவன :— சீவ லைசதன்னியத்தை மறைக்கையாற்றமம், ஜகரூபமான வந்நிதாத்தோற்றத்திற்குக் காரணமாகையான் மாயை, விபரீத ஞானமுண்டாக்குகையான் மோகம், உணர்வழிக்கையாலவித்தை, சத்துரூபத்துக்கந்நிய மாகையா லநிர்தம்.

மாயைக் குணம்—(எ) அஞ்ஞானம், பொய், அயர்வு, மோகம், பைசாசூந்நியம், மாச்சரியம், பயம். இவற்றுள் அஞ்ஞானமாவது, பொய்யை மெய்யென்று பொல்லாங்கு செய்தல், பொய்யாவது, உள்ளதை யில்லதாகவும், இல்லதை யுள்ளதாகவுஞ் சொல்லுதல், அயர்வாவது கண்டதை வருந்தி மயங்கல், மோகமாவது காமத்தான் மூர்ச்சித்தல், பைசாசூன்னியமாவது ஆசை யுண்டாயதனையில்லையாக வொளித்தல், மாற்சரியமாவது பிறவுயிர்களைத் தாக்கவுங்கொல்லவு நினைத்தல், கேடு நினைத்தல், பயமாவது உயிர்க்கிறுதி வருமென்று அச்சமுற்றுத் திரிதல்.

மாயையிற்றோன்றுவன—(கo) காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், முதலாய வித்தியாதத்துவ ஆன்ம தத்துவங்களாம்.

மாயையின் பெயர்—(கங) மாயை, அவித்தை, பிரகிருதி, சக்தி, சத்யை, மூலை, தூலை, யோனி, அவ்வியக்தம், அவ்வியாகிருதம், ஆசை, அஞ்ஞானம், தமசு, துச்சை, அநிர்வசனீயம்.

மாரண மூலிகை (அ) கார்த்திகைக் கிழங்கு, நீர்விஷம், கடுஞ்சூரை, நச்சுப்புல், மருதோன்றி, கொடிவேலி, அம்மான் பச்சரிசி, ஒடுவை.

மார்க்கம்—(உ) செந்துறை மார்க்கம், வெண்டுறை மார்க்கம்.

மார்க்கம்-(அ) நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு.

மார்க்கம்—(ச) சரியை, கிரியை யோகம், ஞானம்.

மாலை—(அ) வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை. இவை முறையே நிறைகவர்தல், நிரைமீட்டல், பகைமேற்சேரல், எதிரூன்றல், மதில்காத்தல், அரண்வளைத்தல், அதிரப்பொருதல், போர் வெல்லுதல் என்னுமிவற்றிற்குரியனவாம்.

மாலைகள்—(ங) பூமாலை, மணிமாலை, பாமாலை.

# மி

மிசிரகர்மம்—(ங) உத்கிருஷ்டம், மத்திமம், சாமானியம்.

மிருதி—(கஅ) மநு, அத்திரி விட்டுணு, யாஜ்ஞவல்க்யம், உசநம், ஆங்கிரசம், யமம், ஆபஸ்தம்பம், சம்வர்த்தம், காத்யாயனம், பிரகஸ்பதி, பராசம், வியாசம், சங்கலிதம், தட்சம், கௌதமம், சாதாதபம், வசிட்டம்.

மிளகாய் வகை—(ச) மிளகாய், பச்சை மிளகாய், வெண் மிள

காய், சுருங்குண்டு மிளகாய், கானல்மிளகாய் குடைமிளகாய்.

மிளகு வகை—(௩) மிளகு, வால் மிளகு, வெள்ளை மிளகு.

## மு

முகம்—(௧௪) அஞ்சிதம், அதோமுகம், ஆகம்பிதம், பிரகம்பிதம், ஆலோலிதம், உலோலிதம், உத்துவாகிதம், சமம், சௌந்தரம், துதம், விதுதம், பராவிருத்தம், பரிவாகிதம், திரச்சினம்; இவற்றுள் வருத்த மாற்று திருதோண்மேற் றலைசாய்த்தலஞ்சிதமுகம், தலைகுனிந்து பார்த்தலதோமுகம், சம்மதித்தற்கு மேல்கீழ்த் தலையாட்டலாகம்பிதமுகம், அதிசயத்தால் சிறிது தலையாட்டல் பிரகம்பிதமுகம், ஆசையான் மலர்ந்த முகமாயொருவனை யழைத்தலாலோலிதமுகம், சிந்தையாலொருதோண்மேற் றலைசாத்தல் உலோலிதமுகம், தலையண்ணாந்து பார்த்தலுத்துவாகிதமுகம், தியானிப்பது போலத் தலையசையாதிருத்தலே சமமுகம், பூரித்த மகிழ்ச்சியான் மலர்ந்த முகங்காட்டலே சௌந்தரமுகம், வேண்டாததற்கிடம் வலந்தலையாட்டலே துதமுகம், உணவணி முதலியவேண்டாமைக்குத் தலைநடுக்கலே விதுதமுதம், வேண்டாததற்கு முகந்திருப்பலே பராவிருத்தமுகம், மதத்தாலொருபுறஞ் சாய்ந்த தலையைச்சிறிதாகச் சுற்றியாட்டல் பரிவாகிதமுகம்—நாணத்தாற்றலையாட்டலே திரச்சினமுகம்.

முசுட்டை வகை-(௩) முசுட்டை, பேய்முசுட்டை, பொன்முசுட்டை.

முட்டிச் செடி வகை—(௫) பிராமுட்டி, சித்தாமுட்டி, பேராமுட்டி, விடமுட்டி, சிவப்புச் சித்தாமுட்டி.

முதல் வள்ளல்—(எ) குமுணன், சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி.

முத்திரைகள்-(௫) தேனு, பதுமம் சூலம், மகரம், சுருக்கு.

முத்திவகை—(௨) பரமுத்தி, அபரமுத்தி; பரமுத்தியாவது சிவசாயுச்சியம், அபரமுத்திகளாவன சிவசாருப்பியம், சிவசாமீப்பியம், சிவசாலோக்கியம்.

முத்திவிக்கினம்—(௩) அறியாமை, ஐயம், திரிபு

முத்துக்குணம்—(௪) தெளிந்த வொளி, சந்திரன்போன்றிருத்தல், வெள்ளிபோல் வெண்ணிறமுடைமை, அங்காரகன் போற் செந்நிற முடைமை.

முத்துக்குற்றம்—(௪) காற்றேறு, மணலேறு, கல்லேறு, நீர்நிலை.

முத்துச்சனிக்குமிடம்—(௨௦) மதி, மேகம், சங்கு, சிப்பி, மீன், நந்து, முதலை, உடும்பு, தாமரை, வாழை, கமுகு, கரும்பு, செந்நெல், மூங்கில், யானைக் கொம்பு, பன்றிக்கொம்பு, பசுவின் பல், நாகம், கொக்கு, நங்கையர் கழுத்து.

முத்துச்சோளவகை—(௪) வெண்முத்துச் சோளம், சிவப்புமுத்துச்சோளம், மஞ்சள்முத்துச் சோளம், கருப்பு முத்துச் சோளம்.

முந்திரிவகை-(௫) இனிப்புக்கொடிமுந்திரி, புளிப்புக்கொடிமுந்திரி, கொட்டை முந்திரி, திராட்சை முந்திரி, கிஸ்முஸ் முந்திரி.

மும்மை—(௩) உம்மை, இம்மை, மறுமை.

முரசு—(௨) யானைமுரசு, ஒட்டக முரசு போர் தொடுக்க அறைதல் யானை முரசு, போர் விடுக்க அறைதல் ஒட்டகமுரசு. இதனை இரண பேரிகை என்பர்.

முரசு—(௩) வீரமுரசு, கொடைமுரசு, மணமுரசு.

முரண்டொடை—(அ) அடிமுரண், இணைமுரண், பொழிப்புமுரண், ஒரூஉமுரண், கூழைமுரண், மேற்கதுவாய் முரண், கீழ்க்கதுவாய்முரண், முற்றுமுரண்.

முருகக் கடவுளின் திருவகுப்பு நூல்கள்—(உ௩) சீர்பாத வகுப்பு, தேவேந்திரசங்க வகுப்பு, வேல் வகுப்பு, திருவேலைக்காரன் வகுப்பு, பெருத்தவசன வகுப்பு, பூதவேதாள வகுப்பு, பொருகளத்தலகை வகுப்பு, செருக்களத்தலகை வகுப்பு, போர்க்களத்தலகை வகுப்பு, திருஞான வேழ வகுப்பு, திருக்கையில் வழக்க வகுப்பு, வேடிச்சிகாவலன் வகுப்பு, சேவகன் வகுப்பு, வேல்வாங்குவகுப்பு, புயவகுப்பு, சித்து வகுப்பு, கடைக்கணியல் வகுப்பு, சிவலோக வகுப்பு, மயில் வகுப்பு, கொலு வகுப்பு வீரவாள் வகுப்பு, சிவகிரி வகுப்பு, திருச்செந்தில் வகுப்பு, திருப்பழநி வகுப்பு, திருப்பரங்கிரி வகுப்பு.

முருகக்கடவுளின் வீரர்கள்—(௯) வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரன், வீரமகேசுரன், வீரபுரந்தரன், வீராந்தகன், வீரதீரன், வீரபுரந்தான், வீரமார்த்தாண்டன்.

முருகர் வடிவங்கள்—(௧௬) ஞானசத்திதரர், கந்தர், குமாரர், மயூரவாகனர், கசரூடர், பிரமசாத்தர், பாலசுப்பிரமணியர், சுப்பிரமணியர், வள்ளிசமேதர் கார்த்திகேயர், சண்முகர், சேனாதிபதி, தேவசேனாதிபதி, தாரகாரி, கிரௌஞ்சாரி, சரவணோற்பவர்.

முருங்கை வகை—(௪) முருங்கை, கசப்பு முருங்கை, தவசிமுருங்கை, புனல் முருங்கை.

முல்லைப்பொதுவியல் திணை—(அ) முல்லை, கார்முல்லை, தேர்முல்லை, நாண்முல்லை, இல்லாண்முல்லை, பகட்டு முல்லை, பான்முல்லை, கற்பு முல்லை.

முல்லைவகை—(௩) கொடிமுல்லை, செடிமுல்லை, ஊசிமுல்லை.

முழவு—(எ) அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புறமுழவு. பண்ணமைமுழவு, காலமுழவு, நாண்முழவு.

முற்றுமடக்கணியின் வகை—(௧௦) இடைமுற்று மடக்கு, இறுதிமுற்று மடக்கு, முதற்கண்ணும் இடைக்கண்ணும் முற்றுமடக்கு, முதற்கண்ணும் இறுதிக்கண்ணும் முற்று மடக்கு, இடைக்கண்ணும் இறுதிக்கண்ணும் முற்றுமடக்கு, அடிதோறு மூன்றிடத்து மடக்கு, இடையிட்டு வந்த இடைமுற்று மடக்கு, இடையிட்டுவந்த இறுதிமுற்று மடக்கு, இடையிட்டும் இடையிடாதும் வந்த இடையும் இறுதியும் முற்று மடக்கு.

முனிவரறம்-(௬) அடக்கம், துறவு, தூய்மை, தவம், மறம் நீங்கல், புணர்தலின்மை.

முனிவர்—(எ) அத்திரி, ஆங்கீரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன், அன்றியும் அகத்தியன், ஆங்கீரசன், கௌதமன் காசிபன், புலத்தியன், மார்க்கண்டன்.

முனிவர்—(௧௧) அகத்தியன், அத்திரி, ஆங்கிரசன் இரண்,

யன். மாமுனி, உரோமமாமுனி, ஏரண்டமாமுனி, கலைக்கோட்டு முனி, காசிபன், கௌதமன், சத்தகூன்முனி, சச்சிதானந்தன், சமதக்கினி, சனகன், சனற்குமாரன், சுகன், ததிமகா முனி, துருவாசன், நாரதன், பதஞ்சலி, பரத்துவாசன், பராசரன், பற்பமாமுனி, பிருகுமா முனி, பிருகிமாமுனி, புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன், வான்மீகன், விசுவாமித்திரன், வியாக்கிரபாதன், வியாசன்.

முன்னவிலக்கணியின் வகை—(௩) இறந்த வினை விலக்கு, எதிர் வினை விலக்கு, நிகழ்வினை விலக்கு.

முன்னவிலக்கணியின் விரி—(௧௩) வன்சொல் விலக்கு, வாழ்த்து விலக்கு, தலைமை விலக்கு, இகழ்ச்சி விலக்கு, துணைசெயல் விலக்கு, முயற்சி விலக்கு, பரவச விலக்கு, உபாய விலக்கு, கையறல் விலக்கு, உடன் படல் விலக்கு, வெகுளி விலக்கு, இரங்கல் விலக்கு, ஐயவிலக்கு.

முன்னிலை—(௨) தெய்வ முன்னிலை, அரசன் முன்னிலை.

## மூ

மூங்கில் வகை—(௪) மூங்கில், பெரு மூங்கில், விட் முங்கில், கல் மூங்கில்.

மூத்திரக் கிரிச் சரநோய்—(௪) வாத மூத்திரக் கிரிச்சரம், பித்த மூத்திரக் கிரிச்சரம், சிலேட்டும கிரிச்சரம், மேகமூத்திரக் கிரிச்சரம்.

மூர்த்தம்—(௮) பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா.

மூர்த்தவதிதேவதை—(௮) பவன், சருவன், ஈசானன், பசுபதி, வீமன், மாதேவன், உக்கிரன், உருத்திரன்.

மூர்த்தவதிதேவதைகளின் மனைவியர்—(௮) சுவர்ச்சலை, உரோகிணி, உசை, சுகேசி, சுவாகை, திசை, சிவை, தீக்கை.

மூர்த்தவதிதேவதைகளின் மைந்தர்—(௮) மந்தன், புதன், சுக்கிரன், செவ்வாய், குகன், சுவர்க்கன், மனோசிவன், சந்தனன்.

மூர்த்தி—(௩) சிவன், திருமால், பிரமன்.

மூர்த்தி மதம்—(௮) பிருதிவி மதம், ஜலமதம், தேயுமதம், வாயு மதம், ஆகாய மதம், சந்திர மதம், சூரிய மதம், ஆத்ம மதம்.

மூலநோய்—(௨௧) நீர் மூலம், செண்டு மூலம், முளை மூலம், சிற்று மூலம், வறன் மூலம், இரத்த மூலம், சீமூலம், ஆழி மூலம்; தமரக மூலம், வாதமூலம் பித்த மூலம், சிலேட்டும மூலம், தொந்த மூலம், வினை மூலம், மேக மூலம், பவுத்திர மூலம், இரந்தி மூலம், குத மூலம், புற மூலம், சுருக்கு மூலம், சவ்வு மூலம்.

மூலம்—(௧௯) எருக்கு, கண்டங் கத்திரி, கரந்தை, கறிமுள்ளி, குமிழ், கொடிவேலி, சங்கங் குப்பி, சிற்றுமல்லி, தழுதாழை தூதுளை, நன்னாரி, நொச்சி, பாதிரி, பேராமல்லி, மாவிலிங் கம், முருங்கை, வில்வம், வேர்க் கொம்பு.

மூலம்—(௰) கண்டங்கத்திரிவேர் சிறுவழு துணைவேர், சிறுமல்லி வேர், பெருமல்லி வேர், நெருஞ்சிவேர், (இவ்வைந்துஞ் சிறு பஞ்சமூலமென்ப.) வில்வ வேர், பெருங் குமிழம் வேர், தழுதாழைவேர், பாதிரி வேர், வாகை வேர். (இவ்வைந்தும் பெரும் பஞ்சமூலமென்ப.)

மூலிகைப்பால் — (௧௧) எருக்கம் பால், குருக்குப்பால், அத்திப் பால் ஆலம்பால், கள்ளிப்பால், திலவம்பால், காட்டாமணக்குப் பால், ஆதளைப்பால், வெளிப் பருத்திப் பால், திருகுகள்ளிப் பால், அரளிப்பால்.

மூலிகையரிசி— (௧௬) வாலா னரிசி, வாலுளுவை யரிசி, சிறுவாலுளுவையரிசி, சவ்வரிசி, தார்போக அரிசி, காடைக் கண்ணியரிசி, நத்தை வீரரிசி, பார்லியரிசி, புட்டரிசி, புல்லரிசி ஏலரிசி, வெப்பாலை யரிசி, விள வரிசி, எர்க்கட்டரிசி, சாலி யரிசி, மூங்கிலரிசி.

மூன்றடிமடக்கு — (௪) ஈற்றடி யொழித்து ஏனை மூன்றடியு மடக்கு, முதலடியொழித்து ஏனை மூன்றடியு மடக்கு, இரண்டாமடி யொழித்து ஏனைமூன்றடியு மடக்கு, மூன்றுமடி யொழித்து ஏனைமூன்றடியுமடக்கு.

## மெ

மெய்க்கூத்து—(௩) தேசி, வடுகு, சிங்களம். இவை மெய்த் தொழிற் கூத்தாகலின் மெய்க் கூத்தாயின. அகச்சுவைபற்றி யெடுத்தலின் அகமார்க்கமென வுங்கூறப்படுமென்னை? "குணத் தின் வழியதகக் கூத்தெனப் படுமே" எனக் குணநூலுடை யாரும், "அகத்தெழு சுவை யானக மெனப் படுமே" எனச் சயந்த நூலுடையாரும் கூறி னராகலின்.

மெய்ப்பரிசம் — (௮) ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல். இவை மெய்ப்பொறியாற் செயப்படுந் தொழில்.

மெய்ப்பாடு—(௮) வீரம், அச்சம், வியப்பு, இழிபு, காமம், அவலம் நகை, நடுவு நிலை.

மெய்ப்பாடு—(௨௰) இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல், எதிர்பெய்துபரிதல், ஏத மாய்தல், பசியட நிற்றல், பசலை பாய்தல், உண்டியிற் குறைதல், உடம்புநனி சுருங்கல் கண் துயில் மறுத்தல், கன வொடு மயங்கல், பொய்யாக் கோடல், மெய்யே என்றல், ஐயஞ் செய்தல், அவன் தமரு வத்தல், அறனளித் துரைத்தல், நெஞ்சழிதல், ஒப்புமைகோடல், ஒப்புவழியுவத்தல், உறுபெயர் கேட்டல், கலக்கம்.

மெய்யெழுத்துக்கள்—(௧௮) க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்.

மெல்லெழுத்துக்கள்—(௬) ங, ஞ, ண, ந, ம, ன.

## மே

மேகநோய்—(௧௧) ஆச்சிய கந்தி மேகம், சுத்த மேகம், பிரமிய மேகம், மாங்கிச சிராவி மேகம், அப்பிய மேகம், பித்தப்பிரமிய மேகம், சவிரண மேகம், மது மேகம், சாந்திர மேகம், ஆர்க்க மேகம், வசா மேகம், உத்தம மேகம், மச்சை மேகம், ஆதிக்க மேகம், சுரா மேகம், சுக்கில

மேகம், உதக மேகம், பிரச மேகம், தூரமேகம், தத்திய மேகம்.

மேகம்—(எ) சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீல வருணம். இவை பொழிவன முறையே மணி, நீர், பொன், பூ மண், கல், தீ.

மேடவிதி—(ச) இடபம், சிங்கம், மிதுனம், கர்க்கடகம்.

மேலுலகம்— (எ) பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், மகலோகம், தவலோகம், சன லோகம், சத்தியலோகம்.

## மை

மை—(ங) பாதாளமை, மறைப்பு மை, வசியமை.

## மொ

மொச்சைவகை — (ரு) கரு மொச்சை, வெண்மொச்சை, பேய்மொச்சை,பீனிஸ்மொச்சை கரும்பீனிஸ் மொச்சை.

மொழி—(ங) மெய்கூறல், புகழ் கூறல், பழி கூறல்.

மொழி—(உ) தனிமொழி, தொடர் மொழி.

மொழிகள்-(ங) ஒரு மொழி, பொது மொழி, தொடர்மொழி.

மொழிக்குறை—(ங) முதற் குறை, இடைக் குறை, கடைக் குறை.

மொழிக்கு இறுதியில் வரும் மெய்கள்—(கக) ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள்.

## மோ

மோகன மூலிகை வகை— (அ) பொன்னூமத்தை, கஞ்சா, வெள்ளூமத்தை, மருளூமத்தை, கோரைக் கிழங்கு, ஆலம் விழுது, நன்னாரி, கரும்பு.

மோட்ச ஏது—(ச) சமம், சந்தோடம், விசாரம், சாதுசங்கம்.

மோனைத் தொடை— (அ) அடி மோனை, இணை மோனை, பொழிப்பு மோனை, ஒரூஉ மோனை, கூழை மோனை, மேற் கதுவாய் மோனை, கீழ்க்கதுவாய் மோனை, முற்றுமோனை.

## மௌ

மௌனம்—(ச) மௌனம், யோகாசனம், யோகம், திதீட்சை, ஏகாந்த சீலத்துவம், ஆசையின்மை, சமத்துவம்.

## யா

யாகம்—(ரு) பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம்· இவற்றுள் வேதமோதல் பிரமயாகம், ஓமம்வளர்த்தலே தெய்வயாகம், பலியீதல் பூதயாகம், தர்ப்பண முடித்தல் பிதிரயாகம், இரப் போர்க் குணவு முதலிய வீதலே மானுடயாகம்.

யாகம்—(கஅ) சோதிட்டோமம், அங்கிட்டோமம், உத்தியம், சோடசீ, வாசபேயம், அத்திராத்திரம், சோமயாகம், சாதுர் மாசியம், மவுத்திரமேதம்,

சௌத்திராமணி, புண்டரீகம், அங்கிசயன், இராசசூயம், அச்சுவமேதம், விச்சுவதித்து, பிரமமேதம், பிரணவமேதம், பசுபந்தம்.

யாகம்—(உச) அக்கினிட்டோமம், அத்தியக்கினிட்டோமம், உத்தியம், சோடசி, வாசபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், அக்கினியாதேயம், அக்கினி கோத்திரம், தரிசபூரணமாசம், சாதுர்மாசியம், நிருடபசுமந்தம் ஆக்கிரயணம், சௌத்திராமணி, அட்டகை, பார்வணம். சிராத்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆசுவயுசி.

யாக்கைக்குறுகுற்றம்—(கஅ) நீர் வேட்டல், பயம், வெகுளி, உவகை, வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய், மரணம் பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், கேதம், கையறவு.

யாப்பிலக்கணத்திற்குச் சிறப்பானவை— (உச) எழுத்துக்குப் புறனடை, அசைக்குப் புறனடை, சீர்க்குப் புறனடை, தளைக்குப் புறனடை, அடிக்குப் புறநடை, வேறுவகையான தொடைவிகற்பங்கள், வேறு வகையான எதுகையும் மோனையும், மருட் செந்தொடை, தரவு தாழிசைகட்கு அடிவரையறை, கூன், விகாரம், வகையுளி, வாழ்த்து, வசை, வனப்பு, பொருள் கோள், குறிப்பிசை, ஒப்பு, வண்ணம், புணர்ந்துரை, அடியின்றி நடப்பன.

யாழ்வகை— (ச) பேரியாழ், சகோடயாழ், மகர யாழ், செங்கோட்டியாழ்.

யாழ்வகை நரம்பு—(ச) எ, கக, கஎ, உக. இவற்றுள் செங்கோட்டி யாழிற்கு ஏழு, சகோடயாழிற்குப் பதினொறு, மகரயாழிற்குப் பதினேழு, பேரியாழிற்கு இருபத்தொன்று.

யானை—(ங) நதிசரம், வனசரம், கிரிசரம்.

யானை மதம்—(ங) கன்னமதம், கபோல மதம், பீசமதம்.

# யு

யுகம்—(ச) கிரேதயுகம், திரேதயுகம், துவாபர யுகம், கலியுகம்.

யுக்தி—(ங) ஞானம், சோதனை, பொருத்தம்.

# யூ

யூனானிச் சரக்குவகை—(உ0) அக்ரோட்டுப் பருப்பு, அக்லீ லூல் முலுக், அசாநூன், அஷக், அப்ஷந்தீன், அப்திமுன், அரக்கேகசார், அரக்கேசோப்சீனி, அனேஷ்தாரு, ஆலூபஹவடா ஆலூபு காஹானு, இஸ்பானுஜி, உஸ்தூகுதூஸ், சாஸ்பிராஸ், சாலாமிசிரி, பாசியவுஷான், பேதானு, பூமாஸ்து, ஷகாகுல் மிசிரி, ஞூஸ் மக்கி.

# யோ

யோகங்கள்—(அ) இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி.

யோகம்—(ல) அட்டாங்கயோகம், மந்திரயோகம், பரியோகம்

பாவயோகம், மாயோகம், பாசு பதயோகம், கருமயோகம், ஞானயோகம், சாங்கியயோகம் தியான யோகம், இவற்றின் விரிவுகளை யெல்லாம் கூர்ம புராணம், இலிங்கபுராணம், வாயுசங்கிதை முதலியவற்றிற் காண்க.

யோகம்—(உஎ) விஷ்கம்பம், பிரீதி, ஆயுஷ்மான், சௌபாக்கியம், சோபனம், அதிகண்டம், சுகர்மம், திருதி, சூலம், கண்டம், விருத்தி, துருவம், வியாகாதம், அரிஷணம், வச்சிரம், சித்தி, விதிபாதம், வரியான், பரிகம், சிவம், சித்தம், சாத்தியம், சுபம், சுப்பிரம், பிரமம், ஐந்திரம், வைதிருதி. இவை முறையே, கம்பம், பிரியம், வாழ்நாள், புண்ணியம், நலம், மாகண்டம், அறம், துணை, சூலம், கண்டம், ஆக்கம், நிலை, அரவு, எக்களிப்பு, வேல், வல்லமை, கொலை, காயம், தாழ்வு, காட்சி, திறம், புகழ், காவல், தெளிவு, பிரமா, இந்திரன், பேய், இவற்றுள் கம்பம், கண்டம், அதிகண்டம், சூலம், வியாகாதம், வச்சிரம், விதிபாதம், பரிகம், வைதிருதியென வொன்பதன்றி மற்றவை நல்லன. இவற்றுள்ளுங் கம்பத்தின் மூன்றும், சூலத்திலைந்தும், கண்டத்திலு மதிகண்டத்திலுமாறும், வியாகாதத்தி லொன்பதுங் கழித்து நின்றநாழிகையுமாம்.

யோகபூமி—(ரு) க்ஷேபம், விக்ஷேபம், மூடம், ஏகாக்கிரம், நிரோதம்.

யோகபூமி — (ச) வாக்கு லயம், மனோலயம், புத்தி லயம், அகங்காரலயம்.

யோகம்—(உ) சாலம்பயோகம், நிராலம்பயோகம்.



யோகவகை—(ச) மரண யோகம், சித்த யோகம், அமிர்த சித்தயோகம், அமிர்தயோகம்.

யோகாசனங்கள்—(உ0) பத்மம், ஸ்வஸ்திகம், கோமுகம், விசதம், சூரிதம், ஏகபாதம், குக்குடம், வீரம், பத்ராயணம், கூர்மம், விமலம், தண்டம், பிண்டம், கோகர்ணம், சிம்மாசனம், விருத்தம், கடிகம், கசாஸ்யம், கசகர்ணிகம், சுகாசனம்.

யோகாசனம்—(அ) முற்கூறிய எண்வகை யாசனங்களன்றி நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல், சமயம், சுகமுமாம்.

யோகாசாரியர்—(உஅ) சுவேதர், சதாசிவர், தமனர், சகோத்திரர், கங்கர், லோகாட்சர், சனிடர், ததித்திய வந்தர், விடயர், உக்கிரர், அத்திரி, சுபாலகர், கௌதமர், வேத சிரர், கோகர்ணர், குகாவாசர், சிகண்டி, சடமாலி, அட்டகாசர், தாருகர், இலாங்குலி, மகாகாயர், சூலி, பிண்டி, முண்டி, சமிஷ்ணு, சோமசர்மர், இலகுளீசுவரர்.

யோகினிகள் — (சச) திவ்ய யோகி, மகாயோகி, சித்த யோகி, கணேஸ்வரி, பிரேதாசி பிகிணி, காளராத்திரி, நிசாசரி, சங்காரி, ஊர்த்துவ வேதாளி, பிசாசி, பூதடாமரி, ஊர்த்துவ கேசி, விருபாட்சி, கட்காங்கி, நரபோசனி, இராட்சசி, கோர ரக்தாட்சி, விஸ்வரூபி, பயங்கரி, வீரகௌமாரி, கீசண்டி, வராகி, முண்டதாரிணி, பிராமரி, ருத்ர வேதாளி, பீஷ்கரி, திரிபுராந்தகி பைரவி, துவம்சனி, குரோதி, துர்முகி, பிரேத வாகினி, கட்வாங்கி, தீர்க்கலம், போஷ்டி, மாலினி, மந்திர யோகினி, காலாக்கினி, கிருமணி, சக்ரி, கங்காளி, புவனேச்வரி, பட்காரி, வீரபத்ரேசி, தூம்ராட்சி

கலைப்பிரியை, கண்டகி, காடகி மாரி, எமதூதி, கராளினி, கௌசிகி, மர்த்தனி, எட்சி, ரோமசங்கி.

யோனிவகை—(௪) உள்ளோன் றலைவனாக வுள்ளதோர் பொருண்மேற் செய்தலும், இல்லோன் றலைவனாக வுள்ள தோர் பொருண்மேற் செய்த லும், உள்ளோன் றலைவனாக வில்லதோர் பொருண்மேற் செய்தலும், இல்லோன் றலைவ னாக வில்லதோர் பொருண்மேற் செய்தலுமாம். இஃது நாடக லக்கணம்.

# ரூ

ரூபம்—(௭) வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம்.

# ரோ

ரோகணிவகை — (௨) கடுகு ரோகணி பிதரோகணி.

ரோசாவகை—(௩) சிவப்புரோசா, ரோசா, மஞ்சள் ரோசா, வெள்ளை ரோசா.

# லி

லிங்கமரங்கள்—(௨) நெட்டி லிங் கம், மாவிலிங்கம்.

# வ

வங்கியத்தின் கூறுபாடு—(௫) மூங் கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலி.

வங்கியப்பண்—(௭) சட்சம், ரிட பம், காந்தாரம், மத்திமம், பஞ்ச மம், தைவதம், நிடாதம்.

வசுக்கள்—(௮) அனலன், அனி லன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன்.

வசைக்கூத்தின்வகை—(௨) வேத் தியல், பொதுவியல்.

வடுவிற்குரிய கால்கள் — (௧௪) சுற்றுதல், எறிதல், உடைத்தல், ஒட்டுதல், கட்டுதல், வெட்டு தல், போக்கல், நீக்கல், முறுக் கல், அனுக்கல், வீசல், குடுப் புக்கால், கத்திரிகைக்கால், கூட்டுதல்.

வணிகர்குணம்— (௮) தனிமை யாற்றல், முனிவிலனாதல், இட னறிந்தொழுகல், பொழுதொடு புணர்தல். உறுவது தெரிதல், இறுவதஞ்சாமை, ஈட்டல், பகுத்தல்

வண்டுவகை—(௪) சுரும்பு, தேன், ஞிமிறு, வண்டு.

வண்ணக்கூறுபாடு— (௬) செம் முறை, உறழ்பு, மெய்ந்நிலை, கொட்டல், நீட்டல், நிமிர்த்தல்.

வண்ணங்கள்— (௫) தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம் அடுக்கிசை வண்ணம், பிரிந் திசை வண்ணம், மயங்கிசை வண்ணம்.

வண்ணம்—(௩) பெருவண்ணம். வனப்புவண்ணம், இடைவண் ணம்.

வண்ணம் — (௫) வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை.

வத்தல்வகை—(௯) நெல்லி வத் தல், மிதுக்கு வத்தல், அதளை வத்தல், சுண்டை வத்தல், மிளகு தக்காளி வத்தல், கண் டங் கத்திரி வத்தல், சீனி

யவரை வத்தல், கத்திரி வத்தல், வெண்டை வத்தல்.

வயிரவர்கள்—(அ) சுதந்திரவயிரவன், சுவேச்சா வயிரவன், உலோக வயிரவன், கால வயிரவன், உக்ர வயிரவன், பிரச்சையா வயிரவன், நின்மாண வயிரவன், பூடண வயிரவன்.

வயிரவர்கள் *(வேறு)*—(அ) சங்கார கால வயிரவன், அசிதாங்க வயிரவன், குரோத வயிரவன், சண்டவயிரவன், உன்மத்த வயிரவன், கபால வயிரவன், விடூடண வயிரவன், மார்த்தாண்ட வயிரவன்.

வரகுவகை — (கி) சிறுவரகு, பெருவரகு, காட்டுவரகு, செய்வரகு, கூழ்வரகு.

வரி—(அ) கண்கூடுவரி, காண்வரி, உள்வரி புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரி.

இவற்றுள் கண்கூடுவரியாவது பிரிய தரிசனம் அஃதாவது, காட்சி, அஃது ஒருவர் கூட்டமின்றித் தானே வந்து நிற்கும் நிலைமை. ஆகவே எதிர்முகமாக நின்று நடிக்கும் நடிப்பு.

காண்வரியாவது – புயல் சுமந்து வருத்திக் கதிரைப் பொழியும் மதியிடத்தே கயல்களுலாவித் திரிகின்ற செவ்வியோடே பாகைப் பொதிந்த பவள நிறத்து ஒளியைத் தருகின்ற முத்தை யொத்த நகை முகத்தைக் காட்டி வருகென வந்து போவெனப் போகிய கரிய நெடிய கண்ணுள் கூத்தாம். என்னை? "காண்வரி யென்பது காணுங்காலை - வந்த பின்னர் மனமகிழ் வுறுவன - தந்து நீங்குந் தன்மைய தாகும்" என்றாராகலின்.

உள்வரியாவது – வேற்றுருக் கொண்டு நடித்தல். "உள்வரி யென்ப துணர்த்துங் காலை - மண்டலமாக்கள் பிறி தோருருவம் - கொண்டுங்கொள்ளாது மாடுதற் குரித்தே" என்றதனு லறிக. ஈண்டு மண்டலமாக்கள் என்றது அரசரை. பாண்டவர் களுள் பிறிதுருவங் கொண்டது மிவ்வரிப்பாலதாம்.

புறவரியாவது - தலைவனுடனணையாது புறத்துநின்று விளையாடுவது. இதனை "புறவரி யென்பது புணர்க்குங்காலை-யிசைப்ப வந்து தலைவன் முற்படாது - புறத்து நின்றுடி விடை பெறுவதுவே" என்ற சூத்திரத்தானறிக.

கிளர்வரியாவது - நடுநின்றோர் இருவருக்குஞ் சந்து சொல்லக் கேட்டு நிற்பது. என்னை? "கிளர் வரியென்பது கிளக்குங் காலை யொருவருய்ப்பத் தோன்றி யவர்வா - யிருபுற மொழிப் பொருள் கேட்ப நிற்பதுவே" என்றாராகலின்.

தேர்ச்சிவரியாவது - நாயகன் கிளைகட்குத் தன் துன்பங்களைத் தேடித்தேடிச் சொல்லுதல். என்னை? "தேர்ச்சியென்பது தெளியுங்காலைக் - கெட்டமாக்கள் கிளைகண்டவர்முன்–பட்டது முற்றது நினைஇ யிருந்து தேர்ச்சி யோடுரைப்பது தேர்ச்சி வரியாகும்" என்றாராகலின்.

காட்சிவரியாவது – தன்வருத்தத்தைக் காணும்படி நடித்தல். என்னை? "காட்சிவரியென்பது கருதுங்காலைக் - கெட்டமாக்கள் கிளைகண்டவர் முன்னர்ப் - பட்டது கூறிப் பரிந்து நிற்பதுவே" என்றாராகலின்.

எடுத்துக்கோள் வரியாவது- தான் கையறவெய்தி வீழ்ந்தா

ளாக வீழ்ந்து, பிறர் எடுத்துக் கொள்ளும்படி நடித்தல். இதனை "எடுத்துக்கோளே யிசைக்குங் காலை-யடுத்தடுத் தழிந்து மாழ்கி யயலவரெடுத்துக் கோள்புரிந்த தெடுத்துக்கோளே" என்ற சூத்திரத்தானறிக.

வரிக்கூத்து - (கூஉ) சிந்துப்பிழுக்கைசந்தி, கொந்தி, கவுசி, குடப்பிழுக்கை, கந்தன் பாட்டு, ஆலங்காட்டாண்டி, பருமணனெல்லிச்சி, சூலநட்டம், தூண்டில், ஆண்டி, அமலன், புனவேடு, ஆளத்தி, கோப்பாளி, பாண்டிப்பிழுக்கை, பாம்பாட்டி, கடவுட்சடைவீரம், மாகேசம், காமன், சிந்து, வாமனம், விகடம், கொற்றி, பலகை, வாள், பப்பரப்பு, தகுணிச்சம், சித்துமுண்டிதம், பறை, பண்டிதன், பத்தன், குரவை, பப்பறை, காவதன், பித்தன்மாணி, பெருபிழுக்கை, மதுவினையாட்டு, களியாடல், பறைக்குடும்பு, தோற்கூத்து, முத்தகிழவன், கிழவி, கிள்ளுப்பிருண்டி, பள்ளி விக்கட்டாங்கம், அம்மனை, பந்து கழங்காடல், விண்ணகக்காளி, விறற்கொந்தி, வண்டு, வாரிச்சி, பிச்சி, சடாதாரி, பிடர்நிருத்தம், தளிப்பாட்டு, சதுரங்கம், சோணண்டு, மலையாளி, வேதாளி, வாணி, குதிரை, வில்வேடு, செந்தலைவிளக்குப்பிச்சி, மலைச்சி, இருண்முகப்பேதை, இருவன், பல்லாங்குழி, பகடி, பகவதியர்ள், சாழல், உந்தி, அவவிடி, வராளி, யோனிச்சி, பாரன், குணலை, மாலைவினையாட்டு, உள்ளிப்பூ, ஐயனுக்குப் பாடும் பாட்டு, ஆடும்பள்ளி, கும்பிடு நாட்டம், குணட்டம், குணலை, சும்மைப்பூ, சோனகம், மஞ்சிரி, உழைமை, பறைமை. இவற்றைப் பல்வரிக்கூத்தென் பாருமுளர்.

வருடம் (கூ0) பிரபவ, விபவ, சுக்கில, பிரமோதூத, பிரசோற்பத்தி, ஆங்கீரச, சிமுக, பவ, உவ, தாது, ஈச்சுர, வெகுதானிய, பிரமாதி, விக்கிரம, விஷு, சித்திரபானு, சுபானு, தாரண, பார்த்திப, விய, (இவ்விருபது முத்தமவருடம்) சருவசித்து, சருவதாரி, விரோதி, விகிர்த்தி, கர, நந்தன, விசய, சய, மன்மத, துன்முகி, ஏவிளம்பி, விளம்பி, விகாரி, சார்வரி, பிலவ, சுபகிருது, சோபகிருது, குரோதி, விசுவாசு, பராபவ, (இவ்விருபதும் மத்திம வருடம்) பிலவங்க, கீலக, சௌமிய, சாதாரண, விரோதிகிருது, பரிதாபி, பிரமாதீச, ஆனந்த இராட்சச, நள, பிங்கள, காலயுத்தி, சித்தார்த்தி, இரௌத்திரி, துன்மதி, துந்துபி, உருத்திரோற்காரி, இரத்தாட்சி, குரோதன, அட்சய (இவ்விருபது மதம வருடம்.)

வருணம் - (ச) பிரம சத்திரிய, வைசிய, சூத்திரர். இவற்றைச் சாதியென்றுங் கூறுப.

வருத்தனை - (ச) அபவேட்டிதம், உபவேட்டிதம், வியாவர்த்திதம், பராவர்த்திதம்.

வருஷம் - (க) பரதவருஷம், ஏமகூட வருஷம், நிஷதம், இளாவிருதம், நீலம், சிவேதம், குரு, பத்திராச்சவம், கேதுமாலம். இவையே நவவருஷம் எனப்படும்.

வரைபொருட் பிரிதல் - (கூகூ) முலைவிலை கூறல், வருமதுகூறி வரைவுடம்படுத்தல், வரைபொருட்பிரிவையுரையெனக் கூறல், நீயேகூறென்றல், சொல்லாதேகல், பிரிந்தமைகூறல், நெஞ்சொடு கூறல், நெஞ்சொடு வருந்தல், வருத்தங்கண்டுரைத்தல், வழியொழுகி வற்புறுத்தல்,

வன்புறை யெதிரழிந் திரங்கல், வாய்மை கூறி வருத்தந்தணி தல், தேருதுபுலம்பல், காலமறந் துரைத்தல், தூது வரவுரைத்தல், தூதுகண்டழுங் கல், மெலிவு கண்டு செவிலி கூறல், கட்டு வைப்பித்தல், கலக்கமுற்று நிற் றல், கட்டுவித்தி கூறல், வேலனை யழைத்தல், இன்னலெய்தல், வெறி விலக்குவிக்க நினைதல், அறத்தொடு நிற்றலையுரைத்தல், அறத்தொடு நிற்றல், ஐயந் தீரக் கூறல், வெறி விலக்கல், செவிலிக்குத் தோழி அறத் தொடு நிற்றல், நற்றுயக்குச் செவிலி அறத்தொடு நிற்றல், தேர் வரவு கூறல், மணமுரசு கேட்டு மகிழ்ந்துரைத்தல், ஐயுற் றுக் கலங்கல், நிதிவரவு கூறு நிற்றல் (திரு-ர்)

வரைவு முடுக்கம் (கசு) வருத்த மிகுதி கூறி வரைவு கடாதல், பெரும்பான்மை கூறி மறுத்தல், உள்ளது கூறி வரைவு கடாதல், ஏதங் கூறி யிரவரவு விலக்கல், பழிவர வுரைத்துப் பகல்வரவு விலக்கல், தொழுதிரந்து கூறல், தாயறிவு கூறல், மந்திமேல் வைத்து வரைவு கடாதல், காவன்மேல் வைத்துக் கண்டு யிலாமை கூறல், பகலுடம் பட் டாள் போன்றிரவரவு விலக்கல், இரவுடம் பட்டாள் போன்று பகல் வரவு விலக்கல், இரவும் பகலும் வரவு விலக்கல், கூறுவிக் குற்றல், செலவு நினைந்துரைத் தல், பொலி வழிவுரைத்து வரைவு கடாதல் (திரு-ர்)

வலவோட்டு நட்சத்திரம் (கங) அசுவனி, பரணி, கார்த்திகை, புனர்பூசம், பூசம், ஆயிலியம், அஸ்தம், சித்திரை, சுவாதி, மூலம், பூராடம், உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி.

வலி (௫) அமரகண்டம் குமரகண் கண்டம், பிரமகண்டம், காக்கை, முயல்

வல்லெழுத்துக்கள் (௬) க, ச, ட, த, ப, ற.

வழக்கு (௨) செய்யுள்வழக்கு, உலக வழக்கு.

வழக்கு (௬) தொகையுண்மை வழக்கு, தொகை யின்மை வழக்கு, தொடர்ச்சி யுண்மை வழக்கு, தொடர்ச்சி யின்மை வழக்கு, மிகுத்துரை யுண்மை வழக்கு, மிகுத்துரை யின்மை வழக்கு.

வழக்கு (௪) உள்வழக்கு, இல் வழக்கு, உள்ளதுசார்ந்த உள் வழக்கு, உள்ளதுசார்ந்த இல் வழக்கு, இன்மைசார்ந்த உள் வழக்கு, இன்மைசார்ந்த இல் வழக்கு.

வழக்கு (கஅ) கடன் வாங்குதல், அடைக்கலமாகப் பொருளை வைத்தல், உடையவன் அல் லாதவன் விற்றல், கூடிமேம்படு தல், கொடுத்ததை மீண்டுங் கொடாமை, கூலி கொடாமை, கட்டுப்பாடு கடத்தல், விற்றுங் கொண்டும் உள்ளம், ஒப்பாமை, ஒப்பிப்பணி செய்யாமை, எல்லை வழக்கு, சொற்கொடுமை, தண் டக்கொடுமை, திருடு, வன் செய்கை, மாதரைக்கவர்தல், மாதர் ஆடவர் தருமம், தாய பாகம், சூது.

வழிபாடு (கூ) எதிர்கொள்ளல், பணிதல், ஆசனத்திருத்துதல், தாள்கழுவல், அருச்சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட் டல், புகழ்தல், அமுதமேந்தல்.

வழிபாட்டிற்குரிய இலைகள் (௧0) வில்வம், திருநீற்றுப்பச்சை, கொன்றை, ஆத்தி, துளபம், நொச்சி, இருவாட்சி, சிவ கரந்தை, மரு, குருந்து.

வழிபாட்டிற் குரிய மலர்கள் (௧0) மல்லிகை, முல்லை, இருவாட்சி, தும்பை, புன்னை, கொன்றை, மந்தாரை, பிச்சி, ஊமத்தை, வெள்ளெருக்கு.

வழு (௧௪) கைக்கிளைத்திணை வழு, முல்லைத்திணை வழு, குறிஞ்சித் திணை வழு, மருதத்திணை வழு, நெய்தற்றிணை வழு, பாலைத் திணை வழு, பெருந்திணை வழு, வெட்சிவழு, வஞ்சிவழு, உழிஞைவழு, தும்பைவழு, வாகைவழு, காஞ்சிவழு, பாடாண்டிணை வழு.

வழுக்கள் (௭) இடவழு, காலவழு, திணைவழு, பால்வழு, மரபுவழு, வினாவழு, விடைவழு.

வளம் (௫) கறி, கோட்டம், குங்குமம், காரகில், தக்கோலம், இவை ஐவள மெனப்படும்.

வள்ளல் (உ௧) வரையாது கொடுப்போன் வள்ளலென்ப. இவர் முதல் இடை கடையென மூவகைப்படுவர். அவருள்முதலெழு வள்ளல் - குமணன், சகரன், செம்பியன், துந்துமாரி, நளன், நிருதி, | இடையெழு வள்ளல் - அக்குரன், அந்திமான், அரிச்சந்திரன், கன்னன், சந்திமான், சிசுபாலன், தந்தவக்கிரன்-கடையெழு வள்ளல், எழினி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன், மலையன்.

வள்ளிக்கிழங்கு வகை (௯) சருக்கரை வள்ளிக்கிழங்கு, சிவப்புச் சருக்கரை வள்ளி, வள்ளிக் கிழங்கு, செவ்வள்ளிக் கிழங்கு, ஆன்வள்ளிக்கிழங்கு, வெற்றிலை வள்ளிக்கிழங்கு, முள் வள்ளிக் கிழங்கு, காய் வள்ளிக் கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு.

# வா

வாகைத்திணை (௩௩) வாகை, வாகையரவம், அரசவாகை, முரசவாகை, மறக்களவழி, களவேள்வி, முன்தேர்க் குரவை, பின் தேர்க்குரவை, பார்ப்பன வாகை, வாணிக வாகை, வேளாண் வாகை, பொருநவாகை, அறிவன் வாகை, தாபத வாகை, கூதிர்ப்பாசறை, வாடைப் பாசறை, அரச முல்லை, பார்ப்பன முல்லை, அவையமுல்லை, கணிவன் இல்லை, மூதின் முல்லை, ஏருண் முல்லை, வல்லாண் முல்லை, காவன் முல்லை, பேராண் முல்லை, மற முல்லை, குடை முல்லை, கண்படை நிலை, அவிதபலி சால்பு முல்லை, இணை நிலை, பொருளொடு புகறல், அருளொடு நீங்கல்.

வாகைமரம் (௩) வாகைமரம், நிலவாகை மரம், கருவாகை மரம்.

வாக்கியம் (௨) அவாந்தரவாக்கியம், மகாவாக்கியம்.

வாக்குக்குற்றம் (௫) பொய் சொல்லல், வாது கூறல், புறங்கூறல், வசைகூறல், கோட்சொல்லல்.

வாசம் (௫) இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்.

வாசவகை (௧௪) அம்பரேச்சம், கத்தூரி, சவாது, சாந்து, குங்குமம், பனிநீர், புழுகு, தக்கோலம், நாகப்பூ, இலவங்கம், சாதிக்காய், விசுவாசி, நிரியாசம், தைலம்.

வாசனை (௨) சுத்த வாசனை, மலின வாசனை.

வாசனை (௩) தேக வாசனை, லோக வாசனை, சாத்திர வாசனை.

வாசனைத்திரவியம் (௫) புனுகு, சவ்வாது, மட்டிப்பால், சந்தனம், அத்தர்.

வாசனைப்பொருள்கள் (அ) சந்தனம், அகரு, கத்தூரி, கருப்பூரம், பச்சிலை, குங்குமம், இலாமிச்சை, கோட்டம்.

வாச்சியக்கூறுவகை (௩) கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கம். அவற்றுள் கீதாங்கமாவது கீதத்திற்கு வாசிப்பது; நிருத்தாங்கமாவது நிருத்தத்திற்கு வாசிப்பது, உபயாங்கமாவது இரண்டிற்கும் வாசிப்பது.

வாதக் கருப்பொருள் (௧௬) பிரமாணம், பிரமேயம், ஐயம், காரியம், விதர்சனம், சித்தாந்தம், வைதர்க்கம், நிருணயம், ஆபாசம், தண்டம், விதண்டம், அசலம் நிக்கிரகம், வாதம், சிற்பம், சாதகம்.

வாத நோய் (அ0) வாதஸ் தம்பம், வாதகர்ஷணம், கரஸ்தம்ப வாதம், தலஸ்தம்ப வாதம், பூசு வாதம், காளாஞ்சக வாதம், ஊருஸ்தம்பவாதம், வாதகர்ணகம், குரிஷகிரிஷ வாதம், நரித்தலை வாதம், கும்ப வாதம், மலைத்தகம்ப வாதம், பாணிக்கம்ப வாதம், கூனி வாதம், ஆகுனி வாதம், அஷேகவ வாதம், வாதஉபகதம், நெற்றி சூலை வாதம், கர்னசூலை வாதம், செவிபடு வாதம், பக்க வாதம், பட்ச வாதம், பேய் வாதம், அட்டதந்திர வாதம், வசனு வாதம், மகவாதம், மிருத்து வாதம், உதர வாதம், மூத்திர உதிர வாதம், சுக்கில வாதம், சவ்விரங்க வாதம், ஊர்த்துவ வாதம், அஞ்ஞானத்தம்பம், சிரக்கம்ப வாதம், சதஸ்தம்ப வாதம், வச்சிரரூபம், கண்டகிராகம், நகாரி வாதம், பதித வாதம், யோனி சூலை, கற்ப சூலை, அட்ட சூலை, குடல் வாதம், அசுவ வாதம், மெச்சு வாதம், மூடு வாதம், வசு வாதம், பீசஸ்தம்பம், தந்திர வெட்டி, வாத சுரோணிதம், சித்துவாத சுரோணிதம், வைகிதவாத சுரோணிதம், உதிரவாத சுரோணிதம், பயித்திய வாத சுரோணிதம், சிலேட்டுமவாத சுரோணிதம், உதரவாத சுரோணிதம், குண அவதானகம், கண்டக அவதானகம், சிரக்கம்ப அவதானகம், வாதத்தலை நோக்காடு, பித்தத்தலை நோக்காடு, சேட்டுமத் தலை நோக்காடு, சன்னி வாதத்தலை நோக்காடு, இரத்த பித்தத்தலை நோக்காடு, இருமிகந்தத் தலை நோக்காடு, சூரியாவர்த்தம், சந்திராவர்த்தம், கர்ணுவர்த்தம், ஒருதலை வாதபேதம், வாதகர்ண சூலை, பித்தகர்ண சூலை, சிலேட்டும கர்ண சூலை, கிருமிகர்ணசூலை. தந்தவாயு.

வாதம் (௨) பிரதிவிம்பவாதம், அவச்சேத வாதம்.

வாதம் (௩) வாதம், சல்பம், விதண்டை.

வாதனை (௨௫) நரம்பு முதலிய பிருதிவியின் கூறு ஐந்தும், நீர் முதலிய அப்புவின் கூறு ஐந்தும், பசி முதலிய அக்கினியின் கூறு ஐந்தும், போக்கு முதலிய வாயுவின் கூறு ஐந்தும், வெகுளி, முதலிய ஆகாயத்தின் கூறு ஐந்துமாம்.

வாத்திய வகைகள் (௨௪) பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, சந்திர வளையம், மொந்தை, கண்விடு தூம்பு. நிசாளம், துடுமை, சிறு பறை, தகுணிச்சம், விரலேறு துடி.

வாயில் (௬) கண், காது, வாய், குதம், குய்யம்,

வாயு (௰) பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன், இவையுடலினிற்பன. அவை யாவன :— இதயத்தியங்குவது பிராணன், உச்சர்க்கத்தலத்திடை நிற்ப தபானன், கந்தரசக்ரமியிற் சந்திடை நிற்பது சமானன், நாபியினிற்பது உதானன், சரீரமுழுவதும் வியாபித்திருப்பது வியானன், நீட்டலும் முடக்கலுங் கிளக்கலுஞ் செய்வது நாகன், உரோமம், புளகித்திமைப்பது கூர்மன், முகத்திடை நின்று தும்மலுஞ் சினமும் வெம்மையும் விளைப்பது கிருகரன், ஒட்டமுமிளைப்பும் வியர்த்தலும் விளைப்பது தேவதத்தன், உயிர்போகினும், போகா துடலினை வீக்கித் தலைகிறுத் தகல்வது தனஞ்சயன்.

வாயுகீடம் (௧௮) குன்னசம், துண்டிகேரம், சிருங்கிசரம், குருந்தகம், உச்சிலிங்கம், அபிலாபம், சுவேதகம், மயூரகம், அபிசாரு, உலூகம், விருத்தம், சாரிபம், வைதளம், சராலம், கூர்மம், வருஷம், சித்திர சீரிஷம், துவிராசிகம்.

வாயுக்கள் (௫) கிருகரன், கூர்மன், தநஞ்சயன், தேவதத்தன், நாகன். (2) அபானன், உதானன், சமானன், பிராணன், வியானன். இவையே பஞ்ச வாயுக்களெனப்படும்.

வாயுவின் தத்துவங்கள் (௫) நடத்தல், இருத்தல், ஓடல், விரிதல், சுருங்குதல்.

வாரச்செய்யுள் (௨) ஒரொற்று வாரம், ஈரொற்று வாரம். அவை தாளத்து ஒரு மாத்திரையும் இரு மாத்திரையும் பெற்று வருவனவாம், வாரமென்பது பற்று.

வாரம் (௭) ஞாயிறு திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி.

வாழை வகை (௧௨) நாட்டு வாழை, அடுக்கு வாழை, இரசதாளி வாழை, கரு வாழை, செவ்வாழை, கல் வாழை, காணும் வாழை. நவரை வாழை, பச்சை வாழை, பூபம் வாழை, மலை வாழை, மொந்தன் வாழை.

வாழ்த்து (௨) வாயுறை வாழ்த்து, புறநிலை வாழ்த்து.

வாழ்த்து (௨) மெல்வாழ்த்து இருபுற வாழ்த்து; இஃது உண்மையாக வாழ்த்தலும் மனம் வேறுபட்டு வாழ்த்தலுமாம்.

வானோர்கணம் (௯) அக்கணத்தோராவார் - பத்திச்சுவாலகர், ஞானதிக்கர், பத்திராசனர், நாதகிருத்தியர், சத்துவகர், பலவத்தர், பிராதமிகர், அதிதூதர், தூதர், இவையே நவவிலாச சபையாம்; அவை யாவன - பத்திச்சுவாலகர் கடவுளைக் குறித்த பக்தியினாலே சுவாலிக்கிறவர் ஞானதிக்கர் கடவுளைக் குறித்த ஞானத்திலாதிக்கம் பெற்றவர், பத்திராசனர் கடவுளெழுந்தருளியிருக்கும் தேவசிங்காதனத்தைப் புகழ்ந்திருப்பவர். இவர் முதலாம் அர்ச்சியப் பிரபுத்துவமுடையோராம், நாதகிருத்தியர் நாதனுடைய கிருத்தியத்தை யவனருளாற்புரிபவர், சத்துவகர் கடவுளருளாற் பற்பல வற்புதங்களைச் செய்யுஞ் சத்துவம் பெற்றவர், சத்திகரென்றுமாம். பலவத்தர் கடவுட்டிரு வுளப்படி யெய்துங் கருமங்கட்கு வரு மிடையூற்றை யவனருளாற்றடுக்கும் பலாத்காரம் பெற்றவர், இவரிரண்டாமர்ச்சியப் பிரபுத்துவ முடையோராம். பிராமிகர், கடவுட்டிருவுளப்படியே யிராச்சிய

சம்பந்தமான சாதாரண நன்மைகளை நடத்துந் தலைமை பெற்றவர். அதிதூதர் பிரதானமாகிய விசேடங்களை யுலகத்திலறிவிக்கத் தானுதிபதியாக வருபவர்கள்,—தூதர் மனிதர் பிறந்த கண முதலாகத் தனித் தனியே யவரவரைப் பாது காத்து நன்னெறியி னடத்தி மற்றும் பிரதான விசேடங்கட் கனுப்பப்படுவர்-இவர் மூன்றும் அர்ச்சியப் பிரபுத்துவ முடையோர்,—அர்ச்சியப் பிரபுத்துவத்திற்கு அதீச்சுரபதவி யென்பாரு முளர். இவை போப்புமார்க்க கிறிஸ்தவர்களாற் கூறப்படுவன.

வானோர்வரம் (௪) இலகு, சூக்குமம், அட்சயம், பிரகாசம். இவை கனமின்மை, கண்டிப்பின்மை, கேடின்மை, விளக்கம்.

வாஸ்துதேவதைகள் (௩௨) ஈசானர், பர்சன்யர், சயந்தர், மகேந்திரர், ஆதித்யர், சத்தியகர், பிரம்சர், அந்தரிட்சர்; அக்னி, பூணணர், விதாத்ரு, கிரகட்சதர், யமர், காந்தர்வர், பிருங்கராசர், துருகராசர், நிருதர், த்வௌவாரிகர், சுக்ரீவர், புட்பதந்தர், வருணர், அசுரர், சேடர், ரோகர், வாயு, நரகர் முக்யர், பல்லாடகர், சோமர், ருஷி, அதிதி, திதி.

# வி

விகாரம் (௩) தோன்றல், திரிதல், கெடுதல்; இவை எழுத்துப் புணர்ச்சிக்குரியன.

விகாரம் (௬) வலித்தல், மெலித்தல் நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல். இவை செய்யுள் விகாரம்.

விகாரம் (௮) காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், அன்றி இடும்பை, அசூயையோ டெட்டெனவுமாம்.

விகுதிவகை (௬) பெயர் விகுதி, தொழிற்பெயர் விகுதி, பண்புப் பெயர் விகுதி, முற்றுவினை விகுதி, பெயரெச்சவினை விகுதி, வினையெச்சவினை விகுதி.

விக்கல் (௪) வாத விக்கல், பித்த விக்கல், சிலேட்டும விக்கல், தொந்த விக்கல்.

விசேட அணியின் பிரிவுகள் (௫) குணக்குறை விசேடம், தொழிற் குறை விசேடம், சாதிக்குறை விசேடம், பொருட்குறை விசேடம், உறுப்புக்குறை விசேடம்.

விடபாகநோய் (௮) வாத விடபாகம், பித்தவிட பாகம் சிலேட்டும விடபாகம், சிரிதோட விடபாகம், அக்கினிவிட பாகம், எரிவு விடபாகம், கந்த விடபாகம், சன்னி விடபாகம்.

விடை (௨) செவ்வனிறை, இறைபயப்பது.

விடை (௮) சுட்டு, எதிர்மறை, உடன்படல், ஏவுதல், எதிர் வினுதல், உற்றதுரைத்தல், உறுவதுகூறல் இனமொழி.

விட்டுணுவின்குரு (௪) சிவபெருமான், நந்திதேவர், உபமன்னிய முனிவர், வசிட்டர்.

விட்டுணுவின் மனைவிமார் (௨) பூதேவி, சீதேவி.

விண்ணின் குணம் (௫) ஆங்காரம், உலோபம், மதம், மானம் வெகுளி.

விதிவாக்கியம் (௩) அபூர்வ விதி, நியம விதி, பரிசங்கியா விதி.

விதூடகக் கூத்துவகை (உ) வேத்து; பொது.

விதைகள் (கூஎ) பாற்கொண்டி விதை, நாயுருவி விதை, நீர்முள்ளி விதை, பூனைக்காலி விதை, சிறுபூனைக்காலி விதை, அழிஞ்சி விதை, தேற்று விதை, புரச விதை, பூவரச விதை. ஆல விதை, அரச விதை, இத்தி விதை, துத்தி விதை, மருதோன்றிவிதை, குருக்கு விதை, பேதாளுவிவிதை, நத்தைச்சூரி விதை, எட்டி விதை, முருங்கைவிதை, மாதுளை விதை விளா விதை, அகத்தி விதை, ஆரைக்கீரை விதை, பேய்ப்பீர்க்கு விதை, பேய்ச்சுரை விதை, தற்பூசணி விதை, ஆவரை விதை, தகரை விதை, ஊமத்தை விதை, ஆளி விதை, புங்கு விதை, இஸ்கோல் விதை, காக்கைகொல்லி விதை, கேக்கு விதை, சப்சா விதை, புத்திரசீவி விதை, பூலி விதை.

வித்தியாதத்துவம் (எ) காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை.

வித்தியேசுரர் (அ) அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏக ருத்திரர், திரிமூர்த்தர், ஸ்ரீகண்டர், சிகண்டி.

வித்துவேடன மூலிகை வகை (அ) கருங்காக்கிணுன், வெண்காக்கிணுன், திருகு கள்ளி, செங்கத்திரி, காட்டாமணக்கு, கீழ்காய் நெல்லி, ஆடுதின்னுப்பாளை, பூனைக்காலி.

வித்தை (உ) பரவித்தை, அபரவித்தை.

வித்தைகள் (கச) வேதம்-ச, வேதாங்கம்-சு, மீமாஞ்சை, தருக்கம், புராணம், தரும நூல், ஆகிய உபாங்கம்-ச.

விநாயகமூர்த்தம் (கசு) சுமுகர், ஏகதந்தர், கபிலர், கஜகர்ணிகர், லம்போதரர், விகடர், விக்கினராசர், கணாதிபர், தூமகேது, கணாத்தியக்ஷர், பாலசந்திரர், கஜானனர், வக்கிரதுண்டர், சூர்ப்பகர்ணர், ஏரம்பர், ஸ்கந்தபூர்வர்.

விநாயகமூர்த்தவகை (கஉ) சிந்தாமணிவிநாயகர், விக்கினராசர், வக்கிரதுண்டர், பாலசந்திரர், கசானனர், மல்லாரென வந்த மயூரேசர், தூமகேது, உடுண்டி விநாயகர், துண்டிராசர், மகோற்கடர், வல்லபை கணேசர், கணேசர்.

விந்துச்சரக்கு வகை (கo) சூதம் எவாச்சாரம், கல்மதம், சிலாசத்து. கடல்நுரை, வீரம், வெள்ளை, சூடன், கல்லுப்பு, பூரம்.

விபாவனை அணியின் வகை (உ) அயற்காரணவிபாவனை, இயல்புவிபாவனை.

விப்புருதி நோய் (எ) கெற்பவிப்புருதி, குவளை விப்புருதி, பித்த விப்புருதி, சந்து விப்புருதி, ஓடு விப்புருதி, சிலேட்டும விப்புருதி, வாத விப்புருதி.

வியாசர்கள் (துவாபரயுகம்) (உஅ) சுவயாம்புமனு வியாசர், பிரசாபதி வியாசர், உசன் வியாசர், அந்தணஃவியாசர், சூர்ய வியாசர், வசிட்டவியாசர், இந்திர வியாசர், மறுவசிட்ட வியாசர், அச்சுத வியாசர், திரிதாம வியாசர், இடப வியாசர், சுததேசன் வியாசர், தருமன் வியாசர், தரக்கு வியாசர், திரியாருணி வியாசர், தனஞ்சய வியாசர், கேமக வியாசர், ருதுஞ்சயன்

வியாசர், பரத்துவாச வியாசர், கௌதம வியாசர், வாச்சுவான் வியாசர், சூட்சுமாயன வியாசர், திரணவிந்து வியாசர், வான்மீகி வியாசர், சத்தி வியாசர், பராசர வியாசர், சாதுகன்னன் வியாசர், வியாத வியாசர்.

வியாசர்கள் (கலியுகம்) (உஅ) சுரத வியாசர், தமனன் வியாசர், சுகோத்திரன் வியாசர், கங்கணன் வியாசர், உலோகாகி வியாசர், யோகி வியாசர், இந்திர வியாசர், சைகிடவ்வியன் வியாசர், திதிவாசன் வியாசர், விடபன் வியாசர், பிருகு வியாசர், உக்கிரபதன் வியாசர், அத்திரி வியாசர், வாலி வியாசர், கோதம வியாசர், கிரிட வியாசர், கோகன்ன வியாசர், காவாசன் வியாசர், சிசுண்டி வியாசர், சடாமலிய வியாசர், அட்டகாச வியாசர், தாருக வியாசர், இலாங்கலி வியாசர், சுவேத வியாசர், சூலி வியாசர், திண்டாமுண்டி வியாசர், சயிட்டுணு வியாசர், சோம தன்மன் வியாசர்.

வியசனம் (எ) சரீரம், மனம், குரோதம், விடயம், தனம், இராச்சியம், சேவக வியசனம்.

வியாக்கியான லட்சணம் (ரு) பதம், வாக்கிய யோசனே, வினு, விடை.

விரதங்கள் (சஇசு) விநாயக விரதம், விநாயகசட்டி விரதம், கலியாணசுந்தர விரதம், சூல விரதம், இடப விரதம், தேவி விரதம், ஐப்பசிஉத்திர விரதம், நவராத்திரி விரதம், கந்தசுக்ர வார விரதம், கிருத்திகை விரதம், கந்தசட்டி, விரதம், வைரவ விரதம், சித்திரைப்பரணி விர விரதம், ஐப்பசிப் பரணி விரதம், வீரபத்திர விரதம், நட்சத்திரபுருட விரதம், ஆதித்திய சயன விரதம், கிருஷ்ணுட்டமி விரதம், உரோகணி சுந்திர சேகர விரதம், சௌபாக்கிய சமன விரதம், அனந்ததிரிதியா விரதம், இரசகல்யாண திரிதியா விரதம், ஆர்த்தானந்ததிரிதியா விரதம், அட்சயதிரிதியா விரதம், சாரஸ்வத விரதம், கிரகணஸ்நாத விரதம், சப்தமிஸ்தபன விரதம், கல்யாணவீம துவாதசி விரதம், அனங்கசயன விரதம், ஆசூன்ய சயன விரதம், அங்காரக விரதம், குருசுக்ரபூசா விரதம், கல்யாண சப்தமி விரதம், அசோக சப்தமி விரதம், பலசப்தமி விரதம், கர்க்கராச பதமி விரதம், கமலசப்தமி விரதம், மந்தாரசப்தமி விரதம், சுப சப்தமி விரதம், விசோகதுவாதசி விரதம், சிவசதுர்த்தசி விரதம், அசோகாதிரா விரதம், தம், மகாவாருணி விரதம், சநித்திரயோதசி பிரதோட விரதம், பட்சப்பிரதோட விரதம், அநங்கத்ர யோதசி விரதம், சைத்ரசுக்ல சதுர்த்தசி விரதம், சிராவணசுக்ல சதுர்த்தி விரதம், சைத்ரகிருட்ண சதுர்த்தசி விரதம், நரசிம்ம சயந்தி, அநந்த சதுர்த்தசி விரதம், கதளீ விரதம், நரகசதுர்த்தசி விரதம், வைகுண்டசதுர்த்தசி விரதம், மகாசிவராத்திரி விரதம், சித்திரா பௌர்ணமி விரதம், வட சாவித்திரி விரதம், ஐப்பசி பௌர்ணமி விரதம், கார்த்திகை பௌர்ணமி விரதம், மார்கழி மாத பௌர்ணமி விரதம், பங்குனி பௌர்ணமி விரதம், பக்தேச்வர விரதம், அமாவாசை விரதம், கேதாரேச்வர விரதம், கார்த்திகை அமாவாசை லட்சுமி விரதம், மார்கழி அமாவாசை விரதம், அச்வத்த பிரதட்சண விரதம், அர்த்தோதய மகோதய விரதம், வார விரதம், நித்யரவி வார விரதம், சோம

வார விரதம், மங்கள கௌரி விரதம், மங்களக்கிரக விரதம், புதவார விரதம், குருவார விரதம், சுக்ரவார விரதம், சனிவார விரதம், சனிவார வேங்கடேசுவர விரதம், வியதிபாத விரதம், மாச உபவாசம், தான்ய சங்கிராந்தி விரதம், இலவணசங்கிராந்தி விரதம், போகசங்கிராந்தி விரதம், ரூபசங்கிராந்தி விரதம், தேசசங்கிராந்தி விரதம், சௌபாக்ய சங்கிராந்தி விரதம், தாம்பூல சங்கிராந்தி விரதம், மனோரத சங்கிராந்தி விரதம், அசோகசங்கிராந்தி விரதம், ஆயுஸ் ஸங்கிராந்தி விரதம், தனசங்கிராந்தி விரதம், தனுஸ் ஸங்கிராந்தி விரதம், மகரசங்கிராந்தி விரதம், மௌன விரதம், இலட்சதீபதான விரதம், துளசி விரதம், பலத்தியகரக விரதம், ஆதிவாரநக்த விரதம், சங்கராந்தித்யாபன விரதம், விபூதிதுவாதசி விரதம், மதனதுவாதசி விரதம், நவராத்திரிப் பிரதமை, பலிபூசனப்பிரதமை, கோக்கிரீடனப் பிரதமை, கார்த்திகை சுக்லத் விதியை, பாக்ருத் விதியை, அட்சய திருதியை விரதம், பரசுராம சயந்தி, அட்சய திருதியை, இரம்பா விரதம், சுவர்ணகௌரி சோடசகௌரி விரதம், சங்காஷ்ட ஹரசதுர்த்தி விரதம், தூர்வாகணபதி விரதம், சித்திவிநாயக விரதம், சித்திரைச்சுக்லபஞ்சமி விரதம், நாகபஞ்சமி விரதம், நாகதஷ்ட விரதம், ருஷிபஞ்சமி விரதம், மாகசுக்லபஞ்சமி விரதம், இலலிதா விரதம், கபிலாஷஷ்டி, சம்பாஷட்டி விரதம், சைத்ர சுக்லசப்தமி விரதம், சீதலா விரதம், அமுத்தாபாண விரதம், சரஸ்வதி விரதம், இரதசப்தமி விரதம், அசலாசப்தமி விரதம், சைத்ரசுக்லாஷ்டமி விரதம், அசோகாஷ்டமி விரதம், சதபல விரதம், கிருட்டிண சன்மாட்டமி விரதம், சேட்டா விரதம், தூர வாட்டமி விரதம், மகாலட்சுமி விரதம், மகாஷ்டமி விரதம், இராமநவமி விரதம், சரசுவதி புத்தகமண்டல விரதம், அட்சய நவமி விரதம், தசஹரதசமி விரதம், திக்தேவதா விரதம், தசாவதார விரதம், விசயதசமி, வஞ்சுள ஏகாதசி விரதம், சுக்கில கிருட்டிண ஏகாதசி விரதம், கோபத்ம விரதம், கார்த்திகை சுக்ல ஏகாதசி விரதம், மார்கழி ஏகாதசி விரதம், வைதரணி விரதம், சைத்ரசுக்லத்வாதசி விரதம், வைசாகசுக்லத்வாதசி விரதம், ஆஷாட சுக்லத்வாதசி விரதம், சிராவணசுக்லத் வாதசி விரதம், வாமன சயந்தி விரதம், க்ஷீராப்தி சயனவிரதம், ஜய பார்வதி விரதம், கோதிராத்ர விரதம், அருமப்பிரதட்சணம், மாதாபித்ரு சேவன விரதம், பதிசேவன விரதம்.

விரதங்கள் (வேறு) (இ-அ) தேவ விரதம், உருத்திர விரதம், வீர விரதம், பிரீதி விரதம், கௌரி விரதம், காம விரதம், சிவ விரதம், சௌமிய விரதம், சௌபாக்ய விரதம், சாரஸ்வத விரதம், சம்பத் விரதம், சுத்தி விரதம், கீர்த்தி விரதம், காமதுக்க விரதம், பித்ரு விரதம், ஆனந்த விரதம், இராச்ய விரதம், அஹிம்சா விரதம், சூரிய விரதம், விட்டுணு விரதம், சீல விரதம், தீப விரதம், திவ்விய விரதம், சாந்தி விரதம், பிரம விரதம், சு விரதம், கல்ப விரதம், பீம விரதம், தார விரதம், மகா விரதம், இரபா விரதம், பிராப்தி விரதம், சுகதி விரதம், வைஸ்வானர விரதம், கிருட்டிண விரதம், தேவ விரதம், பானு விரதம், விநாயக விரதம், கால விரதம், சௌர விரதம், நாராயண விரதம் வருட விரதம், பிரசாபத்திய விரதம், திரியம்பக விர

தம், கிருத விரதம், இந்திர விரதம், சதாசிவ விரதம், அஸ்வ விரதம், கச விரதம், நிர்துக்க விரதம், வருண விரதம், சந்திர விரதம், ருத்ர விரதம், பவானி விரதம், ஸ்நாபக விரதம், தாம விரதம், சிகி விரதம், விப்பிர விரதம்.

விரதம் (௩) அனுவிரதம், குண விரதம், சிக்ஷாவிரதம்.

விருட்சங்கள் (அ) உரோம விருட்சம், கற்ப விருட்சம், கனை பெருமை விருட்சம், சுணங்க விருட்சம், திலக விருட்சம், முண்டக விருட்சம், சாயா விருட்சம், சோதி விருட்சம்.

விருத்தி (௪) சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி.

விருத்திகள் (௩) மனோ விருத்தி, அகண்டாகார விருத்தி, விவேக விருத்தி.

விரை (௫) கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம்.

விலக்குறுப்பு (௧௪) பொருள், யோனி, விருத்தி, சந்தி, சுவை, சாதி, குறிப்பு, சத்துவம், அவிநயம், சொல், சொல்வகை, வண்ணம், வரி, சேதம்.

வில்வகை (௫) அங்குட்டம், தர்ச்சனி, பேடி, அநாமிகை, கனிட்டை, அவற்றுள் அங்குட்டம் பெருவிரல், தர்ச்சனி சுட்டு விரல், பேடி? விரல், இது மத்திமை, அலியெனவும், பெயர் பெறும், அநாமிகை ஆழி விரல், கனிட்டை சிறு விரல்.

விளி (௨) அண்மைவிளி, சேய்மை விளி.

விளையாடல்கள் (௨) நீர் விளையாட்டு, நில விளையாட்டு.

வினா (௨) அக வினா, புற வினா.

வினா வெழுத்துக்கள் (௩) ஆ, ஏ, ஓ.

வினா (௫) அறியான்வினாவல், அறிவொப்புக் காண்டல், ஐயமறுத்தல், அவனறிவுதான், கோடல், மெய்யவற்குக்காட்டல்.

வினா (௪) அறிவு, அறியாமை, ஐயுறல், கொளல், கொடை, ஏவல்.

வினாயகர்சத்திகள் (௨) சித்தி புத்தி, வல்லபை.

வினை (௨) நல்வினை, தீவினை.

வினை (௫) பாதகம் (௫) காண்க.

வினைச்சொற்பொருள் (௬) செய்பவன், நிலம், செயல், கருவி, காலம், செயப்படு பொருள்.

வினைச்சொல்வகை (௪) தெரிநிலை வினைமுற்று, தெரிநிலை வினைப் பெயரெச்சம், தெரிநிலைவினை வினையெச்சம், குறிப்புவினைப் பெயரெச்சம், குறிப்புவினை வினையெச்சம்.

வினோதக்கூத்துவகை (௬) குரவை கலிநடம், குடம், கரணம், நோக்கு, தோற்பாவை.

விஷயம் (௩) பிறிதிவிஷயம், துவேக்ஷா விஷயம், உபேக்ஷ விஷயம்.

# வீ

வீடுபேறு (௪) முத்திப்பேறு.

வீடுபேறு (௨) பதப்பிராப்தி வடிவம், சுவரூபப் பிராப்தி வடிவம்.

வீடுபேற்றின் கூறு (௨) அநர்த்த நிவிருத்தி, பரமாநந்தப் பிராப்தி.

வீணையினரம்பு (எ) குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.

வீரமுழவு (௪) முரசு, நிசாளம், துடுமை, திமிலை.

விழ்ந்தாடல் (௫) துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை.

# வெ

வெருளி (௪) உறுப்பறை, குடிகோள், அலை, கொலை.

வெங்காய வகை (௪) ஈர வெங்காயம், பெரு வெங்காயம், வெள்ளை வெங்காயம், நரி வெங்காயம்.

வெட்சி (௨) மன்னுறு தொழில், தன்னுறு தொழில்.

வெட்சித்திணையின் பிரிவுகள் (௨) வெட்சி, வெட்சியரவம், விரிச்சி, செலவு, வேய், புறத்திறை, ஊர்கொலை, ஆகோள், பூசன் மாற்று, சுரத்துய்த்தல், தலைத்தோற்றம், தந்துநிறை, பாதீடு, உண்டாட்டு, கொடை, புலனறி சிறப்பு, பிள்ளை வழக்கு, துடி நிலை, கொற்றவை நிலை, வெறியாட்டு.

வெண்டை வகை (௪) வெண்டை, சுனை வெண்டை, வெள்ளை வெண்டை, காட்டு வெண்டை.

வெண்பா (௬) குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா, நேரிசைச் சிந்தியல் வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

வெண்பா இறுதி வாய்பாடு (௪) காசு நாள், மலர், பிறப்பு.

வெல்ல வகை (௨) கரும்பு வெல்லம், பனை வெல்லம்.

வெள்ளரி வகை (௪) வெள்ளரி, கக்கரி வெள்ளரி, கசப்பு வெள்ளரி, சுனை வெள்ளரி.

வெறி (௩) இயற்கை வெறி, செயற்கை வெறி, ஏவல் வெறி.

வெற்றிலை வகை (௫) வெற்றிலை, கற்பூர வெற்றிலை, மஞ்சள் வெற்றிலை, மலை வெற்றிலை, கறுப்பு வெற்றிலை.

வெற்றி (அ) பகைநிரைகவர்தல், பகைவர் கவர்ந்த தன்னிரை மீட்டல், பகை மேற் செல்லல், வரும்பகை முன்னெதிருன்றல், தன்னரண் காத்தல், பகையரண் வளைத்தல், பொருதல், போர்வெல்லல், இவற்றிற்கு முறையே வெற்றிமாலையாவன: வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை.

# வே

வேங்கை மரம் (௪) வேங்கை மரம், உதிரவேங்கை மரம், உரோம வேங்கை மரம், மணி முத்து வேங்கை மரம்.

வேதத்தின் காண்டம் (௩) கர்மம், உபாசனை, ஞானம்.

வேதப்பிரிவு (௨) கன்மகாண்டம், ஞானகாண்டம்.

வேதம் (௪) இருக்கு, தைத்திரியம், சாமம் அதர்வணம்—அன்றியு முபவேதம், ௪—ஆயுள்வேதம், அருத்தவேதம், தனுர்வேதம், காந்தருவ வேதம் இவையே அப்பிரதான வேதம் எனப்படும்.

வேதாங்கம் (௬) சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந்தோபிசிதம். இவற்றுட் சிக்ஷையாவது வேதத்தின் உச்சாரண லக்கணத்தை யுணர்த்துவது. வியாகரணமாவது வேதத்தின் பதலக்

கணத்தை விவரிப்பது. நிருத்த மாவது வேதத்தின் பதங் களுக்கு விவரணங்கூறுவது. சோதிடமாவது இலக்கினம், திதி, வாரம், நட்சத்திரம், கரண முதலியவற்றுல் வைதிக கருமங்களைச் செய்தற்குரிய காலத்தை யறிவிப்பது; கற்ப மாவது ஆசுவலாயநீயம், போதாய நீயம், ஆபத்தம்பம் முதலிய சூத்திரங்களிலிருந்து வைதிக கருமங்களைப் பிரயோ கிக்கும் முறைமைகளைக் கூறு வது. சந்தோபிசிதமாவது வேதங்களின் உக்தை முதலிய சந்தோபேதங்களுக்கு அக்கர சங்கியை கற்பிப்பது வேதபுருட னுக்குச் சந்தோபிசிதம் பாத மும், கற்பங்களும், நிருத்தங் காதுகளும், சிட்சை நாசியும், சோதிடங் கண்களும், வியா கரணம் முகமுமாம்.

வேல் (உ) வெள்வேல், கருவேல் ஆகிய மரங்கள்.

வேளாண்மை மாந்தரியல்பு (ய) ஆணை வழி நிற்றல், அழிந் தோரை நிறுத்தல், கைக்கட னுற்றல், கசிசுவகத்துண்மை ஒக்கல் போற்றல், ஓவாமுயற்சி, மன்னிறை தருதல், ஒற்றுமை கோடல், விருந்துபுறந்தருதல், திருந்தியவொழுக்கம்.

வேற்றுமை (அ) எழுவாய், வேற்றுமை முதல் விளிவேற் றுமை யீருகக்கொள்க.

வேற்றுமையுருபுகள் (சரு) ஐ, ஆல், ஆன், ஒடு, ஓடு, கொண்டு, உடன், கு, பொருட்டு, நிமித்தம், இன், இல், நின்று, இருந்து, அது, உடைய, கண், கால், தலை, இடம், திசை, வாய், வயின், முன், பின், சார், வலம், இடம், கீழ், மேல், அத்து, கடை, புடை, முதல், பாடு, அளை, தேம், உழை, வழி, உழி, உளி, உள், அகம், புரம், இல்.

வேந்தற்குற்றுழிப் பிரிவு (கக) பிரிந்தமை கூறல், பிரிவாற் ருமை கார் மிசை வைத்தல், வாளுேக்கி வருந்தல், கூதிர் கண்டுகவறல், முன்பனிக்கு நொந்துரைத்தல், பின்பனி நினைந்திரங்கல், இளவேனில் கண்டின்னலெய்தல், பருவங் காட்டி வற்புறுத்தல், பருவமன் றென்று கூறல், மறுத்துக் கூறல், தேர்வரவு கூறல், வினைமுற்றி நினைதல், நிலைமை நினைந்து கூறல், முகிலொடுரைத்தல், மறவாமை கூறல்.

வேந்தர் மூவர் (௩) செங்கோல் வேந்தர், கொடுங்கோல் வேந் தர், குறுநில வேந்தர்.

வேம்பு வகை (ரு) வேம்பு, கரு வேம்பு, சருக்கரை வேம்பு, சிவனுர் வேம்பு, நிலவேம்பு, மலை வேம்பு.

# வை

வைசியகுல அடியார்கள் (சு) அமர் நீதி நாயனுர்; இயற்பகை நாய னுர், கலிக்கம்ப நாயனுர், காரைக்காலம்மையார், மூர்த்தி நாயனுர், என்பவர்களாம். இவர் சரித்திரங்களைத் திருத்தொண் டர் பெரிய புராணத்திற் காண்க.

வைசியர் (௩) தனவைசியர், பூவைசியர், கோவைசியர், இவர்க்கு முறையே தொழில் பொருளீட்டல், பயிர் செய்தல், ஆன்காத்தல். இவர் வரு ணத்தா லொன்ருயினும் தொழி லான் மூவராயினர்.

வைசியர் தசாங்கம் (ய)கிட்கிந்த மலை, பம்பையாறு, கருடக் கொடி, காந்தண்மலர், பைநாக

முரசம், கவிமாருதப்புரவி, கமல கண்டிகைத்தேர், உபலாயபுரி பட்டணம், வைகுந்த வளநாடு, ஜயவாரணம்.

வைணவாகமம் (உ) பாஞ்சராத் திரம், வைகாநசம்.

வைதிக கருமங்கள் (சஉ) கருப்பா தானம், பும்சவனம், சீமந்தம், சனனம், நாமகரணம், உபநிட் கிராமணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம், விரதம், சந்தியாவந்தனம்,போசன விதி.

வைத்தியஞ் செய்விப்போன் முறை (ச) பொருளுடைமை, மருத்து வன் வழிநிற்றல், நோய்நிலை யுரைத்தல், வன்மை, மருந்துத் துன்பம் பொறுத்தல்.

வைத்தியஞ் செய்வோன் வகை (ச) நோய்ப்பார்த்தற் கஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டு அடைந்த கல்வி நுண்ணறிவுடைமை, பல காலுந்தீர்த்து வருதல், மன மொழி மெய்கள் பரிசுத்தமாதல்.

வைத்தியமருந்தின் வகை (ச) பல பிணிகளுக்குமேற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதிலே பெறப் படுதல், சரீரசுபாவத்தோடு பொருந்தல், இங்ஙனமே அம் மருந்தினை யியற்றுவோனும், நோயாளி யிடத்தே யன்புடை மையும், மனமொழிமெய்கள், பரிசுத்தமாதலும், சொல்லிய படியே செய்தல் வல்லமையும், அறிவுடைமையும் பயிறலுற்ற வனுதல் சால்பு.

வைத்தியம் செய்யும் வகை (கக) வியாதியை யறிதல், அதன் காரணமறிதல், அது நீங்கு முபாயந்தேர்தல், பிணிகாலங் களினளவுணர்தல், நோயாளி யளவறிதல், சரீரசுபாவமறிதல், பருவநாடல், வேதனைகளினள வறிதல், சாத்தியமாய்தல், அசாத்தியமோர்தல், யாப்பிய முணர்தல், மருந்து செய்தல், பழையமருத்துவர் முறையிற் றவறுமை, உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல்.

வைப்புச்சரக்குகள் (கரு) இந் துப்பு, வைப்பு, பொட்டிலுப்பு வைப்பு, வெங்காரவைப்பு, துரிசுவைப்பு, எவாட்சார வைப்பு, நவாச்சார வைப்பு, சத்திச்சாரவைப்பு, ஏகாம்பச் சாரவைப்பு, கெந்தியுப்பு வைப்பு, திலாலவண வைப்பு, கெந்திலவணவைப்பு, காய்ச்சுல வண வைப்பு, பிடாலவண வைப்பு, சிந்துலவணவைப்பு, காசிலவணவைப்பு.

வைரரத்தின வருணப்பயன் (ச) வெள்ளை நிறமுடைய அந்தண சாதிமணியணிந்தக்கால், பிறவி யேழும் மறையவராகப் பிறந்து வாழ்வர். சிவப்புநிறமுடைய அரசசாதிமணி யணிந்தக்கால் பூபாலர் தற்குழப்பூமிபுரப்பர்; பச்சை நிறமுடைய வணிக சாதிமணியணிந்தக்கால் மணி யும் பொன்னுமலிந்து தனிவற வடைந்து தாணியில் வாழ்வர்; கருநிறமுடைய வேளாளசாதி மணி யணிந்தக்கால் தொகை யில்லாத கனகமு நெல்லுமலிய மன்னிவாழுவர்.

வைரரத்தினப் பெருங்குற்றம் (ச) காகபாதகம், களங்கம், விந்து, கீற்று இவற்றின் பயன்களா வன—காகபாதங் கொல்லும், களங்கம் நிலந்தருகிளை கெடுக் கும்; விந்துமனத்திற் சந்தாபந் தரும்; கீற்று வரவினை யேற்றவர் மாய்வர்.

வைரரத்தினவருணம் (ச) அந்த ணன், அரசன், வணிகன் சூத் திரன்.

# பிற்சேர்க்கை

அபாதானகாரகம் — நீக்கப் பொருள் கொடுக்கும் ஐந்தாம் வேற்றுமை வினையோடு முடிவது.

அபாதானம் — ஐந்தாம் வேற்றுமைப் பொருள்.

அம்பலங்கள் — (ச) சிற்றம்பலம்; பேரம்பலம்; பொன்னம்பலம்; வெள்ளியம்பலம்.

ஆணவமலக் குணங்கள் — (அ) பிடித்து விடாதாகை, மோக மிகுத்துச் சொல்லுகை, கோபம் இடையருமை, அறியாமை, விஞ்சுதல், கொலைத்தொழில் நினைவு விஞ்சுதல், எப்பொழுதும், வருத்த முறுதல், யானெனது விஞ்சுதல், மாச்சரியம், விடா நகை என்பன.

உவமைச் சொற்கள் — (கசு) அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப, என்ன, மான, ஒன்ற, ஒடுங்க, ஒட்ட, ஆங்க, என்ற, வியப்ப, எள்ள, விழைய, இறப்ப, நிகர்ப்ப, கள்ள, கடுப்ப, காய்ப்ப மதிப்ப, தகைய, மருள, மாற்ற, மறுப்ப, புல்ல, பொருவ, பொற்ப, போல, வெல்ல, வீழ, நாட, நளிய, நடுங்க, நந்த, ஓட, புரைய.

கன்மத்தின் குணங்கள் — (கூ) மடிவந்திருத்தல், பொசிப்பற்றுக் கிடத்தல், நல்வினை செய்கை, தீவினை செய்கை, தொழிலைச் செய்யாமல் விடுகை, பரநிந்தனை செய்கை என்பன.

காவிரிப்பூம்பட்டினத்துமன்றங்கள் - (ரு) வெள்ளிடை மன்றம், இலஞ்சிமன்றம், நெடுங்கல் மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம்.

தலைவன் தலைவி ஒப்பு — (க0) பிறப்பு, ஒழுக்கம், வீரம், வயது, உருவு, அன்பு, மனவடக்கம், இரக்கம், அறிவு, செல்வம்.

தலைவி அறத்தொடு நிற்குமுறை — (எ) தலைவனை எளியனுக்கிக் கூறுதல்; உயர்த்திக் கூறுதல்; காதல் நிலை உரைத்தல்; பிறரைக் கேட்டல்; காரணவகையாற் குறிப்பித்தல், காட்சி மாத்திரம் உரைத்தல், உண்மை கூறுதல்.

மாயைக்குள்ள குணங்கள் — (எ) பலகலைகற்றும் அறியாமை, களவுசெய்கை, கண்டது மறுத்தல், அறிந்தது மறுத்தல், பொருளுண்டாயும் ஈயாமை, அத்தத்தின் மேலேமாச்சரியம், அழுக்கருமை என்பன.

மெய்ப்பாடுகள் — (அ) நகை, அவலம், இளிவரல், வியப்பு, அச்சம், வெகுளி, பெருமிதம், உவகை.

நூல்வகைகள் — (ரு) உலகநூல், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம்.

வியூகங்கள் — (கூ) காலவியூகம்; குலவியூகம்; நாமவியூகம்; ஞானவியூகம்; சுத்தவியூகம், நாதவியூகம்; விந்து வியூகம்; கலாவியூகம்; சிவவியூகம்.

வேலாவகை— (ச) கருவேலா, வெள்வேலா, குடைவேலா, பீவேலா.

வேளாளகுல அடியார்கள் — (கக) இளையான் குடிமாறநாயனர், விறன்மிண்ட நாயனர், மானக்கஞ்சாற நாயனர், அரிவாட்டாய நாயனர், திருநாவுக்கரசு நாயனர், ஏயர்கோன் கலிக்

காம நாயனர், மூர்க்கநாயனர், சாக்கிய நாயனர், சத்திநாயனர், வாயிலார் நாயனர், முனையடுவார் நாயனர், செருத்துணை நாயனர், கோட்புலி நாயனர்.

வேளைச்செடி — (ு) தைவேளை, வயல்வேளை, தூதுவேளை, வெண்தூதுவேளை, நாய்வேளை.

வேள்வித்தூண்கள் — (ு) வச்சிரத்தூண், இரும்புத்தூண், செம்புத்தூண், வெள்ளித்தூண், பொன் தூண்.

வேற்றுப்பொருள் வைப்பணியின் வகை — (அ) முழுவதுஞ் சேறல், ஒருவழிச்சேறல், முரணித்தோன்றல், சிலேடையின் முடித்தல், கூடா இயற்கை, கூடும் இயற்கை, இருமை இயற்கை, விபரீதம்.

வேற்றுமை உருபுகள் — (௬) ஐ, ஒடு, கு, இன், அது, கண்.

வேற்றுமையணி — (௪) ஒருபொருள் வேற்றுமைச் சமம், இருபொருள் வேற்றுமைச் சமம், உயர்ச்சி.

வைணவ தென்கலைச் சம்பிரதாய பேதங்கள் — (௧அ) கடவுள் திருவருள் எவரிடத்தும் காரணமில்லாமலே உண்டாகும்; வீடுபேறு கடவுள் பொருட்டேயல்லாமல் உயிர்களின் பொருட்டன்று, கர்மஞான பத்தி யோகங்கள் மூன்றும் ஆசாரிய நிட்டையும் வீடு பேற்றிற்கு எளியவழிகள், திருமகள் உயிர்த்தொகைகளைப்போல அணு வடிவம் உள்ளவளேயல்லாமல் எங்கும் நிறைந்தவளல்லள், வீடு பேறளிக்கும் ஆற்றல் திருமகளுக்கில்லை, கடவுள் விரும்பியவர்கள் குற்றங்களைப் போக்யமாய் நினைக்கும் அன்புள்ளவர், கடவுள் பிறர் துன்பங்களைக் கண்டு வருந்தும் அருளுள்ளவர், பிரபத்திபத்தியைப் போன்று வீடுபேற்றிற்கு வழியன்று, பிரபத்திக்கு ஸ்வரூப யாதத்மியஞானம் உள்ளவனே அதிகாரியாவான், பிரபத்திக்குச் சர்வதர்மபரித்தியாகமே இன்றியமையாதது, சேதனர்கள் அனைவரும் பரதந்திரர்களாகையினால் பக்தி முதலிய உபாயங்கள் பாரதந்திரிய சுவரூப விர்த்தங்களாயிருக்கின்றன, பிரபன்னன் சாஸ்திர விகித கர்மங்களை விரும்பல் மற்றவர்கள் அவ்வாறே விரும்புதற் பொருட்டாம், பிரபன்னன் பிரபத்திக்குப் பூர்வ தர்மங்களானவைகளைக் கடைப்பிடிக்க வேண்டியதில்லை, பிரபன்னர்கள் அனைவருக்கும் கடவுளுடைய அருள் உண்டு, பிரபன்னன் தீமைகளைச் செய்யினும் பூர்வ பிரபத்தியை அனுசந்தித்த உடனே அவை தீர்வாம், பிரபன்னன் தாழ்ந்த குலத்தவனாயினும் உயர்குலத்தானைப் போலப் போற்றத்தக்கவன், கடவுள் அணுவடிவமான உயிர்களிடத்தில் நிறைந்திருக்கிருன், மணிசேவித்தல், பஞ்சமகாயஞ்ஞும், ஏகாதசி சிரார்த்தம் சாதி முதலியன சீவன்முத்தனுக்குக் கிடையாது.

வைணவ வடகலைச் சம்பிரதாய பேதங்கள் — (௧அ) கடவுளுக்குண்டாகும் அருள் சகேதுகமாகவிருக்கும், வீடுபேற்றின் பம் உயிர்க்கேயன்றி கடவுளுக்கன்று, அதிகாரிபேதமில்லை, கர்மம் ஞானம் முதலானவைகள் பக்திக்கு அங்கங்களேயல்லாமல் உரிமை வழிகளன்று, திருமகளுக்குக்கூடத் திருமாலைப்போல எங்கும் நிறைந்திருக்குந் தன்மையுண்டு, வீடுபேற்றைக் கொடுக்கும் ஆற்றல் திருமகளுக்கும் உண்டு, பக்த

வரிகளுடைய குற்றங்களில் இலட்சியஞ் செய்யாமல் போதலே வாத்சல்லியமெனப் படும், பிறர் துன்பங்களைப் பார்த்துப் பொறுக்காதிருத்தலே அருள் எனப் பெறும், பிரபத்தியும் பத்தியைப்போல வீடு பேற்றிற்குக் காரணம், பிரபத்திக்கு அகிஞ்சனனே அதிகாரியாவான், பிரபன்னன் அசத்தியால் சர்வதர்ம பரித்தியாகங்களையும் இயற்கையாகவே விட்டுவிடுதல் வேண்டும், பிரபத்தியேயல்லாமல் மற்ற பக்தி முதலிய உபாயங்கள் அதிகாரிகளின் பேதங்களை அனுசரித்து இருக்கும், பிரபன்னன் சாத்திரவிகித கர்மங்களை விரும்புதல் கடவுளுடைய கட்டளை அனுசரித்துப் பகவானின் விருப்பத்தின் பொருட்டாம், பிரபன்னனுக்குப் பிரபத்திக்கு முன்னுற்ற கர்மங்கள் பிரபத்திக்கு அங்கமாயிருத்தல் பற்றி ஆசரிக்கவேண்டும், பிரபன்னர் அனைவருக்கும் கடவுளினுடைய அருள் உண்டாம், பிரபன்னன் பாதகங்கள் செய்தால் மீண்டும் பிரபத்தியை முறையுடன் செய்ய வேண்டும், தாழ்ந்த குலத்தினனான பிரபன்னன் வருணாச்சிரம தரும மாறுபாடில்லாமல் சொற்களால் மட்டுமே பாராட்டத்தக்கவன், கடவுள் அணுசுவருபர்களான உயிர்களின் வெளிப்புறத்தில் வியாபித்திருப்பானேயல்லாமல் அணுக்களில் வியாபித்தல் அசங்கதம், விரசாந்திக்கு இப்புறத்திலுள்ள அநித்தியமான கைவல்லியத்தை அனுபவித்த பிறகு பரமதத்தையும் அனுபவித்தல் கூடும்.

வைணவாகமம் — (உ) பாஞ்சராத்திரம், வைகானசம்.

வைரவர் — (அ) மகாவைரவர், உக்கிர வைரவர், சண்டாள வைரவர், குரோத வைரவர், உன்மத்தவைரவர், கபால வைரவர், பீடண வைரவர், சாகர வைரவர், (இவர்கள் சிவலோகக் கோட்டையில் காவல் செய்பவர்கள்.)

வைராக்கியங்கள் — (௩) மயான வைராக்கியம், பிரசவ வைராக்கியம், பகை வைராக்கியம்.

# நூல்கள்

## அகநானூறு

அகநானூற்றின் பிரிவுகள் — (௩) களிற்றியானைநிரை, உ. மணிமிடைபவளம், ௩. நித்திலக் கோவை.

## அகப்பொருள் விளக்கம்

அகப்பொருள் விளக்க இயல்கள்- (௫) க. அகத்திணையியல், உ. களவியல். ௩. வரைவியல், ௪. கற்பியல், ௫. ஒழிபியல்.

## இரகுவமிசம்

இரகுவமிசப்படலங்கள் — (உக) பாயிரம், ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம், அரசியற்படலம், குறை கூறுபடலம், தேனுவந்தனப்படலம், இரகுவுற்பத்திப்படலம், யாகப்படலம், திக்குவிசயப்படலம், அயனுதயப்படலம், அயனெழுச்சிப் படலம், மாலையீட்டுப்படலம், கடிமணப்படலம், மீட்சிப்படலம், இரகு கதியுறுபடலம், இந்துமதிபிறப்புநீங்கு படலம், தசரதன்சாபமேற்றபடலம், திரு

வவதாரப்படலம், சீதைவனம் புகுபடலம், இலவணன் வதைப் படலம், சம்புகன்வதைப்பட லம், அவதார நீங்குபடலம், குச னயோத்தி செல்படலம், வாகு வலயப்படலம், முடி சூட்டுப் படலம், குலமுறைப்படலம்.

## இலக்கணக்கொத்துரை

க. பாயிரம், உ. வேற்றுமையி யல் ௩. வினையியல், ௪. ஒழிபியல்.

## இலக்கண நூல்கள்—(௩அ)

குமாரம், ஐந்திரம், அகத்தியம், தொல்காப்பியம், அரியவிதி, இலக்கணத் திரட்டு, இலக்கண விளக்கம், இலக்கணக்கொத்து, இலக்கணவிளக்கச் சூருவளி, இறையனார் அகப்பொருள், வீர சோழியம், நேமிநாதம், குவல யாநந்தம், தொன்னூல் விளக் கம், கல்லாடம், நன்னூல், காரிகை, யாப்பருங்கலம், நம் பியகப்பொருள், புறப்பொருட் பன்னிருபடலம், தண்டியலங் காரம், மாறனலங்காரம், சிதம் பரப்பாட்டியல், வரையறுத்த பாட்டியல், செய்யுளியல், பொருத்தவியல், வெண்பாப் பாட்டியல், பிரபந்ததீபம், அவ வியம், மயேச்சுரம், பல்காயம், நற்றத்தம், சினேந்திரம், வாம னூல், கையனார் நூல், காக்கை பாடினியம், கவிசாகரம், பிர யோகவிவேகம்.

## இலக்கணவிளக்கம்

இலக்கண விளக்கம் — (௫) க. எழுத்தியல் உ. சொல்லியல் ௩. புணரியல் ௪. பொருளியல், ரு. யாப்பியல் ௬. அணியியல்.

## ஈசுர கீதை

ஈசுரக்கீதையின் அத்தியாயங்கள்—(௧௧) இருடிகள் வினவும் அத் தியாயம், சாங்கியயோக அத்தி யாயம், சம்பிரதாய அத்தியா யம், பத்திமை அத்தியாயம், விசுவரூப அத்தியாயம், சிவசத் தியின் செயலுரைத்த அத்தியா யம், தத்துவநிசம் விபூதி அத்தி யாயம், பிரபஞ்ச அத்தியாயம், மாயாவிகார, அத்தியாயம், தத்து வதரிசன அத்தியாயம், யோக அத்தியாயம்.

## உபதேச காண்டம்

உபதேசகாண்டத்தின் சருக்கங் கள் — (௬௧) கைலைமான்மியச் சருக்கம், சூராதிகளொடுக்கச் சருக்கம், அயமுகிசருக்கம், மாயை சருக்கம், விபூதிமான்மி யச்சருக்கம், உருத்திராக்கமான் மியச்சருக்கம், பஞ்சாக்கரமான் மியச்சருக்கம், சிவநாமமான்மியச் சருக்கம், சிவவிரதமான்மியச் சருக்கம், சிவபுண்ணிய மான் மியச்சருக்கம், சிவபுராணமான் மியச்சருக்கம், சிவத்துரோகிக ளெய்தும் நரகவேதனைச்சருக் கம், சிவபூசைமான்மியச்சருக் கம், மச்சாவதாரச் சருக்கம், கூர் மாவதாரச்சருக்கம் வராகவ தாரச் சருக்கம், நரசிங்காவதா ரச் சருக்கம், வாமனாவதாரச் சருக்கம், பரசுராமாவதாரச் சருக்கம், இராமாவதாரச்சருக் கம், புலபத்திரராமாவதாரச் சருக்கம், கிருட்டிணாவதாரச் சருக்கம், மாயன்வரம்பெறுசருக் கம், நரகாசுரன் வதைச்சருக் கம், திருமால்சிவார்ச்சனைச் சருக்கம், பிரமன் சிவார்ச்சனைச் சருக்கம், இந்திரன் சிவார்ச் சனைச்சருக்கம், திரிபுரவிசயச் சருக்கம். அந்தகாசுரன் வதைச் சருக்கம், பண்டாசுரன் வதைச்

சருக்கம், அரிபிரமாதியர் பூசனைச் சருக்கம், சனகாதியர் சிவார்ச்சனைச் சருக்கம், வாணாசுரன் பூசனைச்சருக்கம், மன்மதன் சிவார்ச்சனைச் சருக்கம், கிருதுசிவார்ச்சனைச் சருக்கம், இலக்குமி பூமிதேவி சகத்திர நாமார்ச்சனைச்சருக்கம், சிவார்ச்சனைமான்மியச் சருக்கம், குரு மான்மியச் சருக்கம், சரியையாதிமான்மியச் சருக்கம், மூர்த்திவிசேடச் சருக்கம், சிவக்காட்சிப் பேற்றுச் சருக்கம்.

## ஐங்குறுநூறு

### க. மருதம்

வேட்கைப்பத்து, வேழப்பத்து, கள்வன்பத்து, தோழிக்குரைத்த பத்து, புலவிப்பத்து, தோழி கூற்றுப்பத்து, கிழத்தி கூற்றுப்பத்து, புனலாட்டுப் பத்து, புலவி விராய பத்து, எருமைப்பத்து.

### உ. நெய்தல்

தாய்க்குரைத்தபத்து, தோழிக்குரைத்தபத்து, கிழவற்குரைத்த பத்து, பாணற்குரைத்தபத்து, ஞாழற்பத்து, வெள்ளாங்குருகுப் பத்து, சிறுவெண்காக்கைப் பத்து, தொண்டிப்பத்து, நெய்தற்பத்து, வளைப்பத்து.

### ங. குறிஞ்சி

அன்னாய்வாழிப்பத்து, அன்னாய்ப்பத்து, அம்மவாழிப்பத்து, தெய்யோப்பத்து, வெறிப்பத்து, குன்றக்குறவன்பத்து, கேழற் பத்து, குரக்குப்பத்து, கிள்ளைப் பத்து, மஞ்ஞைப்பத்து.

### ச. பாலை

செலவழுங்குவித்தபத்து, செலவுப்பத்து, இடைச்சுரப்பத்து, தலைவியிரங்குபத்து, இளவேனிற்பத்து, வரவுரைத்தபத்து, முன்னிலைப்பத்து, மகட்போக்கியவழி தாயிரங்குபத்து.

### ரு. முல்லை

செவிலிகூற்றுப்பத்து, கிழவன் பருவம் பாராட்டுப்பத்து, விரவுப்பத்து, புறவணிப்பத்து, பாசறைப்பத்து, பருவங்கண்டு கிழத்தியுரைத்தபத்து, தோழிவற்புறுத்தபத்து, பாணன்பத்து, தேர்வியங்கொண்டபத்து, வரவுச்சிறப்புரைத்தபத்து.

## கம்பராமாயணம்

கம்பராமாயணத்தின் காண்டங்கள் — (கு) பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தாகாண்டம் சுந்தர காண்டம், உயுத்த காண்டம், கம்பராமாயணத்தின் படலங்கள் (ககஅ).

### க. பாலகாண்டம் படலங்கள் (உஉ)

ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம், அரசியற் படலம், திருவவதாரப்படலம், கையடைப்படலம், தாடகை வதைப்படலம், வேள்விப்படலம், அகலிகைப்படலம், மிதிலைக்காட்சிப்படலம், குலமுறை கிளத்து படலம், கார்முகப்படலம், எழுச்சிப்படலம், வரைக் காட்சிப்படலம், பூக்கொய்படலம், நீர்விளையாட்டுப்படலம், உண்டாட்டுப்படலம், எதிர் கோட்படலம், உலாவியற்பட

லம், கோலங்காண்படலம், கடிமணப்படலம், பரசுராமப்படலம்.

அயோத்யா காண்டம்
படலங்கள் (கஉ)

மந்திரப்படலம், மந்தரைசூழ்ச்சிப்படலம், கைகேசிசூழ்வினைப் படலம், நகர்நீங்குபடலம், தைலமாட்டுபடலம், கங்கைப்படலம், வனம்புகுபடலம், சித்திரகூடப்படலம், பள்ளியடைப் படலம், ஆற்றுப்படலம், குகப் படலம், கிளைகண்டு நீங்குபடலம்.

ங. ஆரணியகாண்டம்
படலங்கள் (கக)

விராதன் வதைப்படலம், சரபங்கர் பிறப்பு நீங்குபடலம், அகத்தியப்படலம், சடாயுகாண்படலம், சூர்ப்பணகைப்படலம், கரன்வதைப்படலம், மாரீசன் வதைப்படலம், சடாயுவுயிர் நீத்தபடலம், அயோமுகிப்படலம், கவந்தப்படலம், சவரி பிறப்பு நீங்கு படலம்.

ச. கிஷ்கிந்தாகாண்டம்
படலங்கள் (கரு)

பம்பைப்படலம், அநுமப்படலம், நட்புக்கோட்படலம், மராமரப்படலம், துந்துபிப்படலம், கலன்காண்படலம், வாலிவதைப்படலம், அரசியற்படலம், கார்காலப்படலம், கிட்கிந்தைப் படலம், தானைகாண்படலம், நாடவிட்டபடலம், பிலநீங்குபடலம், ஆறு செல்படலம், சம்பாதிப்படலம், மகேந்திரப்படலம்.

ரு. சுந்தரகாண்டம்
படலங்கள் (கரு)

கடல்தாவுபடலம், ஊர்தேடுபடலம், காட்சிப்படலம், நிந்தனைப்படலம், உருக்காட்டு படலம், சூடாமணிப்படலம், பொழிலிறுத்தபடலம், கிங்கரர்வதைப் படலம், சம்புமாலிவதைப்படலம், பஞ்சசேனாபதிகள் வதைப் படலம், அட்சகுமாரன் வதைப் படலம், பாசப்படலம், பிணிவீட்டுபடலம், இலங்கையெரியூட்டுபடலம், திருவடிதொழுத படலம்.

சு. உயுத்தகாண்டம்
படலங்கள் (ரு ௮)

கடல்காண்படலம், மந்திரப்படலம், இரணியன் வதைப்படலம், விபீடணன் அடைக்கலப்படலம், இலங்கைகேள்விப்படலம், வருணனைவழிவேண்டு படலம், சேதுபந்தனப்படலம், ஒற்றுக் கேள்விப்படலம், இலங்கை காண்படலம், இராவணன் தானைகாண்படலம், மகுடபங்கப்படலம், அணிவகுப்புப்படலம், அங்கதன் தூதுப்படலம், முதற்போர்ப்படலம், கும்பகருணன் வதைப்படலம், மாயாசனகப்படலம், அதிகாயன்வதைப் படலம், நாகபாசப்படலம், படைத்தலைவர் வதைப்படலம், மகரக்கண்ணன் வதைப்படலம், பிரமாத்திரப்படலம், பிராட்டி களங்காண்படலம், மருத்துமலைப்படலம், களியாட்டுப்படலம், மாயாசீதைப்படலம், நிகும்பலைப்படலம், இந்திரசித்து வதைப்படலம், இராவணன் சோகப்படலம், படைக்காட்சிப் படலம், மூலபலவதைப்படலம், வேலேற்றபடலம், வானரர் களங்காண்படலம், இராவணன் களங்காண்படலம், தேரேறுபடலம், இராவணன் வதைப்படலம், மீட்சிப்படலம், திருமுடி சூட்டுபடலம், விடைகொடுத்த படலம்.

## கலிங்கத்துப்பரணி

கலிங்கத்துப்பரணியின் பிரிவுகள்—(கக) கடவுள்வாழ்த்து, கடைதிறப்பு, காடுபாடியது, கோயில்பாடியது, தேவியைப்பாடியது, பேய்களைப் பாடியது, இந்திரசாலம், இராசபாரம்பரியம், பேய்முறைப்பாடு, அவதாரம், காளிக்குக்கூளிகூறியது, போர்பாடியது, களம்பாடியது.

## கலித்தொகை

கலித்தொகையின் பிரிவுகள்—(ரு) க. பாலைக்கலி, உ. குறிஞ்சிக்கலி, ௩. மருதக்கலி, ௪. முல்லைக்கலி, ரு. நெய்தற்கலி.

## காசிகாண்டம்

காசிகாண்டப்படலங்கள் — (௪00) அகத்தியர் விந்தமலையடைந்தது, அகத்தியர் முருகனையடைந்தது, அமுதேசன் முதலியலிங்கங்களின் சிறப்பு, அருணாதித்தன் முதலாதித்தர் கதைகள், அலகைதேவனாகியது, அவிமுத்தேசன்கதை, ஆசாரம், இரத்தினேசன்கதை, இல்லறம், இல்லொழுக்கம், உத்தராதித்தன் கதை, ஓங்காரலிங்கத்தின் கதை, ஓங்காரலிங்கத்தின் சிறப்பு, கங்கிளகேதுவதை, கங்கேசன்வரலாறு, கங்கையில் எலும்பு விழுந்தது, கங்கையின் ஆயிரம்நாமம், கங்கையின் சிறப்பு, கடோற்காதித்தன் கருடேசன் கதைகள், கணபதிகாசியை அடைந்தது, கணபதி திவோதானனைக்கண்டது, கலாவதிபேறுபெற்றது, கற்பிலக்கணங்கூறியது, காசிப்படம், காசியின் சிறப்புரைத்தது, காலமறிவதுரைத்தது, கிருத்திவாகேசன்தோன்றியது, கிளியின்கதை, கேதாரலிங்கத்தின் கதை, சதீச்சுரன் வரலாறு, சத்துபுரியின் சிறப்பு, சயிலேசன் முதலான இலிங்கங்களின்கதை, சாம்பாதித்தன்கதை, சிவசன்மாவை இயமன் எதிர்கொண்டது, சிவசன்மாசூரியலோகங்கண்டது, சிவசன்மாதெய்வலோகங்கண்டது, சிவசன்மா அக்கினியுலகங்கண்டது, சிவசன்மாநிருதியுலகும் வருணனுலகுங்கண்டது, சிவசன்மாவாயுஉலகுங்குபேரனுலகுங்கண்டது, சிவசன்மா ஈசானனுலகும் சந்திரனுலகுங்கண்டது, சிவசன்மா தாரகையுலகும் புதனுலகுங்கண்டது சிவசன்மா சுக்கிரனுலகங்கண்டது, சிவசன்மா செவ்வாய் வியாழம் சனியுலகங்கண்டது, சிவசன்மா சத்தவிருடியருலகங்கண்டது, சிவசன்மாமகலோகமுதல் நாலுலகங்கண்டது. சிவசன்மாவுக்கு அண்டத்தளவு கூறியதும் மாலுக்கு முடிசூட்டியதும், சிவசன்மாமுத்திபெற்றது, சிவகணங்கள் காசியைஅடைந்தது, சேவியத்திறமுரைத்தது, தக்கன்வேள்வி செய்தது, தக்கன்வேள்வியை அழித்தது, தக்கன்வதை, தண்டபாணிதோன்றியது, தருமேசலிங்கத்தின் சிறப்புரைத்தது, திரிலோசனலிங்கந்தோன்றியது, திரிலோசனலிங்கத்தின் சிறப்பு, திவோதானனைட்டிற்படுத்தது, திவோதானன் முத்தியடைந்தது, தீர்த்தமகிமையுரைத்தது, துருபாதித்தன்மயூராதித்தன் கதைகளுரைத்தது, துருவன் வழிக்கொண்டது, துருவன் தவஞ்செய்தது, துருவன்பதம்பெற்றது, துருவாசர் வரம்பெற்றது, துர்க்கன் அரசாட்சி, துர்க்கன்படையெழுச்சி, துர்க்கன் வதை, துர்த்தமன்கதை. தேவர்கள் பிரமலோகம் அடைந்தது, தேவர்கள் அகத்தியர் ஆசிரமத்

திற்கு வந்தது, தேவிதக்கன் வேள்விச்சாலையடைந்தது, நருமதேசன்வரலாறு, நாரதர்விந்தவரையைக்கண்டது, பஞ்சநதத்தின் வரலாறு, பராசரலிங்கம் முதலானலிங்கங்களின் கதை, பார்வதீசன்கதை, பிரமசரியங் கூறியது, பிரமன்வேள்விசெய்தது, மகளிர் இலக்கணங் கூறியது, மணிகன்னிகையின்சிறப்பு, மனோரதத்திரிதிகை விதியுரைத்தது, முத்திமண்டபத்தின்கதை, யோகநிலை, யோகினிகள் காசியை அடைந்தது, லோலாதித்தன்கதை, வச்சிரபஞ்சரகவசம், வயிரவன் தோன்றியது, வாரணாசி சிறப்புரைத்தது, விசுவகன்மேசலிங்கந் தோன்றியது, விசுவநாதர் காசியை அடைந்தது, விசுவநாதர் முனிவனை யளித்தது, விசுவநாதர்காசியின் சிறப்பு முனிவருக் குரைத்தது, விட்டுணுகாசியை அடைந்தது, விசுவநாதர் மகிமையுரைத்தது, விந்துமாதவன் தோன்றியது, விந்துமாதவன் அக்கினிவிந்துவுக்குத் தீர்த்தமகிமையுரைத்தது, வியாதன்கையும் நாவும் எழாதுநின்றது, வியாதன் சாபமிட்டது, வீரேசன் தோன்றியது, சேவிந்திரவளமுந்தீர்த்தத்தின் கதையும் உரைத்தது.

## காஞ்சிப்புராணம்

காஞ்சிப்புராணத்தின் படலங்கள் —(எ०) அந்தகேசப்படலம், அந்தர்வேதிப்படலம், அபிராமீச்சரப்படலம், அமரீசப்படலம், அரிசாபபயந்தீர்த்த தானப்படலம், அநந்தபற்ப நாபேசப்படலம், அநேகதங்காவதப்படலம், ஆதிபிதீசப்படலம், இட்டசித்தீச்சரப்படலம், இரணீசப்படலம், இருபத்தெண்டளிப்படலம், இரேணுகீச்சரப்படலம், இறவாத்தானப்படலம், ஒழுக்கப்படலம், கச்சபேசப்படலம், கச்சிமயானப்படலம், கண்ணீசப்படலம், கயிலாயப்படலம், கழுவாய்ப்படலம், காயாரோகணப்படலம். குமரகோட்டப்படலம், சகோரதீர்த்தப்படலம், சத்ததானப்படலம், சலந்தரீசப்படலம், சர்வதீர்த்தப்படலம், சனற்குமாரப்படலம், சார்ந்தாசயப்படலம், சித்தீசப்படலம், சிவபுண்ணியப்படலம், சிவாத்தானப்படலம், சுரகரீசப்படலம், தக்கீசப்படலம், தலவிசேடப்படலம், தழுவக்குழைந்தபடலம், தான்தோன்றீச்சரப்படலம், திருக்கண்புதைத்தபடலம், திருநகரப்படலம், திருநகரேற்றுப்படலம், திருநாட்டுப்படலம், திருநெறிக்காரைக் காட்டுப்படலம், திருமணப்படலம், திருமாற்பேற்றுப்படலம், திருமேற்றளிப்படலம், திருவேகம்பப்படலம், திருவோணகாந்தன் தளிப்படலம், தீர்த்தவிசேடப்படலம், நவக்கிரகீசப்படலம், நாரசிங்கீசப்படலம், பணாதரீசப்படலம், பதிகப்படலம், பரசுராமீச்சரப்படலம், பராசரேசப்படலம், பலபத்திராமீசப்படலம், பன்னிருநாமப்படலம், பாண்டவீசப்படலம், பிறவாத்தானப்படலம், புண்ணியகோடீசப்படலம், புராணவரலாற்றுப்படலம், மகாலிங்கப்படலம், மச்சீசப்படலம், மணிகண்டீச்சரப்படலம், மாசாத்தன் தளிப்படலம், முத்தீசப்படலம், முப்புராரிகோட்டப்படலம், யோகாச்சாரியர் தளிப்படலம், வயிரவீசப்படலம், வலம்புரிவிநாயகப்படலம், வன்மீகநாதப்படலம், வாணீசப்படலம், விடுவச்சேனீசப்படலம், விம்மிதப்படலம், வீராகவீசப்படலம், வீராட்டகாசப்படலம்.

குமரகுருபரர்பிரபந்தத்திரட்டு நூல்கள்—(கசு) திருச்செந்தூர்க்கந்

தர்கலிவெண்பா, மீனாட்சியம்மைபிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை, மதுரைக் கலம்பகம், நீதிநெறிவிளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக் குமாரசாமிபிள்ளைத் தமிழ், சிதம்பரமும்மணிக்கோவை, சிதம்பரச்செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, பண்டாரமும்மணிக் கோவை, காசிக்கலம்பகம், சகலகலாவல்லிமாலை.

குமாரதேவர் சாத்திரக்கோவை — (கக) மகாராசாதுறவு, சுத்தசாதகம், விஞ்ஞானசாரம், அத்துவிதவுண்மை, பிரமானுபூதிவிளக்கம், ஞானவம்மானை, வேதாந்தசாரக்கட்டளை வேதாந்தசகாரியக் கட்டளை, சகசநிட்டை உபதேசசித்தாந்தக்கட்டளை, பிரமசித்தியகவல், சிவதரிசன அகவல், ஆகமநெறியகவல், வேதநெறியகவல். பிரமாநுபவஅகவல், சிவசமரசவாத அகவல், பெரியநாயகியம்மன்பதிகம்.

கூர்மபுராணம்

கூர்மபுராணத்தின் படலங்கள் — (கக) இந்திரத்துய்மன் முத்திபெற்றது, வருணாச்சிரமமுரைத்தது, ஆச்சிரமமுரைத்தது, பிரகிருதித்தோற்றமு ரத்தது, பிரமாவினுடைய காலவளவையுரைத்தது, சுவேதவராககற்பமுரைத்தது, பலவகைத்தோற்றமுரைத்தது, தமோகுணசிருட்டியுரைத்தது, பிரமவிட்டுணுகளுக்குச்சிவன் தோன்றிவரங்கொடுத்தது, அட்டமூர்த்தியியல்புரைத்தது, பார்வதிதோற்றமுரைத்தது, திருக்கலியாணம், பிருகுவாதியர் தோற்றமுரைத்தது, தக்கனைச்சபித்தது, தக்கன்வேள்வியழித்தது, அந்தகாசுரன் சாருபமடைந்தது, மாவலிமூவடிமண்ணளித்தது, வாணாசுரன் சாருபமடைந்தது, புலத்தியன் மரபுரைத்தது சூரியன் மரபுரைத்தது, இராமனவதரித்தது, இராமன்வனம்புகுந்தது, இராவணவதை, இராமன் சிவலிங்கப்பிரதிட்டைபண்ணினது, இராமன் முடிசூடியது, அகத்தியர் இராவணன்மரபுரைத்தது, இராமன் வைகுந்த மடைந்தது, சந்திரவங்கிசமுரைத்தது, கண்ணனவதரித்தது, கண்ணன் மணம் புணர்ந்தது, கண்ணன் சிவதீக்கைபெற்றுநோற்றுச்சாம்பனைப்பெற்றது, கண்ணன் சிவபூசைபண்ணினது, கண்ணன் பூமிபாரந்தீர்த்தது, கண்ணன் வைகுந்தமடைந்தது, யுகதன்மம் உரைத்தது, காசியின் சிறப்புரைத்தது, மனுமரபுரைத்தது, மண்டலவளவையுரைத்தது, ஆதவர்ச்சிறப்புரைத்தது, ஆதவர் கதிச்சிறப்புரைத்தது, உலகநிலையுரைத்தது, சம்புத்தீவின் சிறப்புரைத்தது, மேருவின்சிறப்புரைத்தது, நவகண்டத்துறைவோரியற்கையுரைத்தது, வானவர்வாழ்க்கையுரைத்தது,பிலக்கமுதலான தீவுகளியற்கையுரைத்தது, மனுவந்தரமுரைத்தது, வியாதர் வரலாறுரைத்தது, வெதிரிகாச்சிரமத்தில்மகேசன் தோன்றியது, சாங்கியயோகமுரைத்தது, சம்பிரதாயம், பத்திமையுரைத்தது, விச்சுவரூபம், சிவசத்தியின் செயலுரைத்தது, விபூதியுரைத்தது, பிரபஞ்சத்தோற்றமுரைத்தது, மாயாவிகாரமுரைத்தது, தத்துவதரிசனமுரைத்தது, யோகமுரைத்தது, வியாதர்தருமமுரைத்தது, சுத்தாசமனமுரைத்தது, பிரமசரியமுரைத்தது, இல்லறமுரைத்தது, பொது விதியுரைத்தது, அல்லவையொழித்தலுரைத்தது

நித்தியகன்ம முரைத்தது, சிரார்த்தமுரைத்தது, சிரார்த்த பாத்திரமுரைத்தது, தென்புலத்தோர்க்கூட்டு முறைமையுரைத்தது, சூதகாசௌசமுரைத்தது, அமுற்கருமமுரைத்தது, இல்லற பேதமுரைத்தது, தானமுரைத்தது, வானப்பிரத்த முரைத்தது சந்நியாசமுரைத்தது, முற்றத் துறந்தோர்பிராயச்சித்தமுரைத்தது, பிரமகத்திப்பிராயச்சித்த முரைத்தது, வயிரவன்பலியிரந்தது, மாபாதகம்பிராயச்சித்த முரைத்தது, பிராயச்சித்த முரைத்தது, திரிபுரதகன முரைத்தது, சிவபூசைப்பலனுரைத்தது, சிவன் திருநாமமறியாதுரைத்தது, உபமன்னியு பேறுபெற்றது, சலந்தரன்வதையுரைத்தது, மாயோன்நேமி பெற்றது, சுவேதன் கூற்றினைக் கடந்தது, தீர்த்தமகிமையுரைத்தது, தாருகாவனத்திற்பலியிரந்தது, தாருகாவனத்து முனிவர்க்குச்சிவனருள் புரிந்தது, குருக்கதையின் சிறப்புரைத்தது, நந்திக்குமுடிசூட்டியது, நைமித்தியகப்பிரளய முரைத்தது, பிரா இருதப்பிரளயமும் ஆதியந்தப் பிரளயமுரைத்தது.

## சிதம்பரப்பாட்டியல்

சிதம்பரப்பாட்டியலின் பிரிவுகள்—(ரு) க.உறுப்பியல், உ. செய்யுளியல் ௩. ஒழிபியல் ௪. பொருத்தவியல், ரு. மரபியல்.

## சிலப்பதிகாரம்

காண்டங்கள் (௩)க. புகார்க்காண்டம், உ. மதுரைக்காண்டம், ௩. வஞ்சிக்காண்டம்.

### க. புகார்க்காண்டம்

சிலப்பதிகாரத்தின் காதைகள் — மங்கலவாழ்த்துப் பாடல், மனையறம்படுத்தகாதை, அரங்கேற்றுகாதை, அந்திமாலைச் சிறப்புச் செய்காதை, இந்திரவிழவூரெடுத்தகாதை, கடலாடுகாதை, வேனிற்காதை, கனாத்திறமுரைத்தகாதை, நாடுகாண்காதை.

### உ. மதுரைக்காண்டம்

காடுகாண்கதை, வேட்டுவவரி, புறஞ்சேரியிறுத்தகாதை, ஊர்காண்கதை, அடைக்கலக்காதை, கொலைக்களக்காதை, ஆய்ச்சியர் குரவை, துன்பமாலை ஊர்சூழ்வரி, வழக்குரைகாதை, வஞ்சினமாலை, அழற்படுகாதை, கட்டுரைகாதை.

### ௩. வஞ்சிக்காண்டம்

குன்றக்குரவை, காட்சிக்காதை, கால்கோட்காதை, நீர்ப்படைக்காதை, நடுகற்காதை, வாழ்த்துக்காதை, வரந்தருகாதை.

சிவஞானமுனிவர்பிரபந்தத்திரட்டு நூல்கள்—(கச)சுலோகபஞ்சக மொழிபெயர்ப்பு. கச்சிஆனந்த ருத்திரேசர்பதிகம், செப்பறை அகிலாண்டேசுவரிபதிகம், திருவேகம்பர் ஆநந்தக்களிப்பு, சிவதத்துவவிவேகம், சோமேசர் முதுமொழிவெண்பா, செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகையம்மை பிள்ளைத் தமிழ், குளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப் பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப் பத்தந்தாதி, திருவேகம்பரந்தாதி, திருமுல்லைவாயிலந்தாதி, திருத்தொண்டர் திருநாமக்கோவை.

## சிவதருமோத்தரம்

சிவதருமோத்தரத்தின் இயல்கள் —(கஉ) பரமதருமாதியியல்;சிவஞானதானவியல், ஐவகையாக

வியல், பலவிசிட்டகாரண வியல், சிவதருமவியல், பாவவியல், சுவர்க்கநரகவியல், சனனமரணவியல், சுவர்க்கநரகசேடவியல், சிவஞானயோகவியல், பரிகாரவியல், கோபுரவியல்.

சிவப்பிரகாசர் பிரபந்தத்திரட்டு நூல்கள்— (உஅ) சோணசைலமாலை, திருச்செந்திலந்தாதி, திருவெங்கைக்கோவை, திருவெங்கைக்கலம்பகம், திருவெங்கையுலா, திருவெங்கையலங்காரம், சிவப்பிரகாசவிகாசம், தர்க்கபரிபாடை, நால்வர் நான்மணிமாலை, சதமணிமாலை, சிவஞானபாலைய தேசிகர் நெஞ்சுவிடுதூது, தாலாட்டு, பிள்ளைத்தமிழ், கலம்பகம், திருக்கூவப்புராணம், பிரபுலிங்கலீலை, வேதாந்தசூடாமணி, சித்தாந்த சிகாமணி, பழமலையந்தாதி, பெரியநாயகியம்மை விருத்தம், நன்னெறி, இட்டலிங்கஅபிடேகமாலை, நெடுங்கழி நெடில், குறுங்கழிநெடில், நிரஞ்சனமாலை, கைத்தலமாலை, சீகாளத்திப்புராணம். ஏசுமத நிராகரணம்

## சிவரகசியம்

சிவரகசியத்தின் சருக்கங்கள் — (௧00) அபுத்திபூருவசிவபுண்ணியச்சருக்கம், ஆயுத்தேவச் சருக்கம், இராசேந்திரச்சருக்கம், உருத்திரவீணைவரலாற்றுச் சருக்கம், உருத்திராத்தியாய வியாக்கியானச்சருக்கம், உற்பத்திகாரணச்சருக்கம், கணபதி குமரன் தேவியைக்கண்ட சருக்கம், கணபதிமறுத்துரைத்தசருக்கம், கணபதியுடன் கடவுளுத்தரச்சருக்கம், கணபதி வந்தனைச்சருக்கம், கத்தரிப்பூவருச்சனைச்சருக்கம், காயத்திரி வரம்பெற்றசருக்கம், காலாக்கினிச்சருக்கம், கீர்த்திகேதுச் சருக்கம், கும்பமுனியுத்தரச் சருக்கம், கூர்மச்சருக்கம், சதாநந்தச்சருக்கம், சத்தியலோகச் சருக்கம், சத்தியவிரதர் உத்தரச்சருக்கம், சனகன் மனைவி சாரச்சருக்கம், சாம்பவவிரதச் சருக்கம், சாம்பவவிரதவுத்தியாபனச்சருக்கம் சாரணைசொற்பனபூசைச்சருக்கம், சித்திரகுத்தர்பிரலாபச்சருக்கம், சித்திரகேது நாட்டுச்சருக்கம், சித்திரகேது மகிமைச்சருக்கம், சிலாதரன் சமகவரங்கேட்டசருக்கம். சிவகணவுத்தரச்சருக்கம் சிவ டுண்டிவனபாலன் முத்திபெற்ற சருக்கம், சிவதன்மா தன்மச் சருக்கம், சிவபக்தர் மகிமைச் சருக்கம், சிவரகசியமான்மியச் சருக்கம், சிவரகசியவரலாற்றுச் சருக்கம், சிவனடியார் தரிசன மகிமைச்சருக்கம், சிவனுமமகிமைச்சருக்கம், சுகமுனிச்சருக்கம், சூரசேனச்சருக்கம், சேடன் வந்தசருக்கம், சைவர்பரிகலப் பிரசாதமகிமைச்சருக்கம், ஞானவாலனுற்பத்திச்சருக்கம், ஞானவாலன்கல்யாணச் சருக்கம், ஞானவாலன்கல்யாண நிராசைச்சருக்கம், ஞானவாலன் வயிராக்கியச்சருக்கம், தக்கன் மகமழித்த சருக்கம், தக்கன் வேள்விச்சருக்கம், தண்டிக்கணுதிபன் வந்தனைச்சருக்கம், தாருகன் கதையுரைத்தசருக்கம், தேவர்முறையிடுசருக்கம், தேவர் முனிவர் காட்சிச்சருக்கம், தேவி சிவனைப்பொருந்தின சருக்கம், தேவி நாட்டியம்பார்த்த சருக்கம், தேவிமேருகயிலையுற்றசருக்கம், தேவிமேருவரையைச் சார்ந்தசருக்கம், தேவி இமயம் விட்டெழுந்தருளிய சருக்கம், தேவியுடன் குமாரர்உத்தரச் சருக்கம், நதிகள் வரம்பெற்ற சருக்கம், நந்திகளங்களாலோசனைச்சருக்கம், நந்திகேசுரர்

தேவர்க்கருள்புரிசருக்கம், நந்திகேசுரர்நமனுக்குப் புத்திசொன்னசருக்கம், நாரதர் உபதேசச் சருக்கம், நைமிசாரணியச்சருக்கம், பசாசுமோசனச்சருக்கம், பலிபீடவன்னமகிமைச்சருக்கம், பத்மாவதிச்சருக்கம், பாக்கியதேவதைச்சருக்கம், பாவநாசச் சருக்கம், பாவருபமோசனச் சருக்கம், பாவஹரலிங்கச்சருக்கம், பிரபஞ்சவுற்பத்திச்சருக்கம், பிருங்கியுத்தரச்சருக்கம், புலோமைச்சருக்கம், பூசாயோக்கியவனச்சருக்கம், பெண் மணி சிவபூசைச்சருக்கம், பெண்மணி உபதேசம் பெற்றசருக்கம், பெண்மணிவயிராக்கியச் சருக்கம், மந்திரமூர்த்திகள் பூசைச் சருக்கம், மந்திரமூர்த்திச்சருக்கம், மறலியுத்தரச்சருக்கம், மன்மதவதைச்சருக்கம், மாரதன் பூசைச்சருக்கம், மானதபூசைச் சருக்கம், மதலிச்சைவநெறி விளக்கச்சருக்கம், மேருச்சருக்கம். வசிட்டர் உத்தரச்சருக்கம், வருணச்சருக்கம், வருணராசச் சருக்கம், வாரீசலோசனைச்சருக்கம், வானரங்கள் பூசைச்சருக்கம், விசுவாசிபூசைச்சருக்கம், விசுவாவசுச்சருக்கம் (1)விசுவாவசுச்சருக்கம் (2) விசையைசெயை உத்தரச்சருக்கம், விட்டுணுவந்தனைச்சருக்கம், விந்தமன்னவன் சருக்கம், வியாக்கிரச்சருக்கம், வில்வவனச்சருக்கம், வீரசித்துச்சருக்கம், வீரசித்துவிரத்தவயிராக்கியச் சருக்கம், வீரசித்து உற்பத்திச் சருக்கம், விரேசுரச்சருக்கம், வேதபாதச்சருக்கம்.

## சிகாளத்திப்புராணம்

புராணத்தின் சருக்கங்கள் — (௧) பாயிரம், விடசங்கமச்சருக்கம், தென்கைலாயச்சருக்கம், பொன்முகரிச்சருக்கம், நான்முகச் சருக்கம், சிகாளத்திச்சருக்கம், கண்ணப்பச்சருக்கம், நக்கீரச் சருக்கம், கன்னியர்ச்சருக்கம், சிலந்திமுதலமுற்கதைச் சருக்கம்.

## சிவகசிந்தாமணி

சிவகசிந்தாமணியின் இலம்பகங்கள் — (௧௩) நாமகளிலம்பகம், கோவிந்தையாரிலம்பகம், காந்தருவதத்தையாரிலம்பகம், குணமாலையாரிலம்பகம், பதுமையாரிலம்பகம், கேமசரியாரிலம்பகம், கனகமாலையாரிலம்பகம், விமலையாரிலம்பகம், சுரமஞ்சரியாரிலம்பகம், மண்மகளிலம்பகம், பூமகளிலம்பகம், இலக்கணையாரிலம்பகம், முத்தியிலம்பகம்.

## சூதசங்கிதை

### ௧. சிவமான்மியகாண்டம்

பாயிரம், புராணவரலாறு, உலகிற்குமுதல்வனை உணர்ந்தது, ஆநந்தநடந் தரிசித்தது, சிவபூசாவிதியும் செய்தோர்பெருமையும், பராபரைபூசாவிதியை உரைத்தது, அடியார்பூசாவிதியும் அவரைப்போற்றினோர் பேறுமுரைத்தது, விமலன்வாதராயணன் முதலோர் சங்கை தீர்த்தது, காலவளவையுரைத்தது, வராகம்பாதலத்தழுந்திய பாரையெடுத்தது, பிரமசிருட்டியுரைத்தது, இரணியகருப்பசிருட்டியுரைத்தது, சாதிவரலாறுரைத்தது, தீர்த்தமான்மியமுரைத்தது.

### ௨. ஞானயோக காண்டம்

ஞானயோகத்தை உணர்ந்தவாறுரைத்தது. வருணாச்சிரமநிலையோர்மேன்மையுரைத்தது, பிரம

சரிய விதியுரைத்தது, கிரகாச்சிரமவிதியுரைத்தது, வானப்பிரத்தவிதியுரைத்தது, சந்நியாச விதியுரைத்தது, கழுவாயுரைத்தது, தானபலமுரைத்தது, பாவக்கரும பலமுரைத்தது, தேகோற்பத்தியுரைத்தது, நாடிசக்கர நிலையுரைத்தது, நாடிசுத்தியை உரைத்தது, இயமமுறை உரைத்தது, நியமமுறையுரைத்தது, ஆசனவிதியுரைத்தது, பிராணயாமவிதியுரைத்தது, பிரத்தியாகாரவிதியுரைத்தது, தாரணை விதியுரைத்தது, தியானவிதியுரைத்தது, சமாதிவிதியுரைத்தது.

## ௩. முத்திகாண்டம்

சூதர்மேருவையடைந்தது, முத்திநிலையுரைத்தது, முத்தியுறுமுபாயமுரைத்தது, மோசகனை உரைத்தது, மோசகப்பிரதனதியல்புரைத்தது, ஞானோற்பத்தியில்லாமைக்கேது நவின்றது, ஞானிபணிவிடைப்பேறுசொன்னது, பிரமன் முன்னோர் தில்லையினேற்று ஞானம் பெற்றது, பரசிவனது தில்லை நடனங்காண்டற்குபாயம் வகுத்தது.

## ௪. எக்கியவைபவ காண்டம்

கடவுளரைத்துதித்தது, வேதார்த்தத்தையுரைத்தது, கருமயாகத்திற்காயிகமகமுரைத்தது, வாசகயாகமுரைத்தது, பிரணவத்தின் பெருமையுரைத்தது, காயத்திரிமந்திரமுரைத்தது, ஆன்மமந்திரமுரைத்தது, பஞ்சாக்கரமந்திரமுரைத்தது, மானதயாகமுரைத்தது, ஞானயாகவைபவமுரைத்தது, ஞானமுறுதற்கேதுவகுத்தது, பிரபஞ்சவாரோபமுரைத்தது, பராசத்திவிசாரம் உரைத்தது, பஞ்சப்பிரமவிசாரமுரைத்தது, சத்தாவிசாரமுரைத்து, மோக்கவிச்சையுடையாரிலக்குமியல்புரைத்தது, விராகவிசாரமுரைத்தது, அநித்தியவத்துவிசாரமுரைத்தது, நித்தியவத்துவிசாரமுரைத்தது, விசிட்டதருமவிசாரமுரைத்தது, இன்பமுத்திசாதனவிசாரமுரைத்தது, பிராமாணியவிசார முரைத்தது, பிரசாதக்கிரமமுரைத்தது, சிவப்பிரசாதத்தால் துர்க்கடன் முத்திபுகுந்தது, சிவப்பிரசாதத்தால் சத்தியசந்தன்முத்திசார்ந்தது, சிவபத்திவிசாரமுரைத்தது, பரசிவசொருபவிசாரமுரைத்தது, சிவலிங்கவிசாரமுரைத்தது, சிவத்தலவிசாரம் உரைத்தது, பற்பதாரணவைபவம் உரைத்தது, சிவப்பிரீதிகரமுரைத்தது, சிலமறையோர்க்குச் சிவபத்தியில்லாமைக்கேது உரைத்தது, பரசிவநாம வைபவம் உரைத்தது, குருவினிடத்து உபதேசங்கேட்குமுறை யுரைத்தது, குருபாரம்பரியமுரைத்தது, காளத்திமான்மியம் உரைத்தது, உயிர்கள் முத்திபுகுவதற்கேதுவுரைத்தது, சருவசாதனமும் விளங்கவுரைத்தது, வேதாவிநோதமுரைத்தது, சருவசித்திகரமுரைத்தது, பாதகவிசாரமுரைத்தது, கழுவாயுரைத்தது, சிவத்தலப்பெயரும் பரன்பரைபெயரும் உரைத்தது, திரவியசுத்தியுரைத்தது, உணத்தகாப்பொருளுரைத்தது, மரணக்குறியுரைத்தது, பாவபரிபாகமுரைத்தது.

## மேற்படிகாண்டத்தில்பிரமகீதை

தேவர் பிரமனையடைந்தது, ஐதரேயகவுபநிடததாற்பரிய முரைத்தது, தைத்திரீயகவுபநிடததாற்பரிய முரைத்தது,

## சூதசங்கிதை (தொடர்ச்சி)

சாம்சாகோபநிடத தாற்பரிய முரைத்தது, சாந்தோக்கிய உபநிடததாற்பரியம் உரைத்தது, சாந்தோக்யோபநிடதத்தமைந்ததாற்பரியம் பின்னு முரைத்தது, முண்டகோபநிடத தாற்பரியமுரைத்தது, கைவல்யோபநிடததாற்பரிய முரைத்தது, பிரகதாரணியகதாற்பரிய முரைத்தது, உடத்தப்பிராமாண தாற்பரியமுரைத்தது, கடவல்லியொடுசுவேதாச்சுவதா முரைத்தது, சருவவேதார்த்தசங்கிரக முரைத்தது.

## சூதகீதை

சூதர்சூத கீதையைச் சொல்ல வியாசரனுக்ஞை பெற்றது, பரமவிஞ்ஞானமுரைத்தது, வேதப்பிராமாணிய விசாரமுரைத்தது, விசேடசிருட்டியுரைத்தது, ஆன்மானுன்மவிவேக முரைத்தது, சருவசாத்திரசங்கிரகம் உரைத்தது, பலதேவர்களுந்தேகத்தில் இருக்கும்வகையை உரைத்தது, சருவவேதாந்த சங்கிரகம் உரைத்தது.

## சூளாமணி

சூளாமணியின் சருக்கங்கள்—(௧௨) நாட்டுச்சருக்கம், நகரச்சருக்கம், குமாரகாலச்சருக்கம், இரதநூபுரச்சருக்கம், மந்திரசாலைச்சருக்கம், தூதுவிடுசருக்கம், சீயவதைச்சருக்கம், கல்யாணச்சருக்கம், அரசியற்சருக்கம், சுயம்வரச்சருக்கம், துறவுச்சருக்கம், முத்திச்சருக்கம்.

## சேந்தன் திவாகரம்

சேந்தன் திவாகரத்தின் பிரிவுகள்-(௧௨)தெய்வப்பெயர்த்தொகுதி, மக்கட்பெயர்த்தொகுதி, விலங்கின் பெயர்த்தொகுதி, மரப்பெயர்த்தொகுதி, இடப்பெயர்த்தொகுதி, பல்பொருட்பெயர்த்தொகுதி, செயற்கைவடிவப் பெயர்த்தொகுதி, பண்புபற்றிய பெயர்த்தொகுதி, செயல்பற்றிய பெயர்த்தொகுதி, ஒலிபற்றிய பெயர்த்தொகுதி, பல்பொருட் பெயர்த்தொகுதி, பல்பொருட் கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

## சைவமஞ்சரி

சைவமஞ்சரியின் அதிகாரங்கள்—(௧௧)கடவுள்வாழ்த்து, பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம், சரியை, கிரியை, யோகம், ஞானம், சிவபாரம்யம், சிவபக்தி, திருநீறு, உருத்திராக்கம், பஞ்சாக்கரம், சிவநாமம், சிவவிரதம், சிவபுராணம், சிவத்துரோகம், சிவனடியார், ஒழிபு.

## ஞானவாசிட்டம்

### க. வைராக்கியப்பிரகரணம்

சுகர்கதை

### உ. முமுட்சுப் பிரகரணம்

### ௩. உற்பத்திப் பிரகரணம்

ஞானவின்மகன்கதை, லீலைகதை, கற்கடிகதை, அயிந்தவர்கதை, வஞ்சவிந்திரன்கதை, மனத்தின் கதை, பாலன்கதை, சித்தன்கதை.

### ௪. உற்பத்திப்பிரகரணம்

சுக்கிரன்கதை, தாமவியாளகம் கதை, வீமபாசதிடர்கதை, தாசூரன்கதை, கசன்கதை.

